# சங்க அகப்பாடல்களில் கருப்பொருள்கள்

(SANGA AGAPPADALKALIL KARUPORULKAL)

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் (பிஎச். டி.,)
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**இரா. செந்தில்** எம்.ஏ., எம்.ஃபில்.,

திருவளர்திரு காசிவாசி சுவாமிநாதசுவாமிகள் கலைக்கல்லூரி,

திருப்பனந்தாள் - 612 504

ஆய்வு நெறியாளர்

முனைவர் **நா. மாதவி** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,

இணைப்பேராசிரியர் தமிழ்த்துறை,

திருவளர்திரு காசிவாசி சுவாமிநாதசுவாமிகள் கலைக்கல்லூரி,

திருப்பனந்தாள் - 612 504






**தமிழ்த்துறை,**

திருவளர்திரு காசிவாசி சுவாமிநாதசுவாமிகள் கலைக்கல்லூரி,

திருப்பனந்தாள் - 612 504

**2007**

# நெறியாளர் சான்றிதழ்

முனைவர் . நா.மாதவி எம்.ஏ., எம்.ஃபில் .,பிச்.டி.,

இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை,

திருவளர் திரு காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் கலைக்கல்லூரி,

திருப்பனந்தாள் – 612 504.

நாள்: 3.3.2008

"சங்க அகப்பாடல்களில் கருப்பொருள்கள்" என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக செல்வன் இரா. செந்தில் என்பார் எனது மேற்பார்வையில் செய்யப்பட்ட இவ்ஆய்வேடு ஆய்வாளரின் சொந்த முயற்சியால் படைக்கப்பெற்றது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப்படவில்லை என்றும் சான்று அளிக்கின்றேன்.

3/3/08

துறைத்தலைவர்

**Dr.C.RAVI**, M.A.,M.Phil.,Ph.D.,
HOD OF TAMIL DEPT.,
S.K.S.S. ARTS COLLEGE,
TIRUPPANANDAL-612 504.

3.3.08

நெறியாளர்

முனைவர் நா. மாதவி,
எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர் தமிழ்த்துறை,
எஸ். கே. எஸ். எஸ். கலைக்கல்லூரி,
திருப்பனந்தாள் - 612 504.

முதல்வர்

PRINCIPAL
S.K.S.S. Arts College
Tiruppanandal - 612 504.

# ஆய்வாளர் உறுதிமொழி

இரா. செந்தில் நாள் : 3.3.2008

முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,

திருவளர் திரு காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் கலைக்கல்லூரி,

திருப்பனந்தாள் – 612 504

"சங்க அகப்பாடல்களில் கருப்பொருள்கள்" என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக ஸ்ரீ.கா.சு.சு.கலைக்கல்லூரி இணைப்பேராசிரியர் முனைவர் நா. மாதவி அவர்களின் மேற்பார்வையில் உருவான இவ்ஆய்வேடு என் சொந்த முயற்சியில் படைக்கப்பெற்றது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப்படவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

ஆய்வாளர்.

# நன்றியுரை

திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் இசைவுடன் சங்க அகப்பாடல்களில் கருப்பொருள்கள் என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதியளித்த திருப்பனந்தாள் காசித்திரு மடத்தின் அதிபரும் திரு–வளர்–திரு காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் கலைக்கல்லூரியின் புரவலருமான கயிலை மாமுனிவர் அவர்களின் பொன்னார் திருவடியினைப் போற்றி வணங்கி எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். கல்லூரியின் முதல்வர் முனைவர். ப. பாஸ்கரன் எம்.ஏ.,எம்.ஃபில்.,பிஎச்.டி., அவர்களுக்கும் மற்றும் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் சொ. இரவி எம்.ஏ.,எம்.ஃபில்., பிஎச்.டி., அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

ஆய்வேடு செம்மையுற அமைவதற்கு தம் நுண்மாண் நுழைபுலத்தால் வழிகாட்டிய ஆய்வு நெறியாளர் முனைவர் நா. மாதவி எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., அவர்களுக்கும் நன்றியுடையேன்.

முனைவர் பட்ட மூதறிஞர்குழு உறுப்பினராக ஆய்வுதொடரப் பரிந்துரைசெய்து, உறுதுணைபுரிந்த கல்லூரியின் இணைப்பேராசிரியர் முனைவர் வே. சீதாலெட்சுமி எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., அவர்களுக்கும் மற்றும் கல்லூரியின் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள், முனைவர் பட்ட, ஆய்வியல் நிறைஞர் பட்ட மாணவர்கள் அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்காகத் தகவல் திரட்டும் காலங்களில் பல்வேறு நூல்கள் கொடுத்துதவிய கல்லூரி நூலகர் திரு. ச. சம்பத்குமார் எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எல்.ஐ.எஸ்., அவர்களுக்கும் மாலை நேரக்கல்லூரி நூலகர், திரு. மூர்த்தி எம்.ஏ., பி.எல்.ஐ.எஸ்., அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் கல்விக்கும், ஆய்வுக்கும் அடித்தளமாக அமைந்த என் பெற்றோர் நா. இராஜாங்கம், இரா. தனலெட்சுமி அவர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

ஆய்வேடு செம்மையுற அமைவதற்கு அறிவுரையும் ஊக்கமும் வழங்கி செய்திகளைத் திரட்டுதற்கு உதவிபுரிந்த ச. அருள் எம்.ஏ., எம்.ஃபில்., அவர்களுக்கும் முனைவர் ந. கிருஷ்ணவேணி எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் நலனில் என்றும் அக்கறைகொண்டு ஆய்வேடு விரைவாக முடிக்க உறுதுணை புரிந்த சகோதரர்கள் இரா.மோகன் எம்.எஸ்ஸி., எம்.ஃபில்., இரா. ஜெமினி, இரா. மனோகரன், இர. ராகவன் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்ஆய்வினைச் சிறப்புறக் கணினியில் பதிவு செய்து அளித்த செல்வி. மு. சுகன்யா பி.லிட்., மற்றும் செல்வி. ஆனந்தி அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ | – | உரையாசிரியர் |
| கழக வெளியீடு | – | திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட். |
| சை.சி.நூ.கழகம் | – | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| தொல்.பொருள்.அகம் | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல் |
| தொல்.பொருள்.இளம் | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் |
| தொல்.பொருள்.செய்யுள் | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் |
| தொல்.பொருள்.புறம் | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணையியல் |
| தொல்.பொருள்.மெய். | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் மெய்ப்பாட்டியல் |
| நூ | – | நூற்பா |
| ப | – | பக்கம் |
| ப.ஆ | – | பதிப்பாசிரியர் |
| பக் | – | பக்கங்கள் |
| புறம் | – | புறநானூறு |
| மேலது | – | மேற்காட்டிய நூல் |
| P | – | Page |

# பொருளடக்கம்

# முன்னுரை

சங்க இலக்கியங்கள் பண்டையத் தமிழகத்தின் பண்பாட்டை இயம்புவனவாகும். இவ்விலக்கியங்கள் அகம், புறம் ஆகிய இரண்டையும் பாடுபொருளாக கொண்டு விளங்குகின்றன. அகத்திணை நெறியில் பயன்றுவரும் பொருள்களை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்று வரையறுத்துள்ளனர். முதற்பொருளிலிருந்து தோன்றுவது கருப்பொருள். அஃது இடத்திலும் காலத்திலும் தோன்றும். சங்க அகப்பாடல்களில் தெய்வம் உணவு, விலங்குகள், மரம், பறவைகள், பறை, செய்தொழில், யாழ் இன்னபிற கருப்பொருள்கள் பலவும் பயில்வதன் நோக்கினையும், போக்கினையும் இந்த ஆய்வேடு ஆராய்கிறது.

## ஆய்வு நோக்கம்

சங்க காலத்தில் நானில பகுப்பின் அடிப்படையில் இலக்கியங்கள் எழுந்தன காடும், மலையும், வயலும், கடலும், பண்டையத்தமிழ் மக்களின் வாழ்க்கை களன்களாகவும் வாழ்க்கை இயக்கும் ஆற்றல்களாகவும் அமைந்தன.

இம்மக்களுக்கு இயற்கைப் பாடுபொருளாயிற்று இவற்றிற்கும் மேலாக இயற்கை வாழ்க்கைக் குறிப்புணர்த்தும் குறியீடாய் உள்ளுறை இறைச்சிகளின் ஊடகமாய் அமைந்த பாங்கினை விளக்குவது இவ்ஆய்வேட்டின் நோக்கமாகிறது.

அகப்பாடல்களில் அமையும் திணைக்குக் கருப்பொருள் இன்றியமையாதது. பாடல்களின் அடியளவும் பாத்திரக்கூற்றும் கருப்பொருள் விளக்கத்தால் அமைவன.

கருப்பொருள் வாயிலாகப் பண்டையத் தமிழர் வாழ்வின் வெற்றியையும் இயற்கை நிகழ்வுகள் அவர்தம் வாழ்வில் பெற்றிருந்த இடத்தினையும் ஆராய்ந்து விளக்கும் வண்ணம் "சங்க அகப்பாடல்களில் கருப்பொருள்கள்" என்னும் தலைப்பு தேர்வு செய்யப்பட்டுள்ளது.

தமிழர் தம் வாழ்வியல் நெறி கருப்பொருள் வாயிலாக புலப்படக்கண்டு அந்நெறியைப் பேணிக்காக்கவும் சமுதாயத்திற்கு அறிமுகப்படுத்தும் நோக்குடனும் இவ்ஆய்வு அமைந்துள்ளது.

## ஆய்வு மூலங்கள்

அகப்பாடல்கள் ஆயிரத்து எண்ணூற்று ஐம்பது (1850) பாடல்களும் இந்த ஆய்விற்குரிய அடிப்படை மூலமாகவும், பல்வேறு உரை நூல்கள் ஆய்வின் துணை மூலங்களாகவும் அமைகின்றன. அகப்பாடலுக்கு ந.மு.வேங்கடசாமி நாட்டார், இராசகோபால் ஐயர் போன்றோரின் பழைய குறிப்புரைகளும் புலவர் அ. மாணிக்கனார் உரையும் இவ்ஆய்வேட்டிற்குத் துணைநின்ற மூலங்களாகும்.

இவற்றையன்றிப் பி.எல்.சாமி எழுதிய சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், புள்ளின விளக்கம், செடி கொடி விளக்கம் குறித்த நூல்கள் கருப்பொருள் பற்றிய பல்வகைத் தெளிவிற்கு இந்த ஆய்வேட்டிற்குப் பெரிதும் பயன் பெற்றன. மு. வரதராசனாரின் ‘பழந்தமிழ்’ இலக்கியத்தில் இயற்கை என்னும் நூலும், வ. சுப. மாணிக்கனாரின் ‘தமிழ்க்காதல்’ ந. சுப்புரெட்டியாரின் அகத்திணைக் கொள்கை போன்ற நூலும் இவ் ஆய்வேடு உருவாகப் பெரிதும் துணை நின்றன. தனிநாயக அடிகளாரின் சங்க இலக்கிய மரபு பற்றிய ஆங்கில நூலும், முத்துக் கண்ணப்பரின் சங்க இலக்கியத்தில் நெய்தல் திணையும் நா. செயராமனின் நெய்தல் பாடல்கள் திறனாய்வும் இவ் ஆய்வுக்குத் துணையாகப் பயன்பட்டுள்ளன.

அகராதிகள், ஆய்வேடுகள், தனிக்கட்டுரைகள் ஆகியன்வும் பயன்படுத்தப்பட்டு உள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

இந்த ஆய்வேடு அகப்பாடல்களில் அமைந்துள்ள கருப்பொருள்களைப் பயில்வதன் நோக்கினையும், போக்கினையும் ஆராயும் பகுப்பாய்வாகவும், விளக்கமுறை ஆய்வாகவும் திறனாய்வுக் கண்ணோட்டத்துடன் அமைந்துள்ளது.

## ஆய்வேட்டின் அமைப்பு

இவ்ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது.

1. சங்கப்பாக்களும் கருப்பொருள் அமைவும்
2. கருப்பொருள் உத்திகள்
3. அகப்பாடல்களில் கருப்பொருள்கள்
4. கூற்றுகளில் கருப்பொருள்கள்
5. கருப்பொருள் நிமித்தங்கள்

## இயல் விளக்கங்கள்

### இயல் – 1 : சங்கப் பாக்களும் கருப்பொருள் அமைவும்

தமிழர்களின் வாழ்வியலோடு இணைந்த முதல், கரு, உரிப்பொருள்களின் பாகுபாடும் அவற்றில் கருப்பொருள் சிறப்பும் விளக்கப்பட்டுள்ளது.

ஐந்திணைக்குரிய கருப்பொருள்களும் இக்கருப்பொருள்கள் உள்ளுறையாகவும், இறைச்சியாகவும் இடம் பெற்றுள்ளமையும் தொல்காப்பியர் குறிப்பிடும் எண் வகைக் கருப்பொருள்களும் உரைக்கப் பெறுகின்றன.

## இயல் – 2 : கருப்பொருள் உத்திகள்

சங்க கால அகப்பாடல்களில் முதற்பொருள் அடிப்படையில் கருப்பொருள் பின்னணியில் உரிப்பொருளின் பாடற்பொருண்மை விளக்கப்பட்டுள்ளது. மானிட வாழ்க்கையின் குறியீடுகளாக சங்க புலவர் இயற்கையைப் பாடியமை சுட்டப்பட்டுள்ளது.

திணை தெய்வங்களைப் பற்றியும் அவற்றை மக்கள் வழிபட்ட முறையும் பாடல்கள் வழி எடுத்துரைக்கப்பட்டுள்ளன. கருப்பொருள்களான மா, மரம், புள் ஆகியவை மனித வாழ்க்கையுடன் தொடர்புபடுத்திக் கூறப்பெற்றுள்ளன. பருவ சூழலுக்கும் நிலத்தியல்பிற்கும் ஏற்ப தொழில் முறைகள் அமைந்தமை உரைக்கப்பட்டுள்ளன.

## இயல் – 3 : அகப்பாடல்களில் கருப்பொருள்கள்

அகப்பாடல்களில் கருப்பொருள் வருணனை விலங்கு, பறவை, மரம் என்பவற்றால் ஆராயப்பெற்றுள்ளது. கருப்பொருள் பயன்பெறும் பாங்கினையும் எடுத்துரைக்கப்பெறும் வகையினையும் இவ்வியல் விளக்குகிறது.

## இயல் – 4 : கூற்றுகளில் கருப்பொருள்கள்

அகத்திணைப்பாடல்கள் ஆசிரியப்பாவால் பாத்திரக்கூற்று முறையில் அமைந்து முன்னிலை மொழி, முன்னிலை புறமொழி, முன்னிலை தனிமொழி எனும் வகையில் அமைந்துள்ள நிலை ஆராயப் பெற்றுள்ளது. தலைவன், தலைவி, தோழி, செவிலி, பாணன், கண்டோர் ஆகியோர் கூற்றுக்கள் இடம்பெற்றமை விளக்கப்பெற்றுள்ளன.

## இயல் – 5 : கருப்பொருள் நிமித்தங்கள்

பழந்தமிழரது நம்பிக்கைகளுள் ஒன்று நிமித்தம் பார்த்தலாகும். பறவை, விலங்கு, மரம், மலர், மாந்தர், தெய்வம் தொடர்பான கருப்பொருள் நிமித்தங்கள் ஆராயப் பெற்றுள்ளன. வெறியாடல், கூடலிழைத்தல், கட்டு கழங்கு பார்த்தல் மாந்தர் தொடர்பான நிமித்தங்களும் கூறப்பெற்றுள்ளன.

ஒவ்வொரு இயலின் முடிவிலும் ஆய்வு முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. அவற்றுள் இன்றியமையாதன முடிவுரையில் தரப்பட்டுள்ளன. ஆய்வுக்கு துணைநின்ற நூல்கள் துணைநூற்பட்டியலாக இடம்பெற்று ஆய்வேடு நிறைவுபெறுகிறது.

## இயல் –1

# சங்கப்பாக்களும் கருப்பொருள் அமைவும்

சங்ககாலம் பொற்காலம் என்று போற்றப்படுமளவிற்கு அக்காலத்தில் தமிழ் இலக்கியங்கள் தோன்றின. இவ்விலக்கியங்கள் தான் தோன்றிய காலத்தின் அக, புற நிகழ்வுகளை எடுத்துரைக்கின்றன. அகநூல்கள் முதல், கரு, உரிப்பொருள்களைக் கொண்டு விளங்குவன. இவற்றுள் நடுவணதாகிய கருப்பொருள் காலந்தோறும் வளர்ந்து வந்துள்ளது. அவ்வகையில் கருப்பொருள்களைப் பெற்றுத் திகழும் சங்கப் பாக்களையும், கருப்பொருள்களின் அமைவினையும் ஆய்வதாக இவ்வியல் விளங்குகிறது.

### சங்க இலக்கியம்

தமிழ் மொழியில் காலத்தால் மூத்த இலக்கியங்களாக கிடைத்திருப்பவை பாட்டும், தொகையும் ஆகும். இதனைச் சங்க இலக்கியங்கள் என்று அழைப்பர். இஃது அகத்திணை இலக்கியம், புறத்திணை இலக்கியம் என இருவகைப்படும். இப்பகுப்புகள் வாழ்வு நெறிகளை நயம்படவும், நாகரீகமாகவும் சொல்லுதற்குப் பயன்பட்டன. அகம் காதலையும், புறம் வீரம், அன்பு, இரக்கம், கொடை, மானம் போன்றவற்றையும் எடுத்துரைக்கிறது. மனித வாழ்வுக்கு அகம், புறம் இரண்டும் தேவையாகும். எனவே தான் சங்கப்புலவர்கள் இவ்விரு நோக்கிலும் பாடல் பாடியுள்ளனர். அகம் தனிமனித இன்பத்தையும், புறம் சமூக நெறியையும் காட்டிச் செல்கின்றன.

### அகத்திணை இலக்கியம்

சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகை நூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஐந்தும் அகத்திணை இலக்கியங்களாகும்.

பத்துப்பாட்டுள் முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, நெடுநல்வாடை எனும் நான்கும் அகத்திணையைச் சார்ந்தவை.

சங்கப்பாடல்கள் 2381 ஆகும். இவற்றுள் 102 பாடல்களை இயற்றிய புலவர்களின் பெயர்கள் கிடைக்கவில்லை. மற்ற பாடல்கள் 473 புலவர் பெருமக்களுடைய எழுத்தோவியங்கள் ஆகும்.[1] இப்பாடல்கள் "நாலடி செய்யுளில் இருந்து நாட்டு வாழ்க்கையைச் சித்தரிக்கும் செய்யுள் வரை சுமார் 800 அடிகள் வரை உள்ளடக்கியுள்ளன" என்று சுவலபில் குறிப்பிடுகிறார்"[2]

இஃது தமிழுக்கு உரிய சிறப்பாகும். மேலும் "காதல் வாழ்வை இப்படித்தான் பாட வேண்டும் என்ற நோக்கத்துடன் மக்கட்கு ஆண், பெண் உறவுக் கல்வியையும் குடும்பக் கல்வியையும் கற்பிப்பதற்கென்று கண்ட தூய இலக்கியமாக அகத்திணை உள்ளன என்பார் வ. சுப மாணிக்கம்"[3]

## சங்கப்பாடல்களின் சிறப்பு

புறப்பொருள் பற்றிய இலக்கியங்கள் பண்டைத் தமிழர்தம் புறவாழ்வைத் தெளிவாகத் துலக்குகின்றன.

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்"[4]

எனக் கொண்டவர்களின் வாழ்வைப் புலப்படுத்துவன ஆதலின் சங்கப் புற இலக்கியங்கள் அரசர், குறுநில மன்னர் போன்ற வலிமையுடையோரையும், ஏனை எளியோரையும் அவரோடு தொடர்புடைய பிறரையுமே காட்டி விளக்கிச் செல்கின்றன. ஆனால் புறத்திற் காணப்படும் இதனை நாம் அக இலக்கியங்களுள் காண இயலவில்லை. அங்குக் கூறப்படும் ஒழுக்கம் முழுதும் மன்னர் முதலியோருக்குரியன என்று

கூறுதற்குக்குச் சிறிதும் வாய்ப்பில்லாதபடி பொதுமக்களின் அக ஒழுக்கத்தையே அவை முற்றிலும் எடுத்துக்காட்டி விளக்கிச் செல்கின்றன. புறத்தே காணப்படும் வேறுபாடு அக உணர்வில் இல்லாமை இதற்குக் காரணமாகும். ஆயினும் அடியோர் வினைவலர், முதலியோர் பண்பாடு சிறக்கப் பெறாமையால் இவ்வொழுக்க நெறிக்கு ஏற்புடையராம் மதுகை இல்லாதவராதலின் அவரது அக ஒழுக்கம் சிறிது வழுவியும் செல்லுதலை நாம் மறுத்தற்கியலாது.

## அகத்தின் மிகுதி

சங்க இலக்கியங்களிலேயே அகப்பொருள் பற்றியவை மிகுதியாக விளங்குகின்றன. புற ஒழுக்கத்திலும் ஒழுக்கமே ஒரு சமூகத்தைச் செம்மைப்படுத்தி உயர்த்த இன்றியமையாதது என்பதால் அதனையே பண்டையப் புலவர்கள் மிகுதியாகப் பாடினார். மக்களைக் கவர்வதில் அகச் செய்திகட்குத் தனி ஆற்றல் உண்டு என்பதோடு அவை சுட்டி ஒருவர் பெயர் குறிக்கப்படாமல் பொதுவாக ஒழுக்கக் கூறுகளை மட்டும் விளக்கிச் செல்வதால் காய்தல் உவத்தல் அகற்றி அவை மக்களால் நன்கு போற்றப்பட்டன என்பதும் அதற்குக் காரணமாகும்.

## முப்பொருள் பாகுபாடு

மனித வாழ்விற்கு நிலமும் பொழுதும் இன்றியமையாதன. அந்நிலமும் பொழுதும் சார்ந்து தோன்றும் பொருள்கள் யாவும் அவர்தம் வாழ்வுக்கு உறுதுணையாகின்றன. இந்நெறியிலேயே மக்கள் பண்பாகிய கருத்துப் பொருளும் வளர்கிறது . இந்நெறி உலக மக்கள் அனைவருக்கும் பொதுவானது . இதனை வகைப்படுத்தி இலக்கணம் அமைத்த பெருமை தமிழ் மொழிக்கு உண்டு. உலகியல் வழக்கும், இலக்கணச் செம்மையும், இலக்கியப்பழமையும் ஒரு சேரப்பெற்று விளங்குவது தமிழ் மொழியாகும்.

இவ்வுலகிலுள்ள காட்சிப்பொருள், கருத்துப்பொருள் ஆகியவற்றை நன்கு ஆராய்ந்து அவற்றை முதல், கரு, உரி என மூவகைப்படுத்தி மக்கள் வாழ்வு நெறிமுறைகளை வகுத்துரைப்பது பொருளிலக்கணம் ஆகும். தமிழ்மொழியின் தொன்மை சான்ற இலக்கண நூல் தொல்காப்பியம். இந்நூல் தமிழ்மொழியின் இலக்கண அமைப்பினையும் தமிழர் வாழ்வியல் நெறியினையும் ஒருங்குணர்த்தும் திட்பநுட்பம் வாய்ந்தது. பழமைச் சிறப்புடனும், புதுமைப் பொலிவுடனும் கொண்டுவிளக்குவது இந்நூலின் சிறப்பாகும்.

முப்பொருள்களின் பாகுபாட்டைத் தொல்காப்பியர்,

"முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுள் பயின்றவை நாடுங் காலை"[5]

என்றுரைக்கிறார்.

இவை செய்யுளில் பயின்று வருங்கால் ஒன்று ஒன்றனிற் சிறந்து வருதலுடையது. இதற்கு "முதலில் கருவும், கருவில் உரிப்பொருளும் சிறந்து வரும் என்பர் நச்சினார்க்கினியர்.[5]

தொல்காப்பியர் படைத்த எழுத்து, சொல், பொருள் இலக்கணத்துள் பொருளிலக்கணமே சிறந்தது.

எழுத்தையும் சொல்லையும் பயன்படுத்தும் மனிதனுடைய வாழ்க்கையை, வாழ்க்கையின் இலக்கணத்தை உணர்த்தும் இலக்கண நூல் உலகத்து வேறெந்த மொழியிலும் இல்லை. மனிதனுடைய வாழ்க்கையை உணர்த்தும் இலக்கணமாகத் தொல்காப்பியத்தின் பொருளதிகாரம் விளங்குகின்றது[6] என்ற கூற்று ஈண்டு கருதத்தக்கது.

## திணை

திணை என்ற சொல்லுக்கு ஆரம்ப காலத்தில் 'குழு', 'குடும்பம்' என்று பொருள் உண்டு என்பது கார்த்திகேசு சிவத்தம்பியின் கருத்தாகும்.[7] பெயர்ச்சொல்லின் பிரிவுகளைச் சுட்டிக்காட்டத் திணை என்ற சொல்லைப் பயன்படுத்தினர். இச்சொல் 'பிரிவு' அல்லது 'குழு' என்ற பொருளையுடையது. சங்க இலக்கியத்தில் 'குடி' என்ற சொல் 'குடும்பம்' அல்லது குடியிருப்பு என்ற பொருளிலேயே பொதுவாகக் கையாளப்படுகின்றது. எனவே ஆதியில் குடியிருப்பதைக் குறித்த இந்த சொல் பிற்காலத்தில் பொருள் மாறுதலடைந்து குடியிருப்பிலுள்ள மக்களின் ஒழுக்க வடிவங்களைச் சுட்டுவதாக மாறியிருப்பதும் சாத்தியமாகும். திணை என்ற சொல்லுக்குச் சூடாமணி நிகண்டு 'ஒழுக்கம்' என்று பொருள் தருவதனை,

"திணை நிலங்குல மொழுக்கம்"[8]

எனும் நூற்பா காட்டும்.

## திணைப்பகுப்பு

திணை என்ற சொல் ஒழுக்கம் என்று பொருள்படும். இதற்கு இளம்பூரணர் "திணையாவது கைக்கிளை முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை என்பன"[9] எனவிளக்கம் தருவர். அகம், புறம் ஆகிய இரண்டும் உரிப்பொருள் எனக்கூறும் இளம்பூரணர் அகத்திணைகளின் மாட்டேறாக வருவனவே புறம் எனக் கூறுகிறார். 'அகப்பொருளாவது போக நுகர்ச்சி' என்றும் புறப்பொருளாவது மறஞ்செய்தலும், அறஞ்செய்தலும்' என்று அவர் பொருளுரைப்பர்[10] அகம் என்பதற்கு "ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம். அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவர்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்தது என

கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருள் ஆதலின் அதனை அகம் என்றனர். எனவே அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகம் என்பது ஓர் ஆகுபெயராம் என்று விளக்கம் கூறி இதனை ஒழிந்தன புறம் என்று கூறுகின்றார்."[11] இவ்விரு உரையாசிரியர்களின் விளக்கங்களின் மூலம் தத்தமக்குப் புலனாவதும், பிறர்க்குக் கூறாது தாமே உணர்ந்து மகிழ்வதும் அகம் என்பதும், பிறர்க்குப் புலனாவதும், பிறர்க்குக் கூறப்படுவதும், பிறருடன் பகிர்ந்து மகிழ்வதும் புறம் என்பதும் புலனாகின்றன.

அகம், புறம் ஆகிய இரண்டனுள் அகமே தலைமை சான்றது. அகத்திணையியலில் "கைக்கிளை முதலாப் பெருந்திணை ஈறாக"[12] உள்ள அகத்திணைகளை முற்கூறிய தொல்காப்பியர் அவற்றிற்குப் புறமான புறத்திணைகளைப் பின்னர்ப் புறத்திணையியலில் கூறியுள்ளார். செய்யுளியலில் 'திணை' என்பதற்கு விளக்கம் கூறும் தொல்காப்பியர் கைக்கிளை முதலா ஏழ் பெருந்திணையும் என்று அகத்திணை ஏழினையே காட்டுகிறார்.[13] பெருந்திணை என அவற்றை அடைமொழி கொடுத்துச் சிறப்பித்துள்ளமையால் அகப்பொருளுக்கு அவர் வழங்கிய தலைமை அறியப்படுகின்றது. இளம்பூரணர் 'ஏழ்பெருந்திணை' எனக் குறிப்பதனுள் புறத்திணைகளும் அடங்கும் என்பர்.[14] பேராசிரியர் 'முறைநெறி வகையான்' என்ற விதப்பக்கிளவி புறத்திணைகளையும் சுட்டும் என்று உரைப்பர்.[15] இவ்விளக்கங்கள் யாவும் 'அகம்' என்பதன் முதன்மையைப் புலப்படுத்துகின்றன. அகத்திணைகளுக்கும் புறத்திணைகளுக்கும் உள்ள தொடர்பினை,

"வெட்சி தானே குறிஞ்சியது புறனே"[16]
"வஞ்சி தானே முல்லையது புறனே"[17]
"உழிஞை தானே மருதத்துப் புறனே"[18]
"தும்பை தானே நெய்தலது புறனே"[19]
"வாகை தானே பாலையது புறனே"[20]

"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே"[21]

"பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே"[22]

என்ற நூற்பாக்கள் உணர்த்துகின்றன. இவ்வாறு அகப்பொருளின் ஏழு திணைகளுக்கு ஈடாக புறப்பொருளில் ஏழு திணைகளைத் தொல்காப்பியம் வரையறுக்கின்றது. இவ்வாறு பகுக்கப்பெற்ற திணைப்பகுப்புகள் மக்களின் அகவாழ்வு புறவாழ்வு இவற்றின் விளக்கங்களாக அமைந்துள்ளன. அகவாழ்வின் வளர்ச்சி நிலையே புறவாழ்வாகும். அகமும் புறமும் தொடர்பு பெற்ற நிலையினை இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

## அகத்திணைப்பாகுபாடு

அகத்திணையைத் தொல்காப்பியர் கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என்ற ஏழு திணைகளாகப் பகுத்துள்ளார். இவற்றுள் குறிஞ்சி முதல் பாலை ஈறாகவுள்ள ஐந்திணைகளும் ஐந்திணை என்று ஒரு தொகுதியாக வழங்கப்பெறும். கைக்கிளையை ஒரு தலைக்காமம் என்றும், ஐந்திணையை ஒத்த காமம் என்றும் பெருந்திணையை ஒவ்வாக்காமம் என்றும் உரையாசிரியர்கள் கூறுவர்.[23] இங்ஙனம் இப்பிரிவுகட்குக் காமத்தன்மையை அடிப்படையாகக் கொள்ளின் ஐந்திணையை ஒரே பிரிவாகக் கொண்டு அகத்திணைப்பிரிவுகள் மூன்றெனல் பொருந்துமேயன்றி ஏழெனக் கூறுதல் பொருந்தாது என்பார் ந. சுப்புரெட்டியார்.[24] நிலத்தால் ஐந்தாயினும் ஒத்த தன்மையால் மூன்றெனும் கூற்று ஒப்புடையதாக விளங்குகிறது.

அகவாழ்வு, புறவாழ்வு இவற்றின் வாழ்வியல் நிகழ்ச்சிகளும், வையத்துப் பொருள்களும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்றனுள் அடங்கும்

எனத் தொல்காப்பியம் கூறுகிறது.[25] அவற்றுள் முதற்பொருள் நிலம், பொழுது ஆகியவற்றின் இயல்பாகும் என்பதனை,

"முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே"[26]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

தொல்காப்பியர் மக்கள் உயிர் வாழ்வுக்கு அடிப்படையாயமைந்தன நிலமும் காலமும் ஆதலின் அவை முதற்பொருள் எனப்பட்டன. புல் முதல் மக்கள் ஈறாகிய உயிர்ப் பொருட்களும், உயிரற்ற பொருட்களும் நிலமும், காலமும் ஆகிய முதற்பொருளின் சார்பாகக் கருக்கொண்டு தோன்றுவனவாதலின் அவற்றின் ஒழுகலாறுகளை உரிப்பொருள் என்றனர்.

## முதற்பொருள்

பருப்பொருளாகிய நிலமும், கருத்துப் பொருளாகிய காலமும் முதற்பொருள் எனத் தொல்காப்பியம் இயம்புகின்றது. இதனால் இப்பகுப்பு முறை தொல்காப்பியத்திற்கு முன்னரே இருந்தது என்பதை அறிய முடிகின்றது. உலகியலுக்கு உறுதுணையாகும் நிலமும் காலமுமே பிற எல்லாப் பொருள்களுக்கும் அடிப்படையாய் அமைகின்ற இக்காரணத்தாலேயே நிலமும் , பொழுதும் முதற்பொருள் எனப் பெறுகின்றன.

## நிலப்பகுப்பு

எழுதிணைகளுள் தமக்கென நிலம் உரியுடையவை நான்கு. அவை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பனவாகும் இந்நிலப்பகுப்பினைத் தொல்காப்பியர்,

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"[27]

என்றுரைக்கிறார். நான்கு திணைகளுக்கும் நிலம் பகுத்துச் சொன்னவர் பாலைத்திணைக்கு மட்டும் தனிநிலம் வகுக்கவில்லை "தொல்காப்பியனார் காலத்துப் பாலையென்னுஞ்சொல் பிரிவொழுக்கமாகிய திணையைக் குறித்து வழங்கியதேயன்றி நிலத்தைக் குறித்து வழங்கவில்லை. அவர் காலத்துக் காடுறையுலகமும், மைவரை உலகமும் தீம்புனலுகமும், பெருமணலுலகமும் என இவ்வுலகத்தை நான்கு நிலமாகப் பிரிந்துரைக்கும் வழக்கமே நிலவியது"[28] என்னும் கருத்து ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

## நானில வழக்கு

பண்டைத் தமிழர் இயற்கையாய் அமைந்த நிலத்தை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என வகுத்துக் கண்டனர். நான்கு நிலங்களை உடையது என்பதால் உலகிற்கு நானிலம் என்ற பெயர் வழங்கப்பெற்றது.

"நடுவெண் ஐந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே"[29]

என்ற நூற்பா தமிழகம் கடலால் சூழப்பட்டது என்பதையும் அது நிலப்பகுப்பில் நான்கு வகையானது என்பதையும் எடுத்துரைக்கின்றது. முல்லை, குறிஞ்சி, நெய்தல், பாலை, மருதம் ஆகிய ஐந்தனுள் பாலைத்திணை நடுவண் உள்ளது. இத்திணையைத் தொல்காப்பியர்,

"நடுவண் ஐந்திணை"[30]

என்றும்,

"நடுவுநிலைத் திணை"[31]

என்றும் உரைப்பர்.

பாலைத்திணை ஏனைய திணைகளைப்போல ஒருபாற்படாது நால்வகை நிலத்திற்கும் உரியவாகப் புலனெறி வழக்கஞ் செய்து வருதல் பற்றிப் பாலைக்கு நடுவணதென்னும் பெயர் ஆட்சியுங், குணனுங் காரணமாகப் பெயர் பெற்றது"[32] என்று விளக்கம் கூறுவர் நச்சினார்க்கினியர். "நான்கு நிலனும் ஆகாது அவற்றுள் வேறும் ஆகாது நடுவண் இருப்பதால் அது நடுவணது எனப்பட்டது"[33] என்னும் விளக்கம் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

நானில வழக்கு பண்டுத்தொட்டே நிலவியதைச் சிறுபாணாற்றுப்படை,

"பாடல் சான்ற நெய்தல் நெடுவழி"[34]

"முல்லை சான்ற முல்லையம் புறவு"[35]

"மருதம் சான்ற மருதத் தண்பணை"[36]

"குறிஞ்சிக் கோமான் கொய்தளிர்க் கண்ணி"[37]

என்னும் தொடர்களில் வெளிக்காட்டி நிற்கின்றது.

புறநூலான புறநானூற்றில் ஔவையார் இந்நானில வழக்கினை,

"நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவ ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே"[38]

என்னும் பாடலில் குறிப்பிட்டுள்ளார். நாடு – மருதம், காடு – முல்லை, அவல் (பள்ளம்) – நெய்தல், மிசை (மேடு) – குறிஞ்சி ஆகியன நானிலப் பகுப்புகளாகும்.

## பாலைக்கு நிலமின்மை

"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"[39]

என்று பாலைக்குத் திணையும் காலமும் வகுத்த தொல்காப்பியர் பாலைக்கு நிலம் வகுக்கவில்லை இதன் காரணம் பாலைக்கு இயல்பான நிலம் இல்லை. மழையின்றி வெம்மையினால் திரியும் நிலப்பகுதியே பாலையாகும். ஐந்திணைகளின் பெயர் நில அடிப்படையில் அமைந்தவையல்ல. ஒழுக்கத்தின் அடிப்படையில் அமைந்தவை. பால் என்னும் சொல் பிரிவு எனப் பொருள்படும். எனவே பிரிவொழுக்கத்தை உணர்த்தும் திணை 'பாலை' எனப்பெயர் பெற்றது.

இப்பாலை நிலத்தை வேனிலின் வெப்பத்தை ஏற்று நானிலங்களும் பாலையாயினமைக்குத்

"தயங்கு திரைப் பெருங்கடல் உலகுதொழத் தோன்றி
வயங்கு கதிர் விரிந்த உருகெழு மண்டிலம்
கயம்கண் வறப்பப் பாஅய் நல் நிலம்
பயங்கெடத் திருகிய பைது அதுகாலை
வேறுபல் உவலைய வெருவரு வியன்காட்டு"[40]

என்னும் அகநானூற்றுப்பாடலைச் சான்றாகக் கொள்ளலாம்.

இந்நிலத்தை நம்பியகப்பொருள்,

"குறிஞ்சி பாலை முல்லை மருதம்
நெய்தல் ஐந்திணைக்கு எய்திய பெயரே"[41]

என்றும் பழம் மரபினை நினைவூட்டுவதோடு அவற்றின் நிலப்பாங்கையும் விளக்கியுள்ளது. மேலும்,

"வரையே சுரமே புறவே பழனந்

திரையே யவையவை சேர்தரு மிடனே"[42]

என்று பாலையைச் சுரமும், சுரம் சார்ந்த இடமும் என்றே சுட்டுகிறது. மற்றைய நிலம் போலவே இதையும் மதித்துள்ளமை தெரிகிறது. இம்மரபு நிலை தொல்காப்பியர் மரபிலிருந்து வேறுபட்டு இருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

சங்க இலக்கியங்களைப் பார்க்கும் பொழுது பாலை என்பது குறிஞ்சி, முல்லை நிலங்களில் காலவேறுபாட்டால் (மழையின்மையால் வெயிலின் கொடுமையால்) திரிந்த நிலமே பாலைத்திணைக்குரியது என்பதும், அது தனிநிலமன்று குறிஞ்சி, முல்லை நிலங்களின் திரிபு நிலமே என்பதும் புலப்படும் எனவேதான் தொல்காப்பியரும் இவ்வாறு கூறியுள்ளார். நச்சினார்க்கினியரும் இருநிலத்திரிபு என்ற போக்கிலேயே இச்சூத்திரத்திற்கு உரை காண்கிறார்.[43]

தொல்காப்பியர் காலத்தில் பாலை என்பது

1. இயல்பான தனிநிலம் என்ற ஒரு கோட்பாடும்.
2. இயல்பு நிலம் திரிந்து அமைந்த பெருவழி என்ற மற்றொரு கோட்பாடும் நிலவி இருக்க வேண்டும். இதில் திரிபுநிலப் பெருவழி என்ற கோட்பாட்டையே தொல்காப்பியர் மேற்கொண்டுள்ளார்.

நம்பி அகப்பொருள் ஆசிரியரோ மற்றொரு கோட்பாட்டைப் பின்பற்றி பாலையும் மற்ற நிலம் போல் மதிக்கத்தக்க தனித்திணை நிலமே என்ற போக்கில் திணை வகுத்துள்ளார்.

இப்பாலைத்திணையைக் காப்பிய நூலான சிலப்பதிகாரமும் குறிப்பிடுகிறது.

"வேனிலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்

தானலந் திருகத் தன்மையிற் குன்றி

முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து

நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்

பாலை யென்பதோர் படிவங்

கொள்ளும் காலை யெய்தினிர்"[44]

என்னும் பாடல் தொடரில் பாலைநிலம் ஒரு இயற்கை நிலப்பாங்கு என்றும், அது ஒரு திரிபு நிலப்பெருவழி என்னும் கோட்பாட்டை முன்வைத்து இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார்.

## சங்க இலக்கியச் சான்றுகள்

சங்க இலக்கியங்களில் பாலைத்திணைப்பாடல்களை அதிகம் பாடியவர் பாலை பாடிய பெருங்கடுங்கோ ஆவர். இவர் பாடிய அகப்பாடல்கள் 67 இவற்றுள் களவில் வருவன7, கற்பொழுக்கில் வருவன67, என்பர் ந.சுப்புரெட்டியார்.[45]இவரையடுத்து பாலைப்பாடுவதில் சிறந்தவர் கயமானாராவர். இவர் அகநானூற்றில் 12பாடல்களும், குறுந்தொகையில் 4 பாடல்களும், நற்றிணையில் 6பாடல்களும், புறநானூற்றில் 1பாடலுமாக சங்க இலக்கியத்தில் 23பாடல்களைப் பாடியுள்ளார் என்பர் மொ.அ.துரை அரங்கசாமி[46] இவ்விரு புலவர்களும், சில பல பாக்கள் பாடிய பிற புலவர்களும் பாலைத்திணையை முல்லை அல்லது குறிஞ்சிநிலம் திரிந்த நிலத்துப் பெருநெறியில் திகழும் பிரிவொழுக்கமாகவே பாடியுள்ளனர்.[47]

ஐங்குறுநூற்றுப் புலவரில் பாலைத்திணையைப் பாடிய ஓதலாந்தையார் மட்டும் பாலைத் திணையைப் "பெரு நெறிப்பிரிவு ஒழுக்கம்" என்ற கோட்பாட்டின்படி பாடியதோடு மற்ற நான்கு திணைகள் போல் அதனைப் "பாலை நிலத்திணை ஒழுக்கம்" என்ற கோட்பாட்டின் வழியும் பாடியுள்ளார்.[48]

"தமிழ் நாட்டில் நிலத்தாற் பாலை இலதேனும், காலத்தாற் பாலையுண்டு நிலையான சுரம் இன்றேனும், வந்து போகும் சுரம் உன்டு. கோடையென்னும் காலப்பாலை குறிஞ்சி முல்லைப் பகுதிகளை ஒரிரு திங்கள் நீரற்ற களமாக வெப்பம் வீசும் சுரமாக யாதும்

தோன்றாப் பாலை நிலமாக கடுங்கதிர் ஞாயிற்றின் விருந்திலாக மாற்றி விடுகின்றது. இஃது உண்மைப் பாலையன்று, பாலைப் போலி — கோடை நீங்கிக் கார் பொழியுங் காலை இச்செயற்கைப் பாலை ஒழிந்துபோம். மீண்டும் குறிஞ்சி முல்லைத் திணைகள் பல திங்கள் நீர் பெற்று நிலம் தழைத்துப் பயிர்களை ஈனும் இரண்டு திங்கள் பாலையேயாயினும் இது விளைவிக்கும் வெம்மைக்கு அளவின்று"[49] என்று வ. சுப. மாணிக்கம் குறிப்பிடுவர்.

"வேனில் நின்ற வெம்பத வழிநாள்
காலை ஞாயிற்றுக் கதிர்கடா வுறுப்பப்
பாலை நின்ற பாலை"[50]

என்னும், பாலைத்திணைப் பற்றிய சிறுபாணாற்றுப்படை அடிகளுக்கு உரை காணும் நச்சினார்க்கினியர், இளவேனில் நிலைபெற்ற காலத்திற்கும் பின்னாகிய நாளிலே வெம்மையைச் செலுத்தலைச் செய்கையினாலே வெய்ய செவ்வியையுடைய பாலைத்தன்மை நிலை பெற்றமையாற் பிறந்த பாலை நிலமாகிய தொலையாத வழியினையுடைய சுரன் என்க"[51] என்றும் பாலைத் தன்மையாவது "காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமை கூரச்சோலைத் தேம்பிக் கூவல் மாறி நீரும் நிழலுமின்றி நிலம் பயந்துறந்து புள்ளும் மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெருகுவதொரு காலம்"[52] என்றும்,

"நிலம் பெறாத பாலைக்கும் அக்காலமே முதலாக
அக்காலத்து நிகழுங் கருப்பொருளும் கொள்க"[53]

என்றும்,

"அவ்வந்நிலத்தின் தெய்வங்களே பாலைக்குந் தெய்வமாயிற்று"[54]

என்றும்,

நச்சினார்க்கினியார் கூற்றுப்படி முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற நான்கு நிலங்களும் திரிந்து பாலையாகும் எனவும், இவ்வந்நிலத்துத் தெய்வமே பாலைக்குத் தெய்வமாம் எனவும் கொள்ளுதல் பொருத்தமே என்பார் மொ. அ. துரை அரங்கசாமி.[55]

"பாலை, குறிஞ்சி வறட்சியையும் முல்லை வறட்சியையும் தழுவியே தோன்றுவது தனக்கென நிலமற்றது"[56] என்பார் க. ப. அறவாணன்.

"தமிழ்கூறு நல்லுலகத்தினையும் அதன் ஒழுகலாற்றையுமே சொல்லுவதாக வரம்பு கொண்டமையின், தொல்காப்பியர் தமிழக எல்லைக்குட்பட்ட நிலப்பாங்கினையும் பருவப் பாங்கினையுமே குறிப்பாராயினர். நம் எல்லைக்குள் முதுவேனில்தோன்றுதலின், பாலைக்குப் பெரும்பொழுது வரைந்தார்கரப் பகுதி இன்மையின் நிலம் என்ற ஒன்று வரையாதமைந்தார்"[57] என்பார். வ. சுப. மாணிக்கம்.

காட்டில் முல்லையும், மலையிற் குறிஞ்சியும், வயலருகே மருதமும், கடலருகே நெய்லும் பெருக வளர்தல் பற்றி அந்நிலங்களை முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், எனப் பூக்களாற் பெயரிட்டு வழங்கினர். பாலை என்பதற்கு நிலமில்லையாயினும் வேனிலாகிய காலம் பற்றி வருதலின் அக்காலத்துத்தளிரும், சினையும் வாடாமல் நிற்கும் பாலை என்னும் பெயருடைய மரம் உண்டாதலின் அச்சிறப்பு நோக்கிப் பாலை என்று பெயரிட்டனர்.

தமிழ்நாட்டில் பாலை என்ற ஒரு தனி நிலப்பகுதி இல்லை. ஆதலால் அது ஒரு நிலமாகக் கருதப்படவில்லை. பெரும்பான்மையும் வேனிலின் வெம்மையால் முல்லையும், குறிஞ்சியும் திரிந்த நிலமே பாலையாகும். நான்கு நிலங்களும் மழையின்மையாலும், சூரிய வெப்பத்தாலும் வறட்சியுற்ற காலத்தில் பாலையாகும். எனவே காலத்தால் பாலையுண்டதே தவிர நிலத்தால் பாலை இல்லை என்பவை மேற்கண்ட விளக்கங்களின் மூலம் அறியலாம்.

## பொழுது

நிலத்திற்குரிய பொழுதுகள் பெரும் பொழுது, சிறுபொழுது என இருவகைப்படும் ஒரு ஆண்டினுடைய கூறுபாடு பெரும்பொழுது என்றும், ஒரு நாளினுடைய கூறுபாடு சிறுபொழுது என்றும் வரையறுத்துள்ளார். இதனை,

"காரும் மாலையும் முல்லை;
குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார் புலவர்
பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப
வைகறை விடியல் மருதம்;
எற்பாடு நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்
நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே
பின்பனி தானும் உரித்தென மொழிப"[58]

என்னும் நூற்பா மெய்ப்பிக்கும். இதில் கார், கூதிர், பனி எதிர் பருவம், வேனில், பின்பனி ஆகிய பெரும்பொழுதுகளே இடம் பெற்றுள்ளன. இவற்றிற்குரிய மாதக் கணக்கீடுகளைத் தொல்காப்பியர் கூறவில்லை. பெரும்பொழுது ஆறு. அவை கார்காலம், கூதிர் காலம், முன்பனிக்காலம், பின்பனிக்காலம், இளவேனிற்காலம், முதுவேனிற்காலம் ஆகியன என்றும், அவற்றிற்குரிய மாதக் கணக்கீடுகளையும் உரையாசிரியர்கள் விரித்துரைக்கின்றனர். மாலை, யாமம், வைகறை, விடியல், எற்பாடு, நண்பகல் என்ற சிறு பொழுதுகளைத் தொல்காப்பியர் குறித்துள்ளார்.

## கருப்பொருள்

கருப்பொருள் என்பது ஒவ்வொரு நிலத்திலும் கால் கொள்ளும் பொருள்; கருக்கொள்ளும் பொருள்கள்; நிலத்துடன் தொடர்புடைய பொருள் இவை காலந்தோறும் வளர்ச்சி பெறும் இயல்பு கொண்டவை.

இக்கருப்பொருளை, இளம்பூரணர் "இடத்தினும் காலத்தினும் தோன்றும் பொருள். அது தேவர், மக்கள், விலங்கு முதலாயினவும், உணவு, செயல் முதலாயினவும் இன்னவாள பிறவும் ஆகிப் பலவகைப்படும் "[59] என விளக்கியுள்ளார்.

முப்பொருளில் கருப்பொருள் நிலத்தின் அடிப்படையிலும் காலத்தின் அடிப்படையிலும் தோன்றுவது. நிலம் பொழுது சார்பாகப் பிறப்பது. கருப்பொருள் சார்பாக மனித உணர்வுகள் தோன்றுகின்றன. கருப்பொருள் தான் தோன்றுவதற்கு முதலாகிய நிலம், பொழுதைச் சார்ந்திருப்பது போலச் சிங்க நோக்காகத் தன்னோடு தொடர்புடைய மனித வாழ்க்கைக்கும் தொடர்புடையதாக விளங்குகின்றது.

முதற்பொருளைச் சார்ந்து வருதலானும் உரிப்பொருளுக்குக் காரணமாய் இருத்தலானும் கருப்பொருள் நடுவில் இடம் பெற்றது.

## உரிப்பொருள்

உரிப்பொருள் என்பது மக்களுக்கே உரித்தானப் பொருள் என்பர். ஐந்நில மக்களின் சிறப்பான பண்பினைக் குறிப்பது உரிப்பொருளின் பணியாகும். மக்கள் வாழ்க்கையின் ஒழுக்கநெறி உரிப்பொருளுடன் தொடர்புடையது. அகத்திணைப் பாடலின் உயிர்நாடியாக அமைவது உரிப்பொருள். உரிப்பொருள் என்பது இன்றியமையாப் பாடற்பொருள் அகத்திணைப் பாடல்களில் உரிப்பொருள் சிறந்துவிளங்க முதற்பொருளும் கருப்பொருளும் பின்னணியாக அமைகின்றன. அகப்பொருள் நிகழ்ச்சிகட்கு முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய முப்பொருள்களும் உறுப்புகளாக அமைகின்றன.

## கருப்பொருள் வகைகள்

உலகம் என்பது மண் முதலியவற்றின் திரண்டதொரு பொழுதுகளும் கதிரவன் முதலாகிய கோள்களின் ஒளியும் நாண் மீன்களின் பார்வையும் இடந்தோறும் வேறுபடுதலின் அவ்வச்சூழ்நிலை அமைவிற்கேற்ப ஓரறிவுயிர் முதலாக ஐயறிவுயிர் ஈறாகத் தோன்றும். அஃறிணையாய கருப்பொருள்களும் ஆறறிவுயிராகிய மக்கள் என்னும் உயர்திணையாய கருப்பொருளும் இயற்கைச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப வேறுபடும். அவ்வாறே

நீர்நிலைகளும் காடும், மலையும் காற்றும் வெப்பதட்பங்களும் வேறுபடும். நீர்வாழ் உயிர்களும் நீர்ப்படு பொருள்களும் அந்நிலையினவேயாகும்.

மனித உணர்வுகள் உலகத்திற்குப் பொதுவாயினும் மேற்கூறிய கருப்பொருள் முதற்பொருள்களின் சூழலுக்கு ஏற்ப மக்களின் அகப்புற உணர்வுகள் மாறுபடும்.

ஐவகை நிலங்களில் தோன்றும் மா, மரம், புள், நீர், ஊர், நீர் வாழ் உயிர்கள் உணவுப்பொருள்கள் முதலாகிய கருப்பொருள்களுள் அவ்வந்நிலத்திற்கே சிறப்பாக உரியனவும் கலந்து வருவனவுமாக அமைவதைக் காணலாம். அவ்வாறே கருப்பொருளுள் ஒரே பிரிவான மக்களும் அவர் மேற்கொள்ளும் தொழிலும், ஒழுக்கமும், யாழ், பறை, இசை, தெய்வக்கொள்கைகளும் வேறுபடும் என்பதைத் தமிழ் நூலார் நுணுகி நோக்கிச் சிறப்பான வேறுபாடுகள் இன்ன இன்னவை என இலக்கிய நோக்கிற் கூறி இலக்கண விதிகளை வகுத்துள்ளனர்.[61]

## கருப்பொருள் வகை

உலகில் கருக்கொண்டு தோன்றும் பொருள் கருப்பொருள். அவை வரம்பின்றிப் பெருகும் என்பதை உணர்ந்த தொல்காப்பியர் தெய்வம், உணா, மா, மரம், புள், பறை, செய்தி, யாழின்பகுதி என எட்டு வகையாகப் பகுத்துக் கூறியுள்ளார். இக்கருப்பொருள் பகுப்பு முடிந்த முடிபன்று. காலந்தோறும் வளர்ந்து வரும் என்பதனை உணர்ந்தே ‘அவ்வகை பிறவும் கருவென மொழிப’ எனப்பின்னர்த் தோன்றுபவைகளுக்கும் கருப்பொருளில் இடம் தந்துள்ளார். இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் ஒவ்வொரு நிலத்திற்குரிய கருப் பொருள்களைக் குறிப்பிடுகையில் பூ, நீர், ஊர் முதலானவற்றையும் சுட்டியுள்ளார். இக் கருப்பொருள்கள் அனைத்தும் முதற்பொருளின் அடிப்படையில் தோன்றி வளர்பவை. இவை அன்றாட மனித வாழ்வில் தொடர்பு பெற்று இன்றும் வாழ்கின்றன.

**தெய்வம்**

மக்கள் வாழும் நிலத்தியல்பிற்கேற்ப அவர் தம் மனத்தியல்பாகிய தெய்வ கொள்கையும், வழிபாட்டு முறைகளும் தோன்றி நிலைபெறுவனவாதலின் தெய்வக் கொள்கையினையும் கருப்பொருள்களுள் ஒன்றாகவே பண்டைத்தமிழர் வகுத்தனர்.

"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகை
அவ்வகைப் பிறவும் கருவென மொழிப"[62]

என வரும் நூற்பாவினால் தெய்வக் கொள்கையினைக் கருப்பொருள்களுள் முதலாவதாக வைத்தெண்ணிய தம் முன்னோர் கொள்கையினை ஆசிரியர் தொல்காப்பியனார் அறிவுறுத்துவார். முல்லை நிலத்தில் மாயோன் (திருமால்) வழிபாடும், குறிஞ்சி நிலத்தில் சேயோன் (முருகன்) வழிபாடும், மருத நிலத்தில் வேந்தன் (இந்திரன்) தெய்வமாகக் கருதி வழிபாடும் நெய்தல் நிலத்தில் வருணன் (மழைக்கடவுள்) வழிபாடும் தோன்றி நிலைபெற்றன. இதனால் மனிதன் கடவுளுக்குப் பயந்தும், விரும்பியும் வாழ்ந்தமை உணர முடிகிறது. ஆதலால் தொல்காப்பியர் தெய்வத்தை முதலாவதாக வைத்து எண்ணினார் எனல் பொருந்தும்.

"தெய்வம் அஞ்சல் புரையறம் தெளிதல்"[63]

என்ற தொல்காப்பியரின் தொடர் மனிதன் தெய்வத்திற்கு அஞ்சி வாழ்தலே தெளிவான அறம் பேணத்தக்க நெறி என்னும் கருத்தினை வெளிக்காட்டுகிறது. தொல்காப்பியர் கருப்பொருள் கூறுமிடத்து கூற வேண்டிய தெய்வங்களை நிலமாகிய முதற்பொருளோடு சார்த்திக் கூறியுள்ளார். இக்கூற்று இந்நிலங்களுக்கு அத்தெய்வங்களே உரிமையுடையன என்பதனையும், அந்நிலங்களில் வாழும் மக்கள் அத்தெய்வங்களை வழிபடுதலே தொன்று தொட்ட வழக்கம் என்பதையும் புலப்படுத்துகின்றன.

பண்டைத்தமிழர் இயற்கையோடியைந்து வாழ்ந்தனர். இயற்கையைத் தெய்வமாக வணங்கினர். தெய்வமும் திணைக்கருப்பொருளாக எண்ணப்பட்டது. மக்கள் மலைமீது வாழ்ந்த போது அவர் உள்ளத்தைக் காலையிலும் மாலையிலும் ஞாயிற்றின் செம்மையும் வானத்தில் படரும் செம்மையும் பிற செம்மைகளும் கவர்ந்தன. அச்செவ்விய இயற்கை அழகை அவர் சேய் என்று போற்றினர். அம்மக்கள் தங்கள் கண்ணுக்குப் பச்சைப் பசேலெனக் காட்சிவழங்கிய காட்டின் இயற்கையழகை மால் என்று வாழ்த்தினர்.அவர் மருத நிலத்தில் குடிபுகுந்த போது அங்கே பெரிதும் தம் இனமாகிய மக்கள் கூட்டத்துடன் நெருங்கிப்பழக நேர்ந்தமையான் மக்கள் மாட்டொளிரும் இறைமை என்னும் இயற்கை அழகைக் கண்டு அதை வேந்து என்று கொண்டனர். அவர் கடற்கரை நண்ணிய போது கடலின் இயற்கையழகை வண்ணம் என்றனர். பழந்தமிழ் மக்கள் அவ்வந்நில இயற்கை அழகுக்கிட்ட பெயர்கள் சேய், மால், வேந்து, வண்ணம், என்பன.

இவ்வியற்கை அழகுப் பெயர்கள் தொல்காப்பியர் காலத்திலேயே அன் விகுதி பெறலாயின பின்னை நாளடைவில் இப்பெயர்கள் பிரிவுபட்ட கடவுளராகச் சமயவாதிகளால் கொள்ளப்பட்டன. பழந்தமிழ் மக்கள் கண்ட கடவுள் இயற்கை அழகு என்பதை மட்டும் நாம் மறக்கலாகாது [64] என்னும் கூற்றும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

தொல்காப்பியர் வாழ்க்கை சிறக்க – வளம் பெருக – இன்பம் மிக, மக்களுடைய இடச்சூழல், விளைபொருள், பழக்கவழக்கங்கள் என்பவற்றால் கடவுள் நிலையைக் காட்டுகிறார். உலகப் பொருள்களை முதல் – கரு – உரி என மூன்றாகப் பகுத்து, கடவுள் உண்மையையும் இயல்பையும் கருப்பொருளில் ஒன்றாக வைத்து உணர்த்துகிறார்.

எங்கும் பசுமையாகக் கரும்பச்சையாக மக்கள் மனத்தைக் கவர்ந்து விளங்குவது காடும் காடு சார்ந்த இடமும், அதன் நிறமும், காடு முழுவதும் பரவிக் காணுகிற மக்கள் உள்ளத்திலும் பரவி நீக்கமற நிறைந்திருந்தது. அதனால் கரியோனாகிய மாயோனைக் காட்டின் தெய்வமாகக் குறித்தனர்.[65]

"இத்தெய்வங்கள் நிலத்திற்கேற்ற படைப்புகளே அவ்வந்நிலப் பொருள்கள் தோற்றிய உருவங்களே என்று அறிய வேண்டும்.[66] என்னும் கருத்து இங்கு கருதத்தக்கது.

மக்கள் வாழ்வில் பயன்படுத்தும் பொருள்களே கருப்பொருள்கள் வரிசையில் இடம்பெற்றுள்ளன. பண்டையோர் தெய்வத்தையும் தாம் துய்க்கும் பொருளாகவே கருதியிருக்கலாம். உயர்வு கருதி தெய்வம் கருப்பொருள் பகுப்பில் முதலிடம் பெற்றது.

தெய்வம் முதலாக நின்று நிலத்து உணவு முதலாய ஏனைய கருப்பொருள்களை ஆக்குவதற்கும், இயக்குவதற்கும் காரணமாக அமைவதால் கருப்பொருள் வரிசையில் முதன்மை பெற்றுள்ளது. நெய்தல் நிலப்பரதவர் வலை வளம் தப்பினால் சுறவுக்கோடு நட்டுப்பராவுக் கடன் இயற்றுவர்.[67] என்பது இக்கருத்தினை உறுதிப்படுத்துகிறது.

தெய்வத்தை அடுத்து உயிர் வாழ்வுக்குத் தேவையான உணவு, அங்குக் காணப்பெறும் விலங்கு, மரம், பறவை ஆகியன இடம்பெற்றுள்ளன.

மாந்தர் தம் கலையுணர்வை வெளிப்படுத்த பயன்படுத்தும் கருவி பறை இக்கருவி சங்க காலத்தில் செய்தி அறிவிக்கவும் பயன்பட்டது.

ஒவ்வொரு நிலத்திலும் ஒவ்வொரு வகைப்பறை வழங்கி வந்தது. அப்பறை கருப்பொருளில் சிறப்பிடம் பெறுகிறது. தோற்கருவி, நரம்பு கருவியாகிய யாழும், யாழுடன் தொடர்பு கொண்ட இசை வகைகளும் கருப்பொருளில் அடங்கும். இவை கலையார்வத்தின் காரணமாகத் தோன்றுபவை.

தொல்காப்பியர் "யாழின் பகுதி" என்று குறிப்பிடுவதை இளம்பூரணர் "பண்" என்று பொருள் கொள்கின்றார். நச்சினார்க்கினியர் "யாழ்" என்றே பொருள் கொள்கின்றார்.

தொழில் என்பதைச் "செய்தி" எனத் தொல்காப்பியம் குறிக்கிறது "செய்" என்ற பகுதியும் "தி" என்ற விகுதியும் சேர்ந்த இச்சொல் செய்தலால் ஏற்படும் விளைவுகளை உள்ளடக்கியுள்ளது. இவ்வாறு கூறப்பெறும் கருப்பொருள்கள் காலந்தோறும் வாழ்ந்தும் வீழ்ந்தும் வளர்ந்தும் மண்ணோடியைந்து வளர்வனவாகும்.

## திணை நிலைப்பெயர்

திணைதோறும் மருவி வழங்கும் பெயர்கள் திணை நிலைப்பெயர்கள் என வழங்கப் பெறும் இப்பெயர்கள் பெயராலும், தொழிலாலும் இருவகைப்படும் என்பர் தொல்காப்பியர். கருப்பொருளின் பாகுபாடாகிய மக்கட்புறம் உணர்த்துதல் நுதலிற்று என்பர் இளம்பூரணர். மக்கள் இடம் பெயர்ந்து வாழும் திறன் பெற்றவர். சூழ்நிலைக்கேற்பத் தகவமைத்துக் கொள்பவர். எனவே தொல்காப்பியர் கருப்பொருள் பகுப்பில் மக்களைச் சேர்க்காது தனியே விதந்தோதினார் எனக் கருத முடிகிறது.

ஆயர், வேட்டுவர், அவர்வயின் வரும் கிழவர் முல்லைத் திணைப்பெயர் என்றும் அவ்வாறே பிற திணைகளுக்கும் கொள்க எனத் தொல்காப்பியர் குறிப்பது மேற்கூறிய கருத்தை அரண் செய்கிறது.

## கருப்பொருளும் முதற்பொருளும்

தமிழ்நிலத்தினை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்று முறைப்படுத்தியுள்ளார் தொல்காப்பியர். காடுறை உலகம் என்னாது உலகம் என்றதனால் ஐவகைப் பூதத்தானும் ஐந்து இடம் என்பதை உய்த்துணர வைத்தார் எனக் குறிப்பிடுவர்[68] நிலம், தீ, நீர், வளி, விசும்போடு ஐந்தும் கலந்த மயக்கம் உலகம்[69] என்ற தொல்காப்பியரின் மரபியல் கருத்தைக் கொண்டே இளம்பூரணர் இதனைக் குறிப்பிடுகிறார். இவ்வாறு நிலப்பகுப்புப் பெற்றவை அறுவகைப் பருவம், அறுவகைப்பொழுது ஆகிய காலத்தையும் பெற்றுள்ள பாங்கினைத் தொல்காப்பியர் பகுத்துக் காட்டியுள்ளார் "காரும், மாலையும் முல்லைக்கும், கூதிர், யாமம்

முன்பனி குறிஞ்சிக்கும், வைகறை, விடியல் மருதத்துக்கும், ஏற்பாடு நெய்தலுக்கும் எனக் கூறுகிறார்.

நடுவுநிலைத் திணையாகிய பாலைக்கு வேனிலும், பின்பனி, நண்பகலும் எனக் கூறுகிறார்.[70] இவ்வாறு கூறப்பெறும் முதற்பொருள் பகுப்புகள் கருப்பொருளோடு தொடர்புள்ள பாங்கினை உரையாசிரியர் இளம்பூரணர் தெளிவுப்படுத்துகிறார்.

"முல்லையாகிய நிலனும் வேனிற்காலத்து வெப்பம் உழந்து மரனும், புதலும், கொடியும் கவினழிந்து கிடந்தன. புயல்கள் முழங்கக் கவின்பெறும் ஆதலின் அதற்கு அது சிறந்ததாம் மாலைப்பொழுது இந்நிலத்திற்கு இன்றியமையாத முல்லை மலரும் காலம் ஆதலானும் ஆண்டுத் தனித்திருப்பார்க்கும் இவை கண்டுழி வருத்தம் மிகுதலின் அதுவும் சிறந்தாயிற்று" என ஒவ்வொரு நிலத்திற்கும் கூறுவது கருதத்தக்கது.

ஒவ்வொரு திணைக்கும் உரிய கருப்பொருள் தொகுப்பினைத் தொல்காப்பியத்தின் அடிப்படையில் பகுத்துக் காண்போம்.

## முல்லை

காடுறை உலகமாம் முல்லைக்குக் கார்காலமும், முல்லையும் பொழுதாம். இம்முதற் பொருள் அடிப்படையில் வரகும் முதிரையும் உணவாகும். மானும் முயலும் விலங்காகும். கொன்றையும் குருந்தும் மரமாகும். கானங்கோழி புள்ளாகும். நிறைமேய்த்தல் தொழிலாகும். இவ்வாறு கூறப்பெறும் கருப்பொருள்கள் மக்கள் வாழ்க்கையுடன் தொடர்பு கொண்டு கலந்து இலக்கியத்திலும் இடம் பெற்றுள்ளன.

## குறிஞ்சி

மலையும் மலை சார்ந்த இடமுமாகிய குறிஞ்சிக்கு ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை ஆகிய திங்களுடன் யாமமாகிய நள்ளிருள் காலமும் உரித்தாகும். தினை, ஐவனம், மூங்கில் நெல் இவை உணவாகும். யானை, புலி, பன்றி, கரடி முதலிய விலங்குகள் வாழும். வேங்கை

கோங்கு போன்ற மரங்கள் உண்டு, மயில், கிளி ஆகிய பறவைகள் இருக்கும். வெறியாட்டுப் பறை, தொண்டகப் பறை ஆகியவற்றைப் பயன்படுத்துவர். தேனழித்தல் முதலான தொழில்களில் ஈடுபடுவர். இவர்கட்குரிய பண் குறிஞ்சிப்பண், வேங்கை, காந்தள், குறிஞ்சி ஆகிய பூக்களும், சுனைநீரும், அருவி நீரும் உண்டு இவர்கட்குத் தெய்மாகிய முருகன் குறிஞ்சி நிலத்தலைவனாதல் வேண்டும்.

### பாலை

தொல்காப்பியர் பாலைக்கு நிலம் குறிக்கவில்லை எனினும் வேனிற்காலத்தையும், நண்பகலையும், பாலைக்குரிய காலமாகக் குறித்தலால் குறிஞ்சி முல்லை ஆகிய நிலங்களில் வேனிற்காலத்து நிகழ்வன கருப்பொருளாகக் கொள்ளப்படும்[71] என்பர் இளம்பூரணர். எனவே பாலைத்திணை ஒழுக்கத்தின் அடிப்படையில்அமைந்த திணையாகக் கொள்ளவும் இடம் தருகிறது. ஆறலைப்போர் இங்குண்டு. ஆறலைத்தல் இவர்களது தொழில். வாழ்வின் பெரும் பகுதி ஆறலைத்தலால் நிகழ்வது. வெப்பத்தின் மிகுதியால் வலியிழந்த யானை, புலி, செந்நாய் போன்ற விலங்குகள் காணப்பெறும். பாலை, இலுப்பை, கள்ளி, சூரை போன்ற மரங்கள் உண்டு. எருவையும் பருந்தும் பறவை வகைகளாம். ஆறலைப்பறை, சூறை கோட்பறை இவர்களது பறையாகும். பாலைப்பண் இவர்தம் பண்ணாகும். பாலைக்குரிய தெய்வமாகக் கொற்றவை என்ற பெண்ணையே தலைமையாக வணங்கியுள்ளனர்.

### மருதம்

நீர்வளம் நிறைந்த இடமும், வைகறையும் விடியலும் மருதத்தின் முதற்பொருளாகும். வளம் வாய்ந்த மருதத்தில் உணவானது நெல், எருமையும், நீர் நாயும், விலங்குகள், மருதும் காஞ்சியும் மரங்கள், அன்னமும் அன்றிலும் பறவைகள் நெல்லரிபறை மருதத்துக்குரிய பறையாகும். உழவுத்தொழில் உற்ற தொழில் அவர் மருதப்பண் இசைப்பர். தாமரைப்பூ,

கழுநீர்ப்பூ இவைகள் உண்டு ஆற்றுநீர், பொய்கை நீர் பெற்றது இந்நிலம். இத்தகு மருத்தததின் தெய்வம் வேந்தன் எனக் குறிக்கப்பெறுபவன். வேந்தனை இந்திரன் என உரையாசிரியர்கள் குறிக்கின்றனர்.

## நெய்தல்

பெருமணல் உலகம் எனக் குறிக்கப்பெறும் நெய்தல், பகற்பொழுதின் பிற்கூறாகிய எற்பாடு காலம் பெற்றது. கடலும் கடல் சார்ந்ததும் ஆகிய இடத்தை அது குறிக்கும். மீன் இவர்களது உணவு, கராவும் சுறவும் விலங்குகள். புன்னையும் கைதையும் மரங்கள். கடற்காக்கை நெய்தலுக்குரிய பறவை. இவர் நாவாய்ப்பறையை ஒலிப்பர். மீன் பிடித்தல், உப்பு விளைத்தல் இவர்தம் தொழில், செவ்வழிப்பண் இவர்களுக்குரியது. நெய்தல் நிலத்தெய்வமாக வருணன் குறிக்கப்பெறுகிறான். கடலையும் காற்றையும் நம்பி வாழ்பவர் நெய்தல் நிலத்தவர். இரண்டையும் தனது ஆற்றலால் கட்டுப்படுத்தி வாழ்வு நடத்திய தலைவன் வருணனாதல் வேண்டும். அவனே இந்நிலத்துக்குரிய தெய்வமாக மதிக்கப் பெற்றிருக்க வேண்டும்.

## திணை மயக்கம்

ஐந்நிலத்திற்கும் உரியனவாகக் கூறும் கருப்பொருள் பெரும்பான்மை பற்றிக் கொள்ளப்பெறுவதாகும். குறிஞ்சி நிலப்பறவை முல்லை நிலத்திலும் இருக்கலாம். முல்லை நில மரத்தை மருதத்தில் கூடக் காண இயலும். இவ்வாறு காணுதல் அருகி வருவனவேயன்றிப் பெரும்பான்மை பற்றியதன்று. உலகியலை நோக்கி இலக்கண ஆசிரியர்கள் இவ்வாறு வருவனவற்றைத் திணைமயக்கத்தின் பாற்படுத்துவர்.

நெல் மருதநிலத்துக்குரியதாய் இருப்பினும் கொல்லிமலை போன்ற குறிஞ்சி நிலப் பகுதியிலும் அதை ஒட்டிய முல்லை நிலப் பகுதியிலும் காணலாம். கருப்பொருள் கலப்பு எனும் திணைமயக்கத்தைத் தம்நுண்ணறிவால் தொல்காப்பியர் இலக்கணப்படுத்தியுள்ளார்.

"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த ஆகும்"[72]

என்னும் நூற்பா மேற்கூறிய கருத்தை மெய்பிக்கிறது.

ஐந்திணைகளும் முதல், கருப்பொருள்களில் மயங்கி வரும் ஆனால் ஒரு பாடலில் இரண்டு உரிப்பொருள் மயங்கி வருதல் இல்லை. இதனை, 'உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே' என்று கூறுவர் தொல்காப்பியர். இக்கருத்து முரண்படுவது போல தோன்றுகிறது. ஆனால் மயங்குதல் கலத்தல் என்றால் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்கள் கலத்தல் வேண்டும் எனவே ஒன்றுக்கு மேற்பட்ட உரிப்பொருள் ஒரே பாட்டில் வருவதில்லை என்ற கருத்தில் தான் இந்நூற்பா செய்யப்பட்டிருக்க வேண்டும். இதுவே பாடல் நெறிக்கும் பகுத்தறிவுக்கும் உகந்ததாக உள்ளது. நெய்தல் தலைவிக்கு ஊடலோ கூடலோ இல்லை எனல் பொருத்தமில் கூற்றாகும்.

## கருப்பொருள் இடம்பெறும் பாங்கு

உலகியலில் முதற்பொருளின் அடிப்படையில் கருப்பொருளே எல்லா நிலைகளிலும் இடம் பெற்றுள்ளன. கருப்பொருளே இலக்கியத் தூண்டலுக்கும் அடிப்படையாக அமைவது. எனவே கவிஞர் தம் பாடல்களில் பெரிதும் இடம் பெற்றுச் சிறப்பிக்கப் பெறுவன கருப்பொருள்களேயாகும்.

பலபாடல்களில் கருப்பொருள் வெளிப்படையாக இடம்பெற்றிருக்கும் பாடலைப்படித்த உடனே கருப்பொருள்களைக் கொண்டு இத்திணைக்குரியது எனப் பகுத்துணர இயலும்.

## உள்ளுறை

சங்காலப்புலவர்கள் தொடங்கி தற்கால புதுக்கவிதையாளர்கள் வரை கையாளும் உத்திகளுள் சிறந்தவை உள்ளுறையும், இறைச்சியும் ஆகும்.

உவமை வகையில் உள்ளுறையும் ஒன்றாகும். உள்ளுறை என்பது உள்ளுறுத்தப்பட்ட கருப்பொருளை உள்ளுறுத்தக் கருதிய பொருளுடன் உள்ளுறுத்துக் கூறுல்[73] என்பர் தொல்காப்பியர். ஏனை உவமம் வினை, பயன், மெய், உரு என்ற நான்கின் அடிப்படையில் எழ, உள்ளுறையோ பொருளுவமையால் கொள்ளப்பெறும் என்பது இளம்பூரணர் விளக்கம்[74] இவ்வாறு இடம்பெறும் உள்ளுறைதெய்வம் நீங்கிய ஏனைய கருப்பொருள்களை இடமாகக்கொள்ளும் என இலக்கணம் அறிந்தோர் குறிப்பிடுவர்[75] எனத் தொல்காப்பியர் குறிக்கிறார். இவ்வாறு பொருள் கொள்ளும் முறையைத் தொல்காப்பியருக்கு முன்பே இலக்கண நூலார் வகுத்துள்ளனர் என்பது இதன்வழி புலனாகிறது.

கருப்பொருளில் முதலிடம் பெறும் தெய்வத்தின் இயல்பினை உவமையாக எடுத்துரைப்பின் மக்களால் வழிபடப்பெறும் தெய்வத்தின் சீர்மை குறைவுறும் எனக்கருதிக் தெய்வத்தை விலக்கி இருக்கலாம். இக்கருத்தால் இலக்கண ஆசிரியரின் நுண்ணறிவு ஈண்டு பாராட்டதக்கதாம்.

## இறைச்சி

இறைச்சி என்னும் சொல்லே "கருப்பொருள்" என்னும் பொருளுடையது. இதிலிருந்து இறைச்சி என்னும் குறிப்புப் பொருள் உத்தி கருப்பொருளை நிலைக்களமாகக் கொண்டு இயல்வது என்பதை உய்த்துணரலாம்.

"இறைச்சிதானே உரிப்புறத் ததுவே"[76]

இந்நூற்பா மூலம் இறைச்சி என்பது முதல் பொருளை அடியொட்டியும், கருப்பொருளை அடியொட்டியும் வரும் என்கிறார். உள்ளுறை கருப்பொருளில் தெய்வத்தை நீக்கி வரும் என்பதால் இறைச்சி என்பது முதல் பொருளிலும், கருப்பொருளில் தெய்வத்தைக் கொண்டு வரும் எனக் கொள்வதற்கு இடமுண்டு "அஃதாவது கருப்பொருளாகிய நாட்டிற்கும்

ஊர்க்கும் துறைக்கும் அடையாகி வருவது'[77] என்று இறைச்சிக்கு விளக்கம் தருவர் இளம்பூரணர்.

கருப்பொருள்களுள் தலைவன் அன்பு செய்வதற்குத் தகுவனவற்றை வற்புறுத்திக் கூறுதலும் உண்டு[78] என்று கருப்பொருள் இறைச்சியாக இடம்பெறும் பாங்கு குறித்துத் தொல்காப்பியர் கூறியுள்ளார்.

## கருப்பொருள் வளர்நிலை

தொல்காப்பியருக்குப்பின் அகப்பொருள் எழுதியவர் நாற்கவிராச நம்பியாவர். இவர் தெய்வம் உயர்ந்தோர், தாழ்ந்தோர், புள், விலங்கு, ஊர், நீர், பூ, மரம், உணவு, பறை, யாழ், பண், தொழில் எனப்பதினான்கு வகையாகக் கருப்பொருளைப் பகுப்பர்[79] தொல்காப்பியர் கூறிய எட்டுவகைக் கருப்பொருட்களுடன் உயர்ந்தோர், தாழ்ந்தோர், ஊர், நீர், நீர், பூ, பண் இவற்றைச் சேர்த்தப் பதினான்கு எனத் தொகைப்படுத்தியுள்ளார். எனினும் மக்களை உயர்ந்தோர் எனப் பகுத்த பகுப்பு நாற்கவிராச நம்பி கொண்ட இலக்கணமாகும்.

கருப்பொருள்கூறும் தொல்காப்பிய நூற்பாவில் மக்கள் நேரே குறிப்பிடப்படவில்லை. எனினும் அடுத்து வரும் நூற்பாக்களில் திணைப்பெயர், திணைநிலைப் பெயர் என்று கூறுவதனால் அதனை அவர் உடன்பட்டமையினை உணரலாம். மக்களுள் உயர்ந்தோர், அல்லோர் என வகைப்படுத்துவது மக்கள் சமுதாயத்தில் எழுந்த உயர்வு, தாழ்வு வலிமைபடுத்தப்பெற்றதன் விளைவாகும். தொல்காப்பிய நூற்பாவிற்கு உரையாசிரியர்கள் சான்று சொல்ல நாற்கவிராச நம்பி தாமே திணைக்கருப்பொருள்களை விளக்கமாக ஐந்திணைக்கும் செய்வர். இவ்விளக்கமும் அகத்திணையில் வாழ்வியல் வளர்ச்சியைச் சுட்டுவதாக அமைந்துள்ளது.

கருப்பொருளின் வளர்ச்சி அடிப்படைத் தேவைகளுக்கு மட்டும் அமையாமல் கலை வாழ்வுக்கும் உரியதாக அமைந்தமையை உணர இயல்கிறது. யாழ் பறை போன்ற ஒலிப்புக் கருவிகளுடன் பண்ணும் கலந்து பல்வேறு கலைகளை வளர்த்திருக்க வேண்டும்.

## காலந்தோறும் கருப்பொருள் வளர்ச்சி

முப்பொருள்களுள் நடுவணதாக இடம்பெறும் கருப்பொருள் காலந்தோறும் வளர்ந்துவரும் இயல்பினது என்பதனை,

"அவ்வகை பிறவும் கருவென மொழிப"

என்று விதி செய்து காட்டியுள்ளார்.

இக்கருப்பொருள்கள் பிற்கால இலக்கண நூல்களில் அமைந்த திறத்தினை விளக்குகிறது.

தெய்வம், உணா, மா, மரம், புள், பறை, செய்தி, யாழின் பகுதி என எட்டுவகையாகக் கருப்பொருளைப் பகுத்துக் கூறும் தொல்காப்பியர் அக்கருப்பொருள் வளர்ச்சி பெறும் இயல்புடையது என்பதனை விளக்கிக் கூறுவர் இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகிய உரையாசிரியர்கள். "அவ்வகை பிறவும் கருவென மொழிப" என்ற தொல்காப்பிய நூற்பா கொண்டு பூ, நீர், ஊர் முதலானவற்றையும் ஒவ்வொரு நிலத்திற்குரிய கருப்பொருளுடன் இணைத்துக் கூறியுள்ளார்.[80]

## இறையனாரகப்பொருள் உரையில் கருப்பொருள்

தொல்காப்பியத்திற்குப் பின்னர்த் தோன்றிய இறையனாரகப் பொருள் அல்லது களவியல் என்று கூறப்பெறும் நூல் அகத்திற்கு மட்டும் இலக்கணம் கூறுவதாக அமைந்துள்ளது. களவு, கற்பு ஆகிய இருவகைக் கைக்கோளுக்குமுரிய சில இலக்கண மரபுகளை அறுபது சூத்திரங்களில் எடுத்துரைக்கின்றது. இந்நூல் கருப்பொருள்

வகையினைப் பதினான்காக விரித்துரைக்கின்றது. ஐந்திணைக்கும் தெய்வம், உணா, மா, புள், பறை, செய்தி, யாழின் பகுதி இவற்றுடன் தலைமகன் பெயர், தலைமகள் பெயர், நீர், ஊர், பூ, மக்கள் பெயர் எனப் பதினான்கினைக் கருப்பொருளாக வகைப்படுத்திக் காட்டுகின்றது. தலைமகன் பெயர், தலைமகள் பெயர், மக்கள் பெயர் என அவ்வந்நிலத்திற்குரிய மக்களை வகைப்படுத்திக்காட்டுகிறது.

## முத்து வீரியத்தில் கருப்பொருள்

இந்நூலின் ஆசிரியர் கருப்பொருளைத் தொல்காப்பியரைப் போல பதினான்காக பகுத்துக் காட்டியுள்ளார் இதனை,

"தெய்வம் செல்வர் சேர்குடி புள்விலங்கு
ஊர்நீர் பூமரம் உணாப்பறை யாழ்பண்
தொழிலெனக் கரு ஈரெழுவகைத் தாகும்"[81]

என்னும் நூற்பா தெளிவுறுத்துகிறது.

## தொன்னூல் விளக்கத்தில் கருப்பொருள்

வீரமாமுனிவரால் இயற்றப்பெற்ற இலக்கணநூல் தொன்னூல் விளக்கம் ஆகும். சான்றோரால் குட்டித் தொல்காப்பியம் எனப் போற்றப்பெறுவது 370 நூற்பாக்களில் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐந்திலக்கணம் இயம்புவது.

முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள், என்னும் முப்பொருள் பாகுபாடு இந்நூலில் காணப்பெறவில்லை.

"தெய்வஞ் செல்வர் சேர்குடி புள்விலங்
கூர்நீர் பூமா முணாப்பறை யாழ்பண்
டொழிலெனக் கருவீ ரெழுவகைத் தாகும்"[82]

என்று கருப்பொருள் வகையினை இந்நூல் குறிக்கிறது. ஆரணங்கு, உயர்ந்தோர், அல்லோர் என்று நம்பியகப்பொருள் கூறும் கருப்பொருள் வகையினைத் தொன்னூல் விளக்கம் தெய்வம், செல்வர், சேர்குடி எனத் தலைவன் தலைவியரையும் அவர் பிறந்த குடியையும் உட்படுத்திக்காட்டுகின்றது. நம்பியகப்பொருளுக்கும் இந்நூலுக்கும் பிற கருப்பொருள் கூறும் நெறியினில் எவ்வகை மாற்றமும் இல்லை. இக்கூற்று முத்துவீரத்தோடு ஒத்துள்ளது.

## அறுவகை இலக்கணத்தில் கருப்பொருள்

எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐந்திலக்கணங்களுடன் புலமை இலக்கணத்தையும் உடன் இணைத்துத் தமிழிலக்கணம் அறுவகைப்பட்டது என்பதை அறுவகை இலக்கணம் விளக்கிச் செல்கின்றது. இந்நூலாசிரியர் தண்டபாணி சுவாமிகள். அறுவகை இலக்கணம் பொருளை அகம், புறம், அகப் புறம் என மூன்றாகப் பகுத்துள்ளது. இந்நூல் கூறும் நூற்பாக்கள் அகப்பொருளை விளக்குவதாகவோ அக்கூறுகளுடன் தொடர்புடையதாகவோ இல்லை. ஐவகை நிலப்பாகுபாடு புறப்பொருளில் நிலத்தியல்பு என்ற பகுதியில் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. இயற்கை நிலப்பகுப்பு, நிலவியல்பு, ஆண்டு விளையும் பொருள்கள், நிலத் தெய்வங்கள், மக்கள், மக்கள் வாழிடங்கள், விலங்கு, பறவை, தொழில், பறை ஆகியன இப்பகுதியில் கூறப்பெற்றுள்ளன.[83]

தொல்காப்பியர் அகத்திணையியலில் குறிப்பிடும் கருப்பொருள்களை ஒத்ததாக இவை தோன்றுகின்றன. ஆயின் கருப்பொருள்கள் என்ற பெயரில் குறிப்பிடப்பெறவில்லை என்பது எண்ணத்தக்கது. இந்நூல் காட்டும் பொருளிலக்கணம் பண்டைய பொருள் இலக்கண மரபினின்றும் மாறுபட்டுக் காணப்படுகின்றது. அன்பின் ஐந்திணைப் பெயர்கள் பெயரளவில் இடம்பெற்றுள்ளனவே யன்றி எவ்வித அகப்பொருட் கூறுகளும் காணப்படவில்லை, அகப்பொருளுக்கு பொருந்துவதாகும் இல்லை"[84] சுவாமிகள் வகுத்துரைக்கும் பொருளிலக்கணம் மக்களின் நடைமுறை வாழ்வினை மையமாகக்

கொண்டு விளக்கும் புதுமுறையில் அமைந்த பொருளிலக்கணம் ஆகும்"[65] என்னும் கருத்து ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது .

### திணைப்பெயர்

பெயர் சுட்டப் பெறாவகையில் பாடல் சான்ற புலனெறி வழக்கில் சிறப்புறப் பாடப் பெறும் அகத்திணைகளின் பெயர்கள் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் இவற்றுள் எதன் அடிப்படையில் அமைந்தவை என்பது குறித்துப் பலகருத்து முரண்பாடுகள் உள்ளன.

அகத்திணையியலில் கைக்கிளை முதலாகப் பெருந்திணை ஈறாக கூறுப்பட்ட ஏழு திணைகளுள் கைக்கிளை "காதற் குறுங்கரு"[66] என்றும் பெருந்திணை "முதிர்ந்து வீழ்கடு"[67] என்றும் கொள்ளத்தக்கன. ஐந்திணையே பாடல் சான்றது. இதற்கே முதற்பொருள்களும் கருப்பொருள்களும் உரிப்பொருள்களும் கருதத்தக்கன. ஐந்திணைகளின் பெயர்கள் எதன் அடிப்படையில் அமைந்தன் என்பது ஆராய்தற்குரியது.

### உரையாசிரியர்கள் கருத்து

தொல்காப்பிய உரையாசிரியர்களிடையே திணை பெயர்க்காரணம் பற்றிய கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. உரையாசிரியர் இளம்பூரணர் முல்லை, குறிஞ்சி என்பன இடுகுறியோ, காரணக்குறியோ எனின் ஏகதேசகாரணம் பற்றிய முதலாசிரியர் இட்டதோர் குறி என்று கொள்ளப்படும் என்பர். காரணம் என்னை எனின் "காடுறை உலகிற்குக் குறிஞ்சிப்பூ சிறந்தது ஆகலானும் தீம்புனல் உலகிற்கு மருது சிறந்தமையானும், பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்தமையானும் இந்நிலங்களை இவ்வாறு குறியிட்டார் என்று கொள்ளப்படும்"[68] இளம்பூரணர் கருத்துப்படி மலர்களே திணைப்பெயர்களுக்கு அடிப்படை என்பது தெளிவு.

பூக்கள் குறியீகளாக அமைந்து திணைகளை உணர்த்தும் முறையைப் புறப்பொருள் திணைகள் நமக்கு உணர்த்துகின்றன. வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி முதலிய திணைகள் பூக்களின் பெயர் பெற்றுள்ளன.

அகத்திணையொழுகலாறுகள் தத்தம் நிலத்திற்குச் சிறப்புரிமையுடைய குறிஞ்சி, முல்லை முதலிய பூக்களாற் பெயர் பெற்றாற் போன்று, அவற்றின் புறத்தலாகிய புறத்திணை யொழுகலாறுகளும் அவற்றை மேற்கொள்வோர் அடையாளமாகச் சூடுதற்குரிய வெட்சி வஞ்சி முதலிய பூக்களாற் பெயர் பெறுவனவாயின"[89] என்னும் கருத்து ஈண்டு குறிப்பிடத்தக்கது. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பன முறையே இருத்தல், புணர்தல், ஊடல், இரங்கல் என்னும் ஒழுக்கத்தைக் குறித்த பெயர்களென்றும், இவ்வொழுக்கத்தின் பெயர்களே இவை நிகழும் நிலத்திற்குமாயின என்றும் உரை கூறுவர் நச்சினார்க்கினியர். மேலும் "இவ்வாறன்றி முல்லை முதலிய பூவாற் பெயர் பெற்றன. இவ்வொழுக்கங்களெனின் அவ்வந்நிலங்கட்கு ஏனைப் பூக்களும் உரியவாகலின் அவற்றால் பெயர் கூறுதலும் உரிய எனக்கடாயினார்க்கு விடையின்மை உணர்க"[90] என இளம்பூரணர் கொள்கையை மறுத்துள்ளார்.

ந. சுப்புரெட்டியார், "ஒவ்வோரொழுக்கத்தை உணர்த்ததற்கு ஒவ்வொரு பூவை அடையாளமாகக் கொண்டொழுகுவது பண்டைத் தமிழரது வழக்கமேயாகும். இது புறத்திணை யொழுக்கமாகிய நிரை கவர்தல், மீட்டல் முதலியவற்றிற்கு வெட்சி, கரந்தை முதலாய பூக்களை அறிகுறியாகக் கொண்டமையானும் உறுதிப்படும்" என்றும் கூறியதோடு "இதற்கு (வெட்சிக்கு) அப்பூச்சூடுதலும் உரித்தென்று கொள்க என்றும் தும்பை என்பது பூவினைப் பெற்ற பெயர் என்றும் நச்சினார்க்கினியர் வரைந்த பகுதிகளை எடுத்துக் கூறியுள்ளார்."[91]இதனால் மலர்களே திணைப்பெய்களுக்கு அடிப்படை என்பது புலனாகிறது.

இப்பூக்களின் பெயர்கள் குறியீடுகளாக நின்று அவ்வத்திணையின் பெயர்களாக அமைந்தன என்பதும் அவையே அவ்வத்திணையின் ஒழுக்கங்களையும் உணர்த்தின என்பதும் இவற்றால் பெறப்படுகின்றன.

## ஐந்திணைக்கருப்பொருள்

கருப்பொருள்களை வரையறைச் செய்த தொல்காப்பியர் தெய்வத்தை மட்டும் விளக்கியுரைத்து மற்றைய உணவு முதலியவற்றை விரித்துரைக்கவில்லை. இளம்பூரணர் இதனை விளக்கியுரைக்கிறார்.

குறிஞ்சிநிலக் கருப்பொருள்களாவன: உணவு – தினையும், ஐவனமும், வெதிர் நெல்லும், மா – யானையும், புலியும், பன்றியும், கரடியும், மரம் – வேங்கையும், கோங்கும், புள் – மயிலும், கிளியும், பறை – வெறியாட்டுப்பறையும், தொண்டகப் பறையும், செய்தி – தேனழித்தல், பண் – குறிஞ்சி பிறவும் என்றதனால், பூ – வேங்கைப்பூவும், காந்தட்பூவும், குறிஞ்சிப் பூவும், நீர் – சுனைநீரும், அருவி நீரும் பிறவும் அன்ன என்றும்,

முல்லைநிலக் கருப்பொருளாவன: உணவு – வரகும் முதிரையும், மா – மானும், முயலும், மரம் – கொன்றையும், குருந்தும் புதலும், புள்–கானங்கோழி, பறை – ஏறுகோட்பறை, செய்தி – நிரை மேய்த்தல், யாழின் பகுதி – என்பது பண் அது சாதாரி பிறவும் என்றதனால் பூ – முல்லையும் பிடவும் தளவும், நீர் – கான்யாறு , பிறவும் இந்நிகரெனக் கொள்க என்றும்,

மருதநிலக் கருப்பொருளாவன: உணவு – நெல், மா – எருமையும், நீர் நாயும், மரம் – மருதும், காஞ்சியும், புள் – அன்னமும், அன்றிலும், பறை – நெல்லரி பறை, செய்தி – உழவு, பண்– மருதம் பிறவும் என்றதனால், பூ– தாமரையும், கழுநீரும், நீர்– ஆற்றுநீரும் பொய்கை நீரும் பிறவும் அன்ன என்றும்,

நெய்தல் நிலக்கருப்பொருளாவன: உணவு – உப்பு விலையும், மீன்விலையும், மா – கராவும் சுரவும், மரம் – புன்னையும் கைதையும், புள் – கடற்காக்கை, பறை – நாவாய்ப்பறை , செய்தி – மீன்படுத்தலும் உப்பு விளைத்தலும், பண் – செவ்வழி, பிறவும் என்றதனால், பூ – நெய்தல், நீர்– கேணி நீரும், கடல்நீரும் பிறவும் அன்ன என்றும்,

பாலைநிலக் கருப்பொருளாவன: உணவு – ஆறலைத்தலால் வரும் பொருள், மா – வலியிழந்த யானையும், வலியிழந்த புலியும், வலியிழந்த செந்நாயும், மரம் – பாலை இருப்பை, கள்ளி, சூரை, புள் – எருவையும், பருந்தும், பறை – ஆறலைப்பறையும், சூறைகொண்ட பறையும், செய்தி – ஆறலைத்தல், பண் – பாலை பிறவும் என்றதனால், பூ– மராம் பூ, நீர் – அறுநீர்க் கூவலும் அறுநீர்ச் சுனையும், பிறவும் இந்நிகரெனக் கொள்க. என்று பட்டியலிட்டுள்ளார்.[82]

# ஆய்வு முடிவுகள்

1. தமிழில் அமைந்த பொருளிலக்கணம் பிற மொழிகள் பெறாத சிறப்பானது. அகம், புறம் பாகுபாடு தமிழுக்கே உரியது. இவ்விரண்டனுள் அகமே தலைமையானது.

2. அகத்திணைகளும், புறத்திணைகளும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. இத்திணைப்பகுப்புகள் மக்களின் அகவாழ்வு, புறவாழ்வு ஆகியவற்றின் விளக்கங்களாக அமைந்தவை.

3. தொல்காப்பியர் உலகில் காணும் காட்சிப் பொருள்களையும், கருத்துப் பொருள்களையும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்று மூவகைப்படுத்தியுள்ளார். முதற்பொருளும், கருப்பொருளும் பின்னணியாக உரிப்பொருள் சிறப்புறும். அகத்திணைப்பாடல்களில் இவற்றின் அமைதியைக் காணலாம்.

4. அகத்திணைகள் ஏழனுள் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நான்கு திணைகளும் நிலம் பெறுவன. நானில வழக்கே தொன்றுதொட்டு நிலவுவது நிலம் பெறாதவை கைக்கிளை, பெருந்திணை பாலைஆகியன.

5. பாலை என்று தனி நிலப்பகுதி தமிழகத்தில் இல்லை, பெரும்பான்மையும் குறிஞ்சியும், முல்லையுமோ அல்லது நானிலங்களுமோ வறட்சியால் திரியும்போது பாலையாகும்.

6. தொல்காப்பியர் கருப்பொருளை எட்டு வகைப்படுத்தி, அவ்வகை பிறவும் கருவென மொழிப எனப்பின்னர்த் தோன்றுபவைகளுக்கும் இடம் தந்துள்ளார்.

உரையாசிரியர் இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகியோர் பூ, ஊர், நீர் ஆகியவற்றையும் கருப்பொருளில் சேர்த்துள்ளனர். பின் வந்த இலக்கண நூல்கள் கருப்பொருள் ஈரேழ் வகைத்தே என்று தொகைப்படுத்தியுள்ளன.

7. முதற்பொருளுடன் ஐந்திணைகளுக்குரிய கருப்பொருள்கள் தொடர்புபடுத்திக் கூறப்பட்டுள்ளன. திணைமயக்கம் குறித்த தொல்காப்பியர் கருத்து இடம் பெற்றுள்ளது.

8. கருப்பொருள் உள்ளுறையாகவும், இறைச்சியாகவும் அகப்பொருள் பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

9. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை ஆகிய திணைப்பெயர்கள் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்றனுள் கருப்பொருள் அடிப்படையில் பூக்களின் பெயர்களில் அமைந்தன என்பது பற்றிய உரையாசிரியர்களின் கருத்துக்கள் ஆராயப்பெற்றுள்ளன.

10. முப்பொருள்களுள் உரிப்பொருள் அடிப்படையில் அகத்திணைப் பாடலுக்குத் திணை வகுக்கப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. மொ. அ. துரை அரங்கசாமி, சங்ககாலச் சிறப்புப் பெயர்கள்
2. நா. மாதவி, சங்கப்புலவர்களின் சால்பு, (முனைவர் பட்ட ஆய்வேடு), ப–11
3. மேலது, ப–11
4. புறம், பா–186; அடி 1–2
5. தொல்.பொருள். அகத்திணையியல், இளம் உரை, நூ–3
6. மா. இராசமாணிக்கனார், தமிழ்மொழி – இலக்கிய வரலாறு, சங்ககாலம், ப–105
7. டாக்டர். கார்த்திகேசு சிவத்தம்பி, இலக்கணமும் சமூக உறவுகளும், பக், 28–29
8. தா. கந்தசாமி முதலியார், சூடாமணி நிகண்டு மூலமும் உரையும், ப–
9. தொல்.பொருள்.செய்யுளியல், நூ–177, இளம்.உரை, ப–528
10. மேலது, அகம்.இளம்.முன்னுரை
11. மேலது, அகம், நச். முன்னுரை
12. மேலது, அகம். நூ–1
13. மேலது, செய். நூ–486
14. மேலது, செய்.நூ–177, இளம்.உரை, ப–528
15. மேலது, செய்.நூ–185, பேராசிரியர் உரை ப.537
16. மேலது, புறம். இளம். நூ–59
17. மேலது, நூ–64
18. மேலது, நூ–66
19. மேலது, நூ–70
20. மேலது, நூ–73
21. மேலது, நூ–76
22. மேலது, நூ–78
23. ந. சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள் ப–14

24. மேலது, ப–14

25. தொல்.பொருள்.அகம். இளம்.நூ–3

26. மேலது, நூ–4

27. தொல்.பொருள்.அகம்.இளம்.நூ–5

28. க. வெள்ளைவாரணர், தமிழ் இலக்கிய வரலாறு – தொல்காப்பியம் ப–84

29. தொல்.பொருள்.அகம்.இளம்.நூ–2

30. மேலது, நூ–2

31. மேலது, நூ–11

32. தொல்.பொருள்.அகம்.நச்.உரை, ப–5

33. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப–102

34. சிறுபாணாற்றுப்படை, அடி–151

35. மேலது, அடி–169

36. மேலது, அடி–186

37. மேலது, அடி–267

38. புறம். பா–187

39. தொல்.பொருள்.அகம்.இளம்.நூ–2

40. அகம். பா– அடி–

41. நாற்கவிராசநம்பி, நம்பிஅகப்பொருள், நூ–6

42. மேலது, நூ–9

43. மு.அருணாச்சலம்பிள்ளை, தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம் ப– 112

44. சிலம்பு, 11வது காதை, அடி.66–67

45. மொ.அ.துரைஅரங்கசாமி, சங்ககாலச் சிறப்புப் பெயர்கள் ப–27

46. மேலது, பா–15

47. இருபத்தொன்றாவது கருத்தரங்க ஆய்வுக்கோவை, தொகுதி – 1, ப–712

48. மேலது, ப–713

49. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப–180

50. சிறுபாணாற்றுப்படை அடி9–11

51. மேலது, நச்.உரை அடி.9–11

52. தொல்.பொருள்.அகம்.நச். உரை, ப.23

53. மேலது, பா–11

54. மேலது, பா–14

55. மொ.அ.துரைஅரங்கசாமி, தொல்காப்பிய நெறி, ப–87

56. அற்றைநாட் காதலும் வீரமும், ப–121

57. தமிழ்க்காதல், ப–182

58. தொல்.பொருள்.அகம்.நூ.6–12

59. தொல்.பொருள்.மெய்.இளம்.முன்னுரை

60. தொல்.பொருள்.அகம்.நூ–16

61. ச. பாலசுந்தரம், தமிழ் இலக்கண நுண்மைகள் பக்.7–8

62. தொல்.பொருள்.அகம்.இளம்.நூ–20

63. தொல்.பொருள்.மெய்.இளம்.நூ–268

64. திரு.வி.கலியாணசுந்தரம், முருகன் அல்லது அழகு, (மேற்கோள்) பக்.28–29

65. இராமசாமிப்பிள்ளை, தொல்காப்பியச் சிந்தனை, ப–

66. தமிழ்க்காதல், ப–169

67. பட்டினப்பாலை, அடி.86–87

68. தொல்.பொருள்.அகம்.இளம்.உரை. ப.10

69. தொல்.பொருள்.மரபு .இளம். நூ635

70. மேலது, நூ.11–12

71. தொல்.பொருள்.அகம்.இளம்.உரை. ப.18

72. தொல்.பொருள்.அகம். நூ.21

73. மேலது, நூ–51

74. தொல்.பொருள்.அகம்.இளம். ப–63

75. தொல்.பொருள்.அகம்.நூ–50

76. மேலது, பொருளியல், நூ–33

77. தொல்.பொருள்.இளம். ப–346

78. தொல்.பொருள்.இளம். நூ–227

79. நம்பி அகப்பொருள், நூ–19

80. தொல்.பொருள்.அகம்.இளம்.உரை. பக்.18–19

81. கு. சுந்தரமூர்த்தி (ப.ஆ), முத்துவீரியம் அகம். நூ–33

82. ஐந்திலக்கணத் தொன்னூல் விளக்கம், நூ–199

83. தண்டபாணி சுவாமிகள் (ப.ஆ), அறுவகை இலக்கணம், பக்.176–180

84. அறுவகை இலக்கணம், சாந்தலிங்க அடிகளார் முகவுரை

85. மேலது.

86. தமிழ்க்காதல் ப–26

87. மேலது, ப–27

88. தொல்.பொருள்.இளம்.உரை ப–10

89. தமிழ் இலக்கிய வரலாறு, ப–92

90. தொல்.பொருள்.அகம்.நச். உரை, ப–74

91. அகத்திணைக்கொள்கைகள், ப–28

92. தொல்.பொருள்.அகம்.இளம்.உரை, ப.18–19

## இயல்–2

# கருப்பொருள் உத்திகள்

### முன்னுரை

சங்கப்புலவர்கள் கவிதைக்கு வனப்பும், பொலிவும் தோன்ற பயன்படுத்திய உத்திகளுள் கருப்பொருளும் ஒன்றாகும். இவை பாடல்தோறும் விரவி வந்து பாடலுக்கும், புலவருக்கும் சிறப்பினைப் பெற்றுத்தருகிறது. இயற்கை, உள்ளுறை, இறைச்சி, உவமை என்பவற்றின் வழி அமைந்த கருப்பொருள் உத்திகளை இவ்வியியல் ஆய்வு செய்கிறது.

சங்ககாலத் தமிழர் வாழ்வு இயற்கையோடு இயைந்த வாழ்வு. இயற்கையின் வளமும், வனப்பும், ஆற்றலும், அழகும் அவர்களைப் பெரிதும் கவர்ந்து அவர்களின் வாழ்வில் பேரிடம் பெற்றன. மலையும், காடும், வயலும், கடலும், கானலும், விலங்கும், பறவையும், செடியும், கொடியும், அருவியும் ஆறுமாகிய இயற்கைப் பொருள்களோடு அவர்கள் உறவும் உரிமையும் கொண்டு வாழ்ந்தனர். அவர்கள் வாழ்வு இயற்கையில் தோன்றி இயற்கையில் வளர்ந்து இயற்கையில்இன்புற்ற வாழ்வென அறிஞர் குறிப்பிடுவர்.[1]

சங்ககாலம் இயற்கை நெறிக்காலம். தமிழ் மக்களின் சிந்தனையைச் சான்றாகக் கொண்டு காலத்தை வகுத்துக் காட்டும் அறிஞர் சங்க காலப் பிரிவை இயற்கை நெறிக்காலம் எனக் குறிப்பிடுவர்.[2]

சங்ககாலத் தமிழர் வாழ்வுக்கும் இயற்கைக்கும் உள்ள உறவினை அக்காலப் புலவர்களின் பாடல்கள் நமக்கு விளக்குகின்றன. சங்ககாலப் புலவர்கள் மக்கள் வாழ்வையும் இயற்கையையும் இணைத்துப்பாடினர். மனித வாழ்க்கையின் பல்வேறு கூறுகளையும் வருணித்து தெளிவுபடுத்துவதற்காகவே பண்டைத்தமிழ்ச் சான்றோர்

இயற்கையைப் பயன்படுத்தினர். மனித நேயத்தின் உணர்வுகளையும், இயற்கையின் எழிலையும் நெருங்கிய பிணைப்புடையவனவாய் இணைத்துப்பாடினர் எனினும், அவர்கள் பாடலுள் மக்கள் வாழ்வே முதன்மையும் சிறப்பும் பெற, இயற்கைச் சார்பு நிலையே பெற்றது. இயற்கையை இயற்கைக்காகப் பாடும் நிலை சங்க காலத்தில் இல்லை.

இயற்கைநெறிக் கால இலக்கியம் மக்கள் ஒழுக்கத்தையே பொருளாகக் கொண்டது. மக்கள் யாவருக்கும் இயல்பாக அமைந்த காதல் உணர்ச்சியும், வீர உணர்ச்சியுமே அக்கால இலக்கியங்களில் சிறப்பிக்கப்பட்டன. அக்கால இலக்கியப் பொருள் மரபு முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என வகுக்கப்பட்டது. உரிப்பொருளாகிய ஒழுக்கம் நிகழ்தற்கு முதற்பொருள் நிலைக்களமாகவும் கருப்பொருள் அதற்கு உதவுமாறும் செய்யுட்கள் செய்யப்பட்டன.[3] சங்ககாலம் நானிலப் பாகுபாட்டின் அடிப்படையில் அமைந்த திணை நெறியில் இலக்கியம் முகிழ்ந்த காலம். காடும், மலையும், வயலும், கடலும் பண்டைத் தமிழ் மக்களின் வாழ்க்கைக்களங்களாகவும் வாழ்க்கையை இயக்கும் ஆற்றலாகவும் அமைந்தன.

சங்ககால மக்கட் பாகுபாடும் வாழ்க்கையின் ஒழுக்கமும் நில இயற்கைக்கு ஏற்பவே அமைந்திருந்தன.[4] முதல், கரு, உரி என்ற பொருள் நோக்கில் திணை அடிப்படையில் அமைந்த செய்யுள் மரபு வழி சங்ககாலப் புலவர் பெருமக்களின் பாடல்கள் அமைந்தன. முதற்பொருள் அடிப்படையில் கருப்பொருள் பின்னணியில் மக்கள் வாழ்க்கைக்கு உரிய உரிப்பொருள் பாடுபொருளாக – பாடற்பொருளாக ஆயிற்று.

கருப்பொருள் உத்திகள் என்ற இவ்வியல் கருப்பொருள் வருணனை பாடல்களில் இடம்பெறும் நோக்கினை வெளிப்படுத்துகின்றது. தெய்வம் முதலாக கருப்பொருளாய் அமைந்த நிலையினையும் இடம்பெற்ற பாங்கினையும் இவ்வியல் எடுத்துரைகின்றது.

## இலக்கியத்தின் நிலைக்களன்

மக்கள் வாழ்க்கைக்கு உரிய குறிக்கோளை எடுத்துரைப்பது இலக்கியம். குறிக்கோள் இல்லா வாழ்க்கை பயனற்றது என்று இலக்கியம் இயம்புகின்றது. இலக்கு + இயம் = இலக்கியம். இலக்கு – விளக்கம் நோக்கம், கொள்கை, குறிக்கோள் எனப்பொருள் கொள்ளின், உயர் குறிக்கோள்களையும் கொள்கைகளையும் இயம்புவது இலக்கியம் எனக் கொள்ளலாம்.[5]

இலக்கியத்திற்கு அடிப்படையாக மக்கள் வாழ்க்கையும் அதற்கு உறுதுணையாக இயற்கையும் அமைகிறது. இலக்கியம் வளர்ந்தெழுவதற்கு நிலைக்களனாக உதவும் பொருள்கள் மக்களும் இயற்கையுமேயாகும். இவ்விரு பகுதிகளையும் பிரித்து இயற்கையை விடுத்து மக்களைப் பற்றியும் அல்லது மக்களை விடுத்து இயற்கையைப் பற்றியும் புலவர் பாடுவரேல் அவ்விலக்கியம் குறையுள்ள இலக்கியமாகவே விளங்கும்[6] என்னும் கருத்து வாழ்க்கையும் இயற்கையும் இரண்டறக் கலந்தது என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

சங்கப் புலவர்கள் இயற்கை அரங்கைத் துணையாக்கி மானிட இயக்கத்தைப் பாடல்களில் அழகுறப் பாடியுள்ளனர். முதலும் கருவும் இயற்கைச் சூழ்நிலை பற்றியன. உரிப்பொருள் மக்கள் ஒழுகலாறு பற்றியது. காடும் காடு சார்ந்த இடமும் இயற்கை தரும் சூழ்நிலை. இருத்தலும் இருத்தல் நிமித்தமும் மனித உணர்ச்சி தரும் சூழ்நிலை. இவ்விரண்டையும் பிரிக்க முடியாதவாறு இணைந்து முல்லைத் திணைக்கு உரிய புலனெறி வழக்கத்தை மரபாக்கிப் பாடல் புனைந்துள்ளனர்.

வாழ்க்கையுடன் ஒன்றிய நிலையில் கருதப்பெறும் இயற்கைக் கூறுகள் அகம், புறம் என்னும் இரு திணைகளுள் அகத்திணைகளில் மட்டுமே பேரளவு இடம் வகிக்கின்றன. அகத்திணையுள் அமைந்துள்ள ஐந்திணை நிலப் பாகுபாடும் பெரும்பொழுது, சிறு பொழுது என்ற காலப் பாகுபாடும் சிறந்த பின்னணியாக அமைந்துள்ளன. இடமும் காலமுமாகிய

முதற்பொருள் மட்டுமல்லாது தெய்வம், உணா, மா, மரம், புள், பறை, செய்தி, யாழின் பகுதி ஆகிய கருப்பொருள்களும் இயற்கை கூறுகளும் அகத்திணைக்கு அமையும் சிறந்த சூழ்நிலைகள். உரிப்பொருளே அகமாய் முதலும் கருவும் அகமாகிய உரிப்பொருளின் சூழ்நிலைகள்.

அகத்திணை உரிப்பொருளுக்கே புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் ஆகிய காதற்பொருளுக்கே முதலும் கருவும் வகுக்கப்பட்டுப் பாடல்கள் பாடப்பட்டன. ஐந்திணைகளில் சிறப்பாக ஒவ்வொரு திணை குறித்து மிகுதியான பாடல்களைப்பாடிய புலவர்கள் அவ்வத்திணையுடன் சார்த்திப்பெயர்குறிக்கப் பெற்றனர்.

பாலைத்திணை மட்டுமே பாடிய சேரமன்னன் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்று அழைக்கப் பெற்றனன். இவ்வாறே மருதம் பாடிய ஓரம்போகியார், குறிஞ்சிக் கபிலர், நெய்தல் அம்மூவனார், முல்லை நல்லந்துவனார் ஆகியோரும் சிறப்பிக்கப் பெற்றனர். இப்புலவர்கள் அவ்வத்திணையின் உரிப்பொருள் பற்றிப் பாடியவர்கள் என்பதே கருத்தாகும். "முதலும் கருவும் உரிப்பொருளுக்குத் துணைப் பொருளேயன்றிப் புலவனுக்குப் பாடற் பொருளன்று, துறைப்பொருளன்று, தலைமைப் பொருளின்று"[8]என்னும் கருத்து ஈண்டுக் குறிப்பிடத் தக்கது.

உயர்ந்த குறிக்கோளுடையவராக விளங்கிய பண்டைய புலவர் தமது நோக்கத்திற்கேற்ப இயற்கையைத் தம் பாடல்களில் கையாண்டனர். இயற்கையின் இன்பத்தையும் துன்பத்தையும் மக்களின் இன்பத்திற்கும், துன்பத்திற்கும் பின்புலமாகக் கொண்டு பாடினர். தலைவனைப்பிரிந்து வருந்தும் தலைவி,

"யாரணங் குற்றனை கடலே"[9]

என்று கடலைப் பார்த்து அதுவும் தன்னைப்போல் பிரிவாற்றாமையால் வருந்துவதாக வினவுகிறாள்.

இயற்கையானது காதலை நினைப்பிக்கும் என்ற கருத்தினை,

"அன்புறு தகுவன இறைச்சியுட் சுட்டலும்
வன்புறை யாகும் வருந்திய பொழுதே"

என்று இறைச்சியின் இலக்கணமாகத் தொல்காப்பியம் குறிக்கின்றது. இயற்கையுள் புலனின்பம் காணும் உள்ளத்தை இது புலப்படுத்துகின்றது.

## சங்க இலக்கியங்களில் இயற்கை புனைவு

சங்கப்புலவர்கள் இயற்கையினைத் தனியாகக் கற்பனை செய்து பாடாமல் மக்களின் வாழ்விற்கும் உணர்விற்கும் பின்னணியாகப் பாடியுள்ளனர்.

மக்கள் வாழ்வு பற்றிக் கூறுவதை முதன்மை நோக்கமாகக் கொண்டிருந்ததால் இயற்கையைத் தனித்துப்பாடும் மரபைச் சங்கப்புலவர்கள் பின்பற்றவில்லை. சங்க காலப்புலவர் மானிடம் பாடுவதையே தங்கள் இலக்கியக் குறிக்கோளாகக் கொண்டனர். சங்க இலக்கியத்தின் மையம் மானிட வாழ்வே. இயற்கை அதற்கு உறுதுணையாய் இரண்டாம் இடமே பெறுகின்றது[11] என்னும் கருத்துக்கள் சங்கப்புலவர் மானிட வாழ்வைப் பாடுவதைக் குறிக்கோளாகக் கொண்டனர்[12] என்பதையும் அதற்கு அணிசெய்யும் வகையில் இயற்கையைப் பின்னணியாகப் புனைவு செய்தனர் என்பதையும் புலப்படுத்துகின்றன.

இயற்கையின் எழிலை, "கைபுனைந்தியற்றாக் கவின் பெருவனப்பு" என்பர் நக்கீரர்.[13]

இயற்கையைத் தலைமைப் பொருளாக மேற்கொண்டு பாடுபவர் இயற்கைப்புலவர் எனப்படுவர். சங்க இலக்கியப்புலவர் இயற்கை குறித்துத் தனித்துப் பாடவில்லை. இயற்கை பாடு பொருளுக்குத் துணைப் பொருளாயிற்றே அன்றிப் பாடற்பொருள் ஆகவில்லை. சங்க இலக்கியத்தில் தனி இயற்கை பற்றி ஒரு பாடல்கூட இல்லை. தனியாக இயற்கையைப் புனைந்ததில்லை என்பர் மு. வரதராசன்.[14]

மக்களின் செயலுக்கும் ஒழுகலாற்றிற்கும் பயன் செய்யும் துணைவனாகத்தான் இயற்கை விளங்கியது. சங்கப்பாடல்களின் உயிர்ப்பொருளான உரிப்பொருளை விளக்குவதற்கும், மனித உணர்வுகளைச் சிறப்பாகச் சித்தரிக்கவும் துணைபுரியும் துணைக்கருவியாகவே இயற்கை பயன்படுத்தப்படுகிறது. நாடெங்கனும், காடெங்கனும் மண்டிக் கிடக்கும் இயற்கைப் பரப்பில் மக்கள் வாழ்வொடு கலந்த சில இயற்கைப் பகுதிகளே புலவர்களைக் கவர்ந்து அவர் பாடும் மதிப்பைப் பெற்றன.இயற்கை மாந்தர்களின் எண்ணங்களையும் உணர்வுகளையும் மிகவும் தாக்கியது என்பதை அகத்திணைப் பாடல்களில்–சிறப்பாக ஐந்திணைப்பாடல்களில் காணமுடிகிறது. ஒவ்வொரு அகத்துறையும் –காதலுணர்வுடன் இயற்கையொடு ஒட்டிய உறவுடையது.

"யாரும் மில்லைத் தானே கள்வன்
தானவன் பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
ஒழுகு நீ ராரல் பார்க்கும்
குருகு முண்டுதான் மணந்த ஞான்றே"[15]

என்னும் தலைவியின் கூற்று ஈண்டு எண்ணத்தக்கது.

ஓடும் நீரில் ஆரல் மீனை எதிர்பார்த்து நிற்கும் குருகு மட்டுமே அன்று இங்கிருந்தது. தலைவன் தன்னை மணந்ததைப் பொய்த்துவிட்டால் சான்று கூற யாருமில்லையே என்ற

தலைவியின் தவிப்பு இப்பாடலில் புலனாகின்றது. இவ்வாறு பண்டைத்தமிழரின் காதல் உள்ளத்தோடு கலந்த ஓர் அகவுறுப்பாகவே புறவியற்கை விளங்கியது என்பதை அறிய முடிகிறது.

## கருப்பொருள் நோக்கம்

இயற்கையொடு இயைந்து வாழ்ந்த மக்களைப் பற்றிய பாடலாகையால், சங்க இலக்கியம் அவர்கள் வாழ்வின் நிலைகளைக் காலம், இடம், பொருள் ஆகிய இயற்கைச் சார்புடன் காட்டுகின்றது. புற இலக்கியங்களைவிட அக இலக்கியங்களிலேயே இயற்கை முதன்மை பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. அகத்தின் முதலும், கருப்பொருள் பலவும் இயற்கைக்கு முதலிடம் தர வாய்ப்பளிக்கின்றன. நிலம், பொழுது என்ற முதலும், இயங்கு, இயங்காப் பொருள்களான கருவும் இயற்கையாகி இடம்பெறுகின்றது.பாட்டுக்கு ஏற்றபடிச் சுருதி அமைத்துக் கொள்வது போலவும், ஓவியத்துக்கு ஏற்ற நிலைக்களம் வரைவது போலவும், சிலைக்கு ஏற்ற பீடம் பொருத்துவது போலவும் காதல் நிகழ்ச்சிகளுக்கு ஏற்ற முதற்பொருளையும் கருப்பொருளையும் வகுத்துக் கொள்வதால் இலக்கியம் சுவை மிகுகின்றது.[16]

உரிப்பொருளாகக் கூறப்பெறும் காதலொழுக்கங்கள் உலகியலில் எல்லா நிலப் பகுதிகளிலும் எல்லா நேரங்களிலும் நிகழ்வன என்றாலும், அகப்பொருள் இலக்கியங்களில் நாடகச்சுவை தோன்ற அவற்றை நிலத்தொடும், பொழுதொடும் புணர்த்துக் கருப்பொருட் பின்னணியுடனும், கற்பனை நயத்துடனும் சங்கப்புலவர் பாடல் புனைந்துள்ளனர்.

தோழி தலைவனிடம்,

"அன்னையும் கனைதுயில் மடிந்தனள் அதன்றலை
மன்னுயிர் மடிந்தன்றால் பொழுதே காதலர்
வருவராயின் பருவம் இதுவென"[17]

என்று தலைமகன் இரவுக்குறி வந்தமையறிந்து கூறுகிறாள். காதலர் கூட்டத்திற்குக் குறிஞ்சி நிலம் கூதிர்காலம் நள்ளிரவு என்று பொருத்தம் கூறும் உள நூலறிவு சங்க இலக்கியத்தில்தான் – அக்காலத்தில்தான் காணமுடியும்.[18] குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் ஆகிய நிலங்களின் எழிற்காட்சிகள் புலவர்களின் கற்பனைத் திறத்தால் சங்க நூல்களில் புனைந்தியற்றாக்கவின்பெறு வனப்புடையனவாகக் காட்சியளிக்கின்றன. விலங்கும் பறவையும் அவர்களின் வியத்தகு கற்பனை ஆற்றலால் புதுமைப்பொலிவுடன் நம் மனக்கண் முன்னால் நிறுத்தப்படுகின்றன. செடியும்,கொடியும், பூவும் போதும் காயும் கனியும் பற்றிய புனைவுகள் சங்கப்புலவர்களின் கூரிய காட்சியறிவினைப் புலப்படுத்துகின்றன. அத்திணையில் நாம் காண்பது சிறந்த ஒழுக்கம், உயரிய குறிக்கோள், நுண்ணிய உள்ளுணர்வு, ஆழ்ந்த ஆராய்ச்சி, பரந்த உலகியலறிவு "அஃகி அகன்ற இயற்கையறிவு"[19] என்னும் கருத்து ஈண்டுக் கருதத்தக்கது.

பாலை நெறியில் தலைவனுடன் உடன்போய தலைவியைத் தேடிச்செல்லும் செவிலிக்கு அறம் உரைக்கும் முக்கோல்பகவர் கூற்றாக அமைந்த கலித்தொகைப் பாடல் கருத்து விளக்கத்திற்கு இயற்கை பயன்படுமாற்றை எடுத்துக்காட்டுகின்றது.

> "பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
> மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யும்
> நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;
> சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
> நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யும்
> தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;
> ஏழ்புணா ரின்னிசை முரல்பவர்க் கல்லதை
> யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யும்
> சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே"[20]

மலையில் பிறக்கும் சந்தனம் அம்மலைக்குப் பயன்படுவதில்லை. அதனை அரைத்துப் பூசுபவர்க்கே பயன்பாடு உடையதாகின்றது. கடலடியில் தோன்றுவது வெண்முத்து. அம்முத்தும் அதனை அணியாக்கி அணிபவர்க்கே பயன்படுகிறது. தான் பிறந்த இடமாகிய கடலுக்குப்பயன்படாது. யாழுளே பிறக்கும் இனிய இசையும் யாழுக்குப் பயன்படுவதில்லை கேட்பவர்க்கே இனிமை பயக்கின்றது. அது போன்றே தலைவியும் தாம் பிறந்த இடத்திற்குப் பயன்படாள். தன்னை மணக்கும் தலைவனுக்கே பயன்படுவாள் என்னும் வாழ்வியல் உண்மை வாயிலாக இப்பாடலில் தெளிவுறுத்தப்படுகின்றது.

கருப்பொருள் என்னும் இயற்கைச்சூழலிலிருந்து புனையப்படுவது உள்ளுறையுவமம், இறைச்சியும் ஆகும். ஆழ்ந்த உட்கருத்தையும் குறிப்பு மொழிகளையும் புலப்படுத்துவதற்கு ஏதுவாக உள்ளுறை, இறைச்சி ஆகியவற்றைப் புலவர்கள் பாடலில் அமைத்துள்ளனர்.

"பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற்
கழனி யூரன்"[21]

இது தலைவன் ஊர் பற்றிய வருணனையாகும். பூப்பூத்து நிற்கும் கரும்பினையும் கதிர் காய்த்து நிற்கும் நெல்லினையும் ஒருங்கே உடைய வயல்களை உடையவன் தலைவன் என்பது இதன்பொருள்.

கரும்பு பூத்து நிற்கும் ஆனால் காய்த்துப் பயன்தராது. நெல் பூத்தமட்டில் நில்லாமல் காய்க்கும் இயல்புடையது. எக்காலமும் உணவுக்குப் பயன்படும். பரத்தை இன்பந்தரும் பொழுதுக்கு மட்டும் துணையாய் அமைபவள். பூத்தபின் மகப்பேறாகிய பயனைத் தரும் உரிமையில்லாதவள். தலைவி தலைவனின் வாழ்க்கை துணையாயமைந்து பூத்தபின் மகப்பேறாகிய பயனைத் தருதற்கு உரிமையுடைவள். பரத்தையையும் குலமகளாகிய தலைவியையும் ஒப்பாக எண்ணி வாழும் இயல்புடையவன் தலைவன் என்பதைத் தோழி முன்னிலைப் புறமொழியாக இப்பாடலில் அறிவுறுத்துக்கின்றாள். தலைவனின்

புறத்தொழுக்கம் ஈண்டுக் கடிந்துரைக்கப்படுகிறது. இப்பாடலில் கருப்பொருள் வெறும் வருணனையாக இடம்பெறாது. உள்ளுறையாக அமைந்துள்ளது. இவ்வாறு முதற்பொருளும், கருப்பொருளும் உள்ளுறைப்பொருள்களைப் பயக்கும் வகையில் உரிப்பொருளுக்கு பின்னணியாகச் சங்க இலக்கியங்களில் கூறப்பெற்றுள்ளன.

**உவமை**

உவமை எல்லா அணிகளையும் விட எளிமையானது சிறந்தது. ஏனைய அணிகட்குத் தாய்போன்றது. எனவே தான் தொல்காப்பியர் உவமையணி ஒன்று மட்டுமே கூறியுள்ளார். கவிஞர்கள் தாம் கூறவேண்டிய ஒன்றிற்கு விளக்கம் தர வேண்டியும், அப்பொருளிடத்து உள்ளே அமைந்து கிடக்கும் இயல்புகளை விளக்க வேண்டியும் எடுத்துக்காட்ட வேண்டியும் சிறந்த உவமைகளைக் கையாளுகின்றனர்.

தலைவி தலைமகனிடத்துக் கொண்ட அன்பு குறித்து,

"யாயும் ஞாயும் யாராகியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல் நீர்போல
அன்புடை நெஞ்சந்தாம் கலந்தனவே"[20]

என்று செம்புலப்பெயல்நீரார் பாடியுள்ளார்.

தலைவன் தலைவியது அன்புடை நெஞ்சிற்குச் செம்மண் கலந்த செந்நீர் உவமையாக்கிக் கூறப்பட்டுள்ளது.

**உள்ளுறை**

உவமையினின்றும் தோன்றிய உள்ளுறை உவமம் கவிஞனின் கூர்ந்த மதியினை விளக்கிக் காட்டும் நுட்பம் வாய்ந்தது. பொருளிலக்கணத்திற்கு ஏனைய உவமம்

உரியதாயினும், இவ்வுள்ளுறை உவமமே மிகவும் சிறந்தது என்பது தொல்காப்பியரின் கருத்து. எனவே தான் அகத்திணையியலில் உள்ளுறை உவமையை அமைத்துள்ளார். பேராசிரியரும் "மற்றவையெல்லாம் அகப்பொருட்கே உரியவாக விதந்தோதியதென்னை, புறப்பொருட்கு வாராதன போலவெனின் ஆண்டு வருதல் அரிதாகலின் இவ்வாறு அகத்திற்கே கூறினான் என்பது"[23] என்று எழுதினார். வினை, பயன், மெய், உரு, பிறப்பு என்னும் ஐந்தன் அடிப்படையில் தெய்வமொழிந்த கருப்பொருள்களைப் பொருளாகக் கொண்டு உள்ளுறை அமையும் என்பர்.[24]

மருதத்திணையில் உள்ளுறை உவமைக்கு இடம் மிகுதி .மென்மையான உணர்வுகள் சிதைவுறாமல் முள்ளை முள்ளால் எடுப்பது போன்று வன்மையுடன் தலைவனின் புறத்தொழுக்கத்தைக் கடியும் நிலையில் தோழி வாயில் மறுக்கிறாள்.

"யாரினும் இனியன் பேர் அன்பினனே
உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்
சூல் முதிர் பேடைக்கு ஈனில் இழைஇயர்
தேம் பொதிக் கொண்டதீம் கழைக் கரும்பின்
நாறா வெண்பூக் கொழுதும்
யாணர் ஊரன் பாணன் வாயே"[25]

என்பது தலைவனுடைய ஊர்வருணனை.

துள்ளல் நடையையுடைய ஆண்குருவி கருப்பம் முதிர்ந்த பெண்குருவிக்கு கரு உயிர்த்தற்கு உரிய இடத்தைக் கரும்பின் வெள்ளிய பூவை கோதி அமைக்கும் அன்பையுடையது. இனிய தேனடையும் தீங்கழையும் உளவாகவும் மணமும், நன்னிறமும் இல்லாத கரும்பின் பூவைக்குருவி கொத்தும் ஊரன் என்றது, கற்புடைய தலைவி இருந்தும்

அவள்பால் அன்பின்றி, அன்பும் கற்புமில்லாத பரத்தையரை விரும்பினான் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டுள்ளது.

இவ்வாறு கருப்பொருள்கள் குறியீடுகளாக அமைந்து உள்ளுறைப்பொருளைப்பல பாடல்களில் உணர்த்துவதை அறியமுடிகிறன்றது.

## இறைச்சி

உள்ளுறை உவமத்தைவிட நுட்பமாக உணர்த்தப்பெறுவது இறைச்சிப்பொருள். இறைச்சி சொல்லப்பெற்ற பொருளின் புறத்தே தங்குவது. இதனை ஆராய்ந்து உணர்பவர் மட்டுமே அறிதல் கூடும் என்பதை,

"இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே
திறத்தியல் மருங்கின் தெரியு மோர்க்கே"[26]

என்ற நூற்பா உணர்த்தும். இதற்கு உரை கூறும் இளம்பூரணர், "சொற்பொருளுக்குப் புறத்தே தோன்றுவதாகிய இறைச்சிப் பொருளினின்று தோன்றும் பொருளும் உள"[27] என்றுரைப்பர்.

அஃதாவது, குறிப்புப்பொருளினின்று தோன்றும் குறிப்புப் பொருளும் உண்டு என்பது இதன் கருத்து.

"மயில் அடி இலைய மாக் குறல்நொச்சி
மனை நடு மௌவலொடு ஊழ்முகை அவிழ,
கார் எதிர்ந்தன்றால், காலை; காதலர்
தவச்சேய் நாட்டார் ஆயினும், மிகப்பேர்
அன்பினர் – வாழி, தோழி! – நன் புகழ்

உலப்பு இன்று பெறினும் தவிரலர்;

கேட்டிசின் அல்லெனோ, விசும்பள் தகவே ?[28]

என்பது முன்றில் வருணனை.

நொச்சி மீது இல்லின் நடுவேயுள்ள முல்லை சேர்ந்து இரண்டும் மலரும் என்றது. தவச்சேய் நாட்டரான உன் காதலனோடு நீ சேர்ந்தால், இருவரும் மனையறம் காத்து மக்களொடு மகிழ்ந்து வாழ்வீர் என்றதாம்.

**தெய்வம்**

தமிழர்கள் தங்கள் நாட்டின் இயற்கைக்கு ஏற்றவாறு தெய்வங்களை அமைத்து வழிபட்டு வந்தனர். இயற்கையோடு இணைந்த வழிபாட்டு முறையே தமிழர் வழிபாட்டு முறையாக இருந்தது. இயற்கையே கடவுள் வடிவம் என்பதை நன்றாக அறிந்தவர்கள் தமிழர்கள். குறிஞ்சி நிலத்தார் தம் தெய்வத்தை மலையில் தோன்றும் நெருப்பின் கூறாகவும், முல்லை நிலத்தார் தம் தெய்வத்தை வானத்தினின்று பொழியும் முகலின் கூறாகவும் கொண்டனர்[29] என்னும் கருத்து ஈண்டுக் கருதத்தக்கது.

"முல்லைத் திருமாலும் குறிஞ்சி முருகனும் மருத வேந்தனும் நெய்தல் வருணனும் (பாலைக் கொற்றவையும்) திணைத் தெய்வங்களாகும். இத்தெய்வங்கள் நிலத்திற்கேற்ற படைப்புகளே. அவ்வந்நிலப்பொருள்கள் தோற்றிய உருவங்களே என்று அறிய வேண்டும்"[30] தமிழர்களுக்கு மலைமேல் வாழ்க்கை தொடங்கிய அக்காலத்திலேயே கடவுளுண்மை முகிழ்த்து விட்டது. தெய்வம், உணவே, மா மரம்புள் எனத் தெய்வமும் திணைக் கருப்பொருளாக எண்ணப்பட்டு வருதலின் தமிழர் தெய்வங்கள் தமிழ் நிலத்தாய் ஈன்றவை என்று துணிந்து கூறலாம்"[31] என்பர் வ.சுப.மாணிக்கம்.

மலையில் வாழ்ந்த தமிழ் மக்கள் பின்னைப் பிற நிலங்களில் குடி புகுந்து, அவ்வந் நிலங்களின் இயல்புக்கேற்ப முழுமுதலுக்குப் பெயரிட்டார்கள். பல்வேறு பெயர்களைக்

கொண்டு, கடவுளரும் பலர் என்று கோடலாகாது. நிலத்தின் இயல்பிற்கேற்ப இடப்பட்ட பெயர்கள் பலவாயினும், அவை யாவும் ஒருபொருளையே குறிக்கொண்டு நிற்பன. அவ்வொரு பொருள் இயற்கையிலுள்ள முருகு அல்லது அழகு. பழந்தமிழர் இயற்கை அழகையே உயர்ந்த பொருளாக அதாவது கடவுளாகக் கொண்டு வாழ்ந்தனர். பழந்தமிழ் மக்கள் கொண்ட கடவுள் இயற்கை அழகு என்னும் கருத்து ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.[32]

இயற்கையை இயற்கையின் எழிலைத் தெய்வமாக வழிபடும் இயல்புடையவர்கள் என்பதை இவற்றால் அறியமுடிகின்றது. தொல்காப்பியர் நிலத்தெய்வங்களைப் பற்றிக் குறிப்பிடுகையில் நெய்தல் நிலத்திற்கு மட்டும் வருணன் என்று பெயர் குறிப்பிடுகிறார். பிற நிலத் தெய்வங்களுக்குப் பண்பின் அடிப்படையில் மாயோன்,சேயோன், வேந்தன் என்று பெயர் கூறியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

## மாயோன்

"மாயோன் மேய காடுறை உலகம்"[33] எனத்தொல்காப்பியர் முல்லை நிலத்தையும் முல்லை நிலத்தெய்வமான மாயோனையும் முதன்மைப் படுத்தியுள்ளார். "மால்" என்றும் "மாயோன்" என்றும் முல்லை நிலத்தெய்வம் இலக்கியங்களில் கூறப்படுகிறது. "மால்"[34] என்பது பெரியோன் என்றும் "மாயோன்"[35] என்பது கரியவன் என்றும் பொருள்படும்.

கார்காலம் மாலைப்பொழுது கடல்நீரைப் பருகி மேலெழுந்த மேகம் பெரும்பெயல் பொழிகிறது.

"நனத்தலை யுலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போல"[36]

என மழை பொழிந்த மேகத்திற்கு உவமையாக மாலின் தோற்றம் கூறப்படுகிறது.

பசிய கடலினையும் நீலவானத்தினையும் கரிய காயம்பூ மலராகிய பூவைப் பூக்களின் தொகுதிகளையும் ஆங்கெல்லாம் பரந்து நிற்கும் வண்ணத்தையும் வனப்பையும் கண்டு அவற்றிற்கு உள்ளுறு பொருளாய் ஊடுருவி நின்றிலங்கும் செம்பொருளை மாயோன் என்றார்கள். மாய் என்பது மறைதல் என்னும் பொருள்படும். எனவே, மாயோன் என்பது தத்துவங்கடந்த பொருளாய்ச் சேய்மைப்பட்டு மறைந்து நிற்பது என்ற பொருளும் தரும்.[37] இயற்கையைத் தெய்வமாக வழிபடும் இயல்புடையவர்கள் பழந்தமிழர் என்பது இவற்றால் அறியப்படுகிறது.

திருமால் "முந்நீர் வண்ணன், இருநிலம் கடந்தவன், திருமகளை மார்பிடத்தே கொண்டவன்" நீல்நிற உருவின் நெடியோன், பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன்.[38] என்று பலவாறு அழைக்கப்படுகின்றனன். அவனுக்குரிய ஓண நாளை விழாவாகக் கொண்டாடினர்.[39]

யமுனை ஆற்றினுள் ஆயமகளிர் தழை ஆடை உடுத்தற்காக,

"............................................................. வடா அது
வன்புனற் றொருமுனை வார் மணல் அகன்றுறை
அண்டர் மகளிர் தண்டழை யுடீஇயர்
மரம் செல மித்த மாஅல்"[40]

என்று மாயோனை அகநானூறு குறிப்பிடும்.

திருமால் காடுறையும் ஆயர்களால் வழிபடப்பெறும் தெய்வம் முல்லைக்கலியில் ஆயர்கள் குரவையாடிப் போற்றிப் புகழ்ந்தமை சிறப்பாகக் குறிக்கப்பட்டிருக்கிறது.

"ஆயர் வாக்கில் தெய்வ மால் காட்டிற்று"[41]

என்றுரைப்பதால் ஆயர்கள் வழிபட்ட சிறப்புத்தெய்வம் திருமால் என்பது போதரும்.

திருமாலின் உருவக்காட்சிகளும் அவருடைய ஊர்தி, கொடி, படை முதலிய விபரங்களும், அவர் அசுரப்பகைகளை ஒழித்து உலகைக் காத்த வகையும், அவர்தம் அவதாரநிகழ்ச்சிகளும் சங்க பாடல்களில் அங்கங்கே விவரிக்கப்பட்டுள்ளன. திருமால் நெடிய வடிவுடையவர் இந்நெடுமால் நீலமணி, கார்மேகம், கருங்கடல், காரிருள், கரியபூவை மலர்(காயாம்பூ) இவற்றைப் போன்ற வண்ணமுடையவர்.

இவர் தலைமேல் தோன்றும் திருமுடி நீலமலையில் மேல் படிந்துள்ள சூரியனது ஒளியைப்போல் பிரகாசிக்கிறது. இவர்தம் மலைபோன்ற மார்பில் அழகிய மாலைகளும் துளசி மாலை முதலியனவும் பொன்னாபரணங்களும் பொருந்தி விளங்குகின்றன. இதில் கௌஸ்து மணி என்னும் பெரும் பதக்கமும் விளங்குகிறது. இங்ஙனம் பல்வேறு அணிகள் விளங்கும். அவர்தம் மார்பு கரிய வானத்தில் தோன்றும் இந்திரவில்லைப் போலக் காட்சி தருகிறது என்கிறார் புலவர்.[42]

## சேயோன்

மலையும் மலை சார்ந்த நிலமும் குறிஞ்சி எனப்படும். "சேயோன் மேய மைவரை உலகம்"[43] என்று குறிஞ்சி நிலத்தை அதற்குரிய கடவுளோடு சார்த்திக் கூறுவர் தொல்காப்பியர். சேயோன் – செம்மைநிறம் உடையவன் என்பது பொருள். மலை நிலத்திற்குரியவன் முருகன் என்பதை,

"விண்பொரு நெடுவரை குறிஞ்சிக் கிழவ"[44]

"பழமுதிர் சோலை மலைகிழ வோனே"[45]

"பிறங்குமலை மீமிசைக் கடவுள்"[46]

"காடுகெழு நெடுவேள்"[47]

என்னும் இலக்கியச் சான்றுகள் எடுத்துக்காட்டுகின்றன.

"முருகு" என்னும் பெயர் தொன்மையானது என்பதை,

"அரும்பெறல் மரபின் பெரும்பெயர் முருகு"[48]

என்பதால் அறியலாம். அம் முருகில் திகழும் அழகையும், அவ்வழகினூடே பிரிவின்றி விரவி நிற்கும் மணம், இளமை, கடவுட்தன்மை ஆகியவற்றையும்,

"அணங்குவில் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி"[49]

என்று திருமுருகாற்றுப்படை சிறப்பிக்கின்றது.

சங்க இலக்கியங்களில் முருகு(நற்–225:1) முருகன்(புறம்–23:4), வேள்(பட்டி–154), நெடியோன்(பரி–19:283), கந்தன் (புறம் 380:12), குமரன்(பரி–91: 81–82), இயவுள் (முருகு–274), மதவலி (முருகு–275)என்னும் பெயர்களில் இலக்கியங்கள் செப்புகின்றன.

சங்க இலக்கியத்தில் பயின்றுவரும் "முருகு"என்னும் சொல் அழகு என்று பொருள்படும். இப்பண்புச்சொல் முருகனைக் குறிப்பதற்கு வழங்கப்படுகிறது. "முருகு என்பதன் பொருள் தெய்வத்தன்மை கொண்டது. அது முருகக்கடவுளுக்கு ஆகுபெயராக அமைந்தது"[50] என்ற நச்சினார்க்கினியர் விளக்கம் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

முருகன் வீரம்மிக்க கடவுளாக–போர்க்கடவுளாகச் சங்கநூல்களில் புகழப்படுகிறான். "வெல்போர்ச் சேஅய்"[51] "செருவெஞ் சேய்"[52] என்று பேராற்றல் மிக்கவனாக முருகன் போற்றப்படுகிறான்.

முருக பெருமானின் ஆடையை,

"வெண்டுகில்"[53] எனக் கலித்தொகையும்

முருகப்பெருமான் தலையில் கடம்பின் கண்ணியும் காந்தள் கண்ணியும் சூடுவன் என்பதை,

"கார் நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறி மனை வந்தோய்"[54]

என்னும் பாடல் குறிப்பிடுகிறது.

முருகப்பெருமான் கொண்டுள்ள ஆயுதங்களுள் வேல் மிகவும் சிறப்பாகப் போற்றப்பட்டுள்ளது.

"இன் இசை முரசின் சுடர்ப்பூண் சேஎய்
ஒன்னார்க்கு ஏந்திய இலங்கு இலைஎஃகின்"[55]

தேவயானையை இந்திரன் கொடுக்க மணந்து கொண்டதன்றி, வள்ளி நாச்சியாரை இவன் களவினால் கூடி உடன் கொண்டுபோன நிகழ்ச்சியை,

" முருகு புணர்ந்து இயன்றவள்ளி போல"[56]

என உவமையாக எடுத்துக்காட்டுகின்றார் அம்மள்ளனார்.

## வேந்தன்

வயலும் வயல் சார்ந்த இடமுமாகிய மருதநிலத்தெய்வம் வேந்தன் இதனை,

"வேந்தன் மேய தீம்புனல் உலகமும்"[57]

என்பர் தொல்காப்பியர். வேந்தனை இந்திரன் என உரையாசிரியர்கள் குறிக்கின்றனர். வேந்தன் என்பது மன்னன், அரசன் என்று பொருள்படும். முற்காலத்தில் அரசன் இறைவனாகக் கருதப்பட்டான். மன்னன், வேந்தன், அரசன், என்ற படிநிலை வளர்ச்சியில் வேந்தன் மருதநிலத் தலைமை பெற்றவனாதல் கூடும். வேந்தன் – அரசன் இறைவன் என்னும் பெயர் அரசனுக்கும் கடவுட்கும், கோயில் என்னும் பெயர் அரண்மனைக்கும்

தெய்வக் கோட்டத்திற்கும் பொதுவாயின.வேந்தன் இறந்தபின் வானவர்க்கும் அரசனாகி வானுலகத்தினின்று மழையைப் பொழிவிக்கின்றான் என்று பண்டை மருதநில மக்கள் கருதியதால் மழைத் தெய்வத்தை வேந்தன் என்னும் பெயரால் வணங்கி வந்தனர்.

நாகரிகம் உருப்பெறுதற்கிடனாகிய மருதநில மக்கள் தம் நாட்டு வேந்தனையே மதித்துப் போற்றி அவனது ஆனைவழி ஒழுகினமையால் "வேந்தன் மேய தீம்புனல் உலகம்" என்ற தொடரால் மருதநிலத்துக்குத் தெய்வமாவான் வேந்தனேஎனத் தொல்காப்பியர் குறிப்பிடுவாராயினர்.[58] இக்கருத்துக்கள் மன்னனைத் தெய்வமாக வணங்கியதனைத் தெளிவுபடுத்துகின்றன. சங்க இலக்கியங்களில் வேந்தன் என்ற சொல் மருதநிலக் கடவுளைக் குறிக்கவில்லை. மாறாக அது நாட்டை ஆளும் மன்னனையே – அரசனையே குறிக்கின்றது. மருதநிலத்தெய்வமாக இந்திரன் கூறப்படுகின்றான். இந்திரனுக்குக்கோயில் இருந்தமையை, வச்சிரத்தடக்கை நெடியோன் கோயிலுள்[59] என்று புறநானூறும். அவனுக்குவிழா எடுத்தனர் என்ற செய்தியையும்" இந்திர விழவில் பூவினன்ன"[60] ஐங்குறுநூறும் மொழிகின்றன.

மழைக்கடவுளாக இந்திரன் வழிப்படப்பெற்றனன் என்பதையும் அவனுக்குச் சோழ நாட்டில் விழா எடுத்தனர் என்பதையும் சிலப்பதிகார இந்திரவிழா எடுத்த காதையானும் மணிமேகலையில் உள்ள விழாவறை காதையானும் அறியலாம்.

## வருணன்

தொல்காப்பியம் நெய்தல் நிலத்தெய்வமான வருணனை,

"வருணன் மேய பெருமணல் உலகமும்"[61]

என்றுரைக்கிறது. இதற்குக் "கருங் கடற் கடவுள் காதலித்த நெடுங் கோட்டெக்கர் என்று உரை கூறியுள்ளார் நச்சினார்க்கினியர். இனி நெய்தல் நிலத்தில் நுளையர்க்கு வலை வளர்ந்தப்பின் அம்மகளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக்கோடு நட்டுப்பரவுக்கடன்

கொடுத்தலின்,ஆண்டு வருணன் வெளிப்படுமென்றார் என்று விளக்கங்கூறி அதற்கு எடுத்துக்காட்டாகப் பட்டினப்பாலையின், "சினைச்சுறவின் கோடுநட்டு மனைச்சேர்த்திய வல்லணங்கினான்"[61A] என்ற அடிகளையும் குறிப்பிட்டிருக்கிறார்.

"கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கி "

"அணங்குடைப் பனித்துறை கைதொழுதேத்தி

யாயு மாயமொ டயரும்"

என்ற அகநானூற்றுப்பாடல் வரிகளையும் மேற்கோள் காட்டியுள்ளார்.[62]

கடலும் கடல் சார்ந்த நெய்தல் நிலத்தில் வாழும் பரவதர் தெய்வ நம்பிக்கை உடையவர்கள். அவர்கள் கடல் தெய்வத்தை வணங்கினர் என்ற செய்தியை,

"பெருங்கடற் றெய்வம் நீர்நோக்கித் தெளிந்து"[63]

என்று கலித்தொகை புலப்படுத்துகின்றது.

தொல்காப்பியம் குறிப்பிடும் "வருணன்" என்ற பெயரைச் சங்க இலக்கியம் குறிப்பிடாது "பெருங்கடற் தெய்வம்" என்றும் "பெருங்கடற் பரப்பில் அமர்ந்து முறை யணங்கு" என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது எண்ணத்தக்கது.

இன்றைக்கும் பரவத மக்கள் கடலைத் தெய்வமாக வழிபடும் வழக்கம் இருந்து வருகிறது. எனினும் வருண வழிபாடு என்று அதனை அவர்கள் அறுதியிட்டுக் கூறுவதில்லை. அவர்கள் அப்படி எண்ணுவதுமில்லை என்றும் கூறலாம் என்னும் கருத்து ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.[64]

பரதவர் பனை, புன்னை போன்ற மரங்களில்படும்பெருந்தெய்வத்தைப் போற்றி வழிபடும் மரபினர் என்பதையும் சங்க இலக்கியப்பாடல்கள் கூறுகின்றன.[65]

## கொற்றவை

தொல்காப்பியர் பாலைக்கு நிலம் வரையறுக்கவில்லை. எனவே தெய்வமும் கூறாது விட்டனர். ஆயின் உரையாசிரியர்கள் பாலை நிலத்திற்குத் தெய்வமாகக் கொற்றவையைக் கூறியுள்ளனர். பாலை நிலத்து மக்கள் வணங்கிய தெய்வத்தின் பெயரைக் "காடு கிழாள்" என்றும் "கொற்றவை" என்றும் "காளி" என்றும் வழங்கிப் போற்றினர்.

கொற்றவை தமிழரின் வெற்றித்தெய்வம் (கொற்றம்–வெற்றி, அவ்வை–அம்மை) வெற்றித்தாயாகிய கொற்றவைக்குப் பலி கொடுத்து வாழ்த்தியதைக் "கொற்றவை நிலை" என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.[67]

## உணவு

### குறிஞ்சி

குறிஞ்சிநிலத் தொழில்களுக்கேற்ப உணவு உண்ணும் வழக்கம் மலைவாழ் மக்களிடத்து நிலவியது. அம்மக்கள் மலைபடு பொருள்களாகிய தினை, மா, பலா, வாழை, தேன் ஆகியவற்றை உண்டனர். இவ்வுணவுப்பொருள்களுள் தினையே முக்கிய உணவாக விளங்கியது. மான் முதலிய மிருகங்களின் தசையோடு முள்ளம் பன்றியின் தசையும் இவர்கள் விரும்பும் உணவுப்பொருளாகும்.[68]

நெய்யில் வெந்த இறைச்சியும் உண்டனர் என்ற செய்தியும் மலைபடுகடாம் மூலம் பெறப்படுகிறது சிறப்பு நாட்களில் குறிஞ்சி நிலமக்கள் நெய்மிக்க உணவு உண்டதை,

"பைந்நிணம் ஒழுகிய நெய்ம்மலி அடிசில்
வசைஇல் வான்திணைப் புரையோர் கடும்பொடு
விருந்து உண்டு எஞ்சிய மிச்சில்"[69]

என்ற குறிஞ்சிப் பாட்டின் வரிகள் புலப்படுத்துகின்றன. தேனையும் கிழங்கையும் பிற நிலத்தார்க்கு விற்றும், மீன் நெய்யையும், நறவையும் வாங்கிச் சென்றும் அதனை உணவாகக் குறிஞ்சி நில மக்கள் பயன்படுத்தினர். முதன்முதலாக மக்கள் தோன்றிய இடம் மலையுச்சியே என்பர். ஆகவே இங்குமக்கள் விலங்குகளோடு விலங்குகளாக வாழ்ந்து நாளடைவில் விலங்கு வாழ்வினின்றும் வேறுபட்ட நாகரிக வாழ்வைத் தொடங்கிய இடமும் குறிஞ்சி நிலப்பகுதியெனலாம். மூங்கில்கள் உரசுவதால் நெருப்பு உண்டாவதைக் கண்டே நெருப்பை உண்டாக்கிக் கொள்வதற்குத் தீக்கடைக்கோலைக் கண்டுபிடித்துக் கொண்டதும் இங்கேதான். விலங்குகளை வேட்டையாடி அவைகளைக் கொன்று, உணவாக்கி, உண்ண ஆரம்பித்ததிலிருந்து உணவுப்பொருள்கள் பற்றிய இவர்களது அறிவு விரிவுபட ஆரம்பித்தது. சிறுமியர் தினைப்புனங்காத்தலும், ஆடவர் வேட்டையாடுதலும் பொழுதுபோக்கோடு உணவைத்தரும் கருவிகளுமாயின.[70]

குன்றக்குறவர் மா, பலா ஆகிய கனிகளையும், தேனினையும் பாம்பினது, சினத்தையொத்த கள்ளினையும், மலைத்தெய்வத்திற்குப் படைத்து மகிழ்வர். இவ்வாறு படைத்ததன் பின் தழையாடை அணிந்த மகளிர் மிகுதியாக கள் உண்டு களிப்பர்.[71] இவ்வாறு குறிஞ்சிநில மக்கள் மலைபடு பொருள்களையும் வேட்டையாடிய விலங்குகளின் இறைச்சியையும் உணவாகக் கொண்டிமையை அறியமுடிகின்றது.

## முல்லை

முல்லைநில மக்கள் தினையரிசிச்சோறு, பால், தயிர், மோர், நெய், வான்கோழி இறைச்சி, முயல்இறைச்சி, மான்இறைச்சி முதலியவற்றையும் பயன்படுத்தினர்.

இம்மக்களின் உணவுப்பொருள்களுள் பால் முக்கிய இடம் பெறுகின்றது என்றால் அது மிகையாகாது. பாலே இவரது வாழ்விற்கு மூல ஆதாரமாக விளங்கியது. பாலைக் கொணர்ந்து வந்து பால்சோற்றைப் பெற்று மீண்டு செல்வான் இடைமகன் எனக்

குறுந்தொகை நவில்கிறது.[72] பால் தயிர் முதலியவற்றைக் கொடுத்துப் பண்டமாற்றினால் பெறப்படும் தானியவகைகளையும் உண்பர்.[73]

அடுத்து முல்லை நிலத்தில் வரகு மிகுதியாக விளையும். எனவே அந்நில மக்களின் சிறந்த உணவாக வரகு இருந்தமையை,

"........................ முல்லையம் புறவிற்
கவைக்கதிர் வரகின் சீறூர்"[74]

"களைகால் கழீஇய பெரும்புன வரகின்
கவைகதிர்"[75]

என்னும் அகநானூற்று பாடல் தொடரால் அறியலாம்.

மேலும் தயிர் உலையில் வரகு அரிசியோடு ஈயலையும் இட்டுச் சமைத்த இன்புளி வெஞ்சோற்றினை நெய் பெய்துண்டமை பற்றியகுறிப்பு அகநானூற்றில் காணப்படுகிறது.[76] பால் தயிர் முதலியவையும் பண்டமாற்றினால் பெறப்படும் தானிய வகைகளும் அவர்களுடைய உணவுப்பொருள்களாகும்.

## மருதம்

மருதநிலம் நாகரிகத்தின் வளர்ப்புப் பண்ணையாகும். உழுதொழில் சிறந்து உணவும் பிறவும் நிறையப் பெற்று, ஓய்வும் வாய்க்கப் பெற்றவர் மருத நிலத்தவரேயாவர். இந்நிலத்தின் முதன்மையான உணவுப் பொருட்கள் செந்நெல்லும், வெண்நெல்லும் ஆகும். செந்நெல் சிறிது மஞ்சள் நிறமுடைய சிறந்த தானியமாகும். வெண்ணெல் ஒருவகையான காட்டரிசி என்பர் சே. நமசிவாயம்.[77] மடியா வினைஞர்தந்த வெண்ணெல்லும் வதக்கப்பட்ட மனைவாழ்வோழி இறைச்சியும் பெறுகுவீர் எனப்பாணன் ஒருவன் கூறுகின்றான் இதனை,

"விளைஓர் தந்த வெண்ணெல் வல்சி

மனைவா ழளகின் வாட்டொடும் பெறுகுவிர்"[78]

என்னும் அடிகள் உணர்த்தி நிற்கின்றன.

இம்மக்கள் சோற்றுடன் இறைச்சியைக் கலந்து சமைத்தலும் உண்டு. உழுந்து அவரை முதலிய பருப்பு வகைகளைக் கலந்து சமைக்கும் கலவைச் சோறுகளும் வழக்கத்தில் இருந்தன.[79] இச்சோற்றுடன் நெய்யையும் கலந்து சமைப்பர். இத்துடன் வரால் மீனை வஞ்சி மரத்தின் விறகால் அட்டு உண்டமையும் மீன் துண்டங்களை உண்டு மகிழ்ந்தமையும்[80] களமர் எனப்படும் உழவர் அரிக்கப்பட்ட விரும்பத்தக்க மதுவையஆமை இறைச்சியுடன் வேட்கை தீரஉண்பதையும் அறியமுடிகிறது.[81]

மேலும் நத்தை ஆமை முதலியவற்றின் மேல் ஓட்டை உடைத்தெறிந்துவிட்டு உள்ளே இருக்கும் தசையைச்சமைத்தனர் என்று நற்றிணையும் பட்டினப்பாலையும் உரைக்கின்றன.[82]

மருத நில மக்களால் உலகில் நுண்கலைகளும், பிறகலைகளும் செம்மையாய் வளர்ச்சியடைந்தன என்ற கூற்றுக்கு அடிப்படை அங்கு உணவுத் தட்டுப்பாடு என்பது இல்லாதது எனலாம். உணவு பற்றிய கவலை இல்லாதவராய் இவர்கள் வாழ்ந்தனர். நீர் வளம் மிக்கது மருதமாதலால் ஆறும், குளமும், கிணறும் எங்கும் மக்களைப் புறத்தூய்மை பெறச் செய்ததோடு உணவுப் பொருட்களையும் பெருக்கி "வளமிக்கவர்" என்ற பெயரை மருதநில மக்களுக்கு ஈட்டித் தந்தது. உலகில் புகழ்பெற்ற பழைய நாகரிகங்கள் அனைத்தும் மருத நிலத்திலேதான் தோன்றின என்பது வரலாறு கூறும் உண்மையாகும்.[83]

## நெய்தல்

நெய்தல்நில மக்கள் பரதவர் என்று அழைக்கப்படுவர். மழைக் கடவுளைத் தெய்வமாகக் கொண்ட இவர்கள் கடலிற் சென்று வலைவீசி மீன்பிடித்தனர். அவற்றை விற்றனர், உப்பை விளைவித்தனர், மீன்பிடித்தல், அவற்றை உலர்த்துதல், மீனையும்,

உப்பையும் விற்றல் என்பவற்றைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். மீன் இவர்களது முக்கிய உணவாகும்.பாக்கம் இவர்களது குடியிருப்பாகும்.

"கடல் இறவின் சூடு தின்றும்

வயல் ஆமைப் புழுக்கு உண்டும்"[84]

என பட்டினப்பாலை காவிரிப்பூம்பட்டினத்து மீனவர் கடல் இறா, வயல் ஆமை ஆகிய இரண்டையும் பக்குவம் செய்து உண்டனர். நெய்தல் நில மக்கள் தாம் மேற்கொண்ட தொழிலுக்கேற்ப மீனை உண்டும், மீனை அருகிலுள்ள நிலங்களில் மாறிப்பெற்ற நெல்லினை உணவாகக்கொண்டும் வாழ்ந்தனர். இதனை,

"கொழுமீன் வல்சி"[85] என்னும் தொடர் உணர்த்தும். மேலும் உப்பினை விற்று அதற்கீடாக நெல்லின் வெண்சோறும் மீனும் அவர்களின் உணவாக அமைந்ததை,

"உப்பு நொடை நெல்லின் மூரல் வெண்சோறு

அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து

கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்"[86]

என்றும் அகநானூறு குறிப்பிடுகின்றது.

பனங்கள்ளையும் இவர்கள் அருந்தினர்.[87] நெல்லரிசியும் கள்ளையும் பருகினர்.[88] இவை மட்டுமின்றி உண்பதற்காகக் கள்ளுக்கடைகளில் மீன் இறைச்சியும் விலங்கு இறைச்சியும் பொரிக்கப்பட்டு விற்றன என்பதனை,

"மீன் தடிந்து, விடக்கு அறுத்து

ஊன் பொரிக்கும் ஒலி முன்றில்"[89]

என்னும் பட்டினப்பாலை அடிகள் குறிப்பிடும்.

இவ்வாறு கடல் சார்ந்த பெருள்களை உணவுப்பொருட்களாக உண்ட நெய்த நிலத்தவருக்கு வரலாற்றில் குறிப்பிட்ட இடம் உண்டெனில் அது இவர்கள் விளைவித்த

உப்பை வைத்து எனலாம். மீன்கோட் பறையை முழக்கி மீன் பிடித்த இவர்கள், மீனையும், உப்பையும் சேர்த்து உப்புக்கண்டம் போடும் முறையைக் கைக்கொண்டனர். இவர்களது வரலாற்றை நோக்கும் போது இறைச்சிப் பொருள்களை மிகுதியாக உண்டு வாழ்ந்தவர் என்பது தெளிவாகப் புலனாகிறது.

**பாலை**

பாலை என்ற நிலப்பிரிவு தமிழகத்தில் பழங்காலத்தில் இல்லை. முல்லை நிலமும் குறிஞ்சிநிலமும் தட்பவெட்ப மாறுபாடுகளால் வேறுபட்டுப்பாலை நிலமாக உருப்பெற்றது. பாலை நிலத்திற்குரிய மக்கள் எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் எனவும்,மீளி, விடலை, காளை எனவும் கூறப்படுகின்றன.இந்நிலத்தவர் முட்பன்றி ஊனை உணவாக உண்டனர் என்பதை,

"முளவுமா வல்சி யெயினர்"[90]

என்றும் கூட்டமாகிய மிருகங்களைக் கொன்று, தமையன்மார் கொடுத்த நிணம் அமைந்த ஊனாகிய உணவிற்படியும் பறவைகளை ஓப்பும் எயிற்றியர் பற்றி,

"கணமா தொலைச்சித் தன்னையர் தந்த
நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பு
நிலமா ணெயிற்றி"[91]

என ஐங்குறுநூறு கூறுகிறது.

வெள்ளிய நிணத்துடன் கூடிய உணவினை உடையவர் கானவர் என அகநானூறு கூறுகிறது.

பாலைநிலம்,

"நிழலில் ஓமை நீரில் நீளிடை"[92]

"அழலவி ரருஞ்சுரம்"[93]

ஆதலால் இங்கு வாழ் மக்களுக்கு வளமான வாழ்க்கை அமைதற்கு இல்லை, எனவே இவ்வழி வருகின்ற மக்கள், வணிகர் கூட்டம் ஆகியோரிடமிருந்து பொருளைப் பறித்து உண்கின்ற சூழலுக்கேற்ப ஆறலைத்தலை மேற்கொண்ட ஆறலைக்கள்வர்கள் தம் தொழில் வழி பெறும் உணவையே உண்டனர். இவர்தம் உணவு "ஆறலைத்தலால் வரும் பொருள்"[94] என உரையாசிரியர்களும் குறித்துச் சென்றுள்ளனர்.

ஆறலைக் கள்வர் தம் தொழிலுக்குக்கேற்பச் சினமும் வீரமும், வன்கண்மையும் உடையவர். இவர்களின் பண்புக்கேற்ப ஊனும் கள்ளும் உணவாகக் கொண்டனர்.

மயக்கத்தையும் களிப்பையும் மனவெழுச்சியையும் உண்டாக்கும் கள்ளினை மகளிர் விற்ற செய்தி சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. கள் விற்கும் மகளிர் அரியற் பெண்டிர்[95] என்றும் "அரியலாட்டியர்"[96] என்றும் அழைக்கப்பெற்றனர்.

கள் விற்கும் மகளிரிடம் கள்ளினைப் பெற்றுச் செங்கண் ஆடவர் செருவேட்டுச் சென்றனர்.[97] மருதநில உழவர் தம் களைப்பைப் போக்கக் கள் உண்டனர். சங்ககாலத்தில் விருந்தினர்க்கும் கள் மிகுதியாக வழங்கப்பெற்றதை இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகின்றது.

## விலங்கு

ஐவகை நிலங்களில் மக்களின் வாழ்க்கை நிலை அவ்வந்நிலத்திற்கேற்ப அமைந்திருந்தன. அவற்றில் விலங்குகள் நிலத்திற்கேற்பவும், தட்பவெப்ப நிலைக்கேற்பவும் தோன்றி வளர்ந்தன. இவ்விலங்குகளின் செயல்பாடுகள் மனித வாழ்க்கையுடன் தொடர்பு படுத்தப்பெற்றன. இலக்கியத்தில் காணப்படும் விலங்குகளை ஆய்வு செய்த பி.எஸ். சாமி முப்பத்தைந்து விலங்குகள் இருப்பதாக கூறியுள்ளார்.[98]

கார் காலத்தில் வினை முடிந்து திரும்பும் தலைவன் இரலைமான் தன் துணையுடன் புல் மேயும் காட்சியைக் காண்கின்றான். அவனுக்குத் தலைவியின் நினைவு எழுகிறது.

தலைமான் பெண்மானைத் தழுவி கொண்டிருக்கும் காட்சியைக் கொண்டு தலைவியின் நினைவு மீதுறவிரைந்து வருகிறான்.[100] தலைவியைக் காணவரும் தலைவன் மான்களின் கூட்டம் தடைபடாதவாறு மெதுவாகத் தேரைச்செலுத்துமாறு பாகனிடம் கூறுகிறான்.[101]

மலர்களில் தேனுண்ணும் வண்டுகள் அஞ்சி இரிந்தோடாதவாறு தேரில் கட்டியுள்ள மணியொலி எழாதவாறு தேரைச் செலுத்துகின்றான் தலைவன்.[102] இதன் மூலம் அவன் அருளுணர்வு வெளிப்படுகிறது.

தலைவன் தலைவியிடம் அன்பு காட்டுவதை ஆண்யானை பெண்யானையிடம் அன்பு பாராட்டுவதுடன் ஒப்பிட்டுச் சங்க இலக்கியம் கூறுகிறது. மடப்பிடி தழுவிய யானை, அமர்துணை தழுவிய யானை, பிடிபசி களைந்த யானை என்று பலபடியாக ஆண் யானையின் அன்பு பாராட்டல் பல அகநானூற்றுப் பாடல்களில் எடுத்துரைக்கப்பட்டு உள்ளன. அதே போல்,

தலைவனது பிரிவாற்றாமல் வருந்தும் தலைவிக்குத் தோழி, கருப்பொருள்களுள் தலைவன் அன்பு செய்தற்குத் தகுவனவற்றைக் கூறுதல் வழக்கம்.

“பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கும்
அன்பின தோழியவர் சென்ற வாறே”[103]

என்று யாமரத்தின் பட்டையை உரித்துப் பிடியின் பசியைப் போக்கின களிற்றின் செயல் தலைவனுக்குத் தலைவியைப் பாதுகாக்க வேண்டிய கடமையை நினைவூட்டும்.

தலைவன் தலைவியைத் தலையளி செய்வன் என்பதற்குத் தொடுகுழி மருங்கில் உள்ள துவ்வாக்கலங்கலால் மடப்பிடியை நீராட்டி எஞ்சியுள்ள சேறு கொண்டு நீராடி வேறுபட்ட தோற்றத்தையுடைய களிற்றின் அன்பு நிலை காட்டப்பெறுகின்றது.[104]

**மரம்**

வளரியல்பு அடிப்படையில் அமைந்த வகைப்பாட்டில் முதன்மை பெறுவது மர இனமாகும். பொதுவாக மர இனம் அதன்கண் அமைந்திருக்கும் வலிமையுடைய உள்ளீட்டைக் கொண்டே வரையறுக்கப்படுகிறது. திண்மையான உள்ளீட்டை உடையதும் பல்லாண்டுகள் வாழ்வதும் பதினைந்திலிருந்து இருபதடி உயரமேனும் வளர்வதுமாகிய தாவரம் மரம் என்று தாவரவியலார் குறிப்பிடுவர்.[105] இம்மரவகையைத் தொல்காப்பியர் கருப்பொருளுள் ஒன்றாக குறிப்பிட்டுள்ளார். இம்மரங்கள் ஐந்திணைகளிலும் மனித வாழ்வோடு தொடர்பு பெற்றுள்ளன.

உடன்போக்கினை மேற்கொண்டக் காலத்து தலைவன் வேங்கை மரத்தின் பின்னால் மறைந்திருந்து போர் செய்வதை நற்றிணைக் குறிப்பிடுகிறது.[106]

வேம்பின் கிளையில் அமர்ந்து இருந்த கூகையின் குரலும், பனைமரத்தில் இருக்கும் அன்றில் பறவையின் குரலும் திருமணம் நடவாத காலத்தில் தலைவியை வருத்தியதை நற்றிணை குறித்துள்ளது.[107]

கொன்றை மரம் குருந்த மரத்தோடு சேர்ந்து சுழலும் நிலை குளிர்ச்சியையுடைய கார் பருவத்தை வெளிக்காட்டியுள்ளது. இக்கார்பருவம் வந்தும் தலைவன் வராமையைத் தலைவிக்கு உணர்த்துகிறது.

கொன்றை மரம் மலரும் பருவம் கார்காலம். பிரிந்து சென்ற தலைவன் வினைமுடித்து மீண்டு வருவேன் என்று கூறிச்செல்லும் காலமும் இதுவே. கொன்றை மலர்ந்து கார்ப்பருவ வருகையை உணர்த்துகின்றது.[108]

"புதுப்பூங் கொன்றை
கானங் காரெனக் கூறினும்
யானோ தேறேன் அவர்பொய் வழங்கலரே"

என்ற தலைவியின் கூற்று தலைவன்பால் அவள் கொண்டிருக்கும் நம்பிக்கையைப் புலப்படுத்தும்.

வேனில் காலத்தில் மரத்தின் விழுது பூமியைத் தீண்டாது மரத்தடியில் உறங்கும் யானையைத் தீண்டும் என்பது தலைவன் திரும்பி வரும்வரை தலைவியின் துன்பத்தைத் தோழி ஆற்றியிருப்பாள் என்று பொருள் அமைய பாடல் அமைந்துள்ளது.

வெயிலின் விளக்கம் போல் விளங்கும் மலர்கள் பொருந்திய மராமரத்திலிருந்து குயில் செய்யும் ஆரவாரம் கார்காலம் வந்ததை உணர்த்துகிறது. இப்பருவம் அவர் இருக்கும் இடத்தில் இல்லையோ என்று தோழி புலம்புவதாக அமைந்துள்ளது.

புள்

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐவகை நிலங்களில் மக்களின் வாழ்க்கை நிலை அவ்வந்நிலத்திற்கேற்ப அமைந்திருந்தன. பறவைகள் நிலத்திற்கேற்பவும் தட்பவெட்பநிலைக்கேற்பவும் தோன்றி வளர்ந்தன. பறவையின் செயல்கள் மனித வாழ்க்கையுடன் தொடர்புபடுத்தப்பெற்றுள்ளன.

இணை பிரியாது வாழும் காதலர்களுக்குப் பிரிவின்றி வாழும் இயல்பினையுடைய அன்றிற் பறவைகளின் வாழ்க்கை எடுத்துக்காட்டாகக் கூறப்பெறுகின்றது.

"ஒன்றில் காலை அன்றில் போலப்
புலம்பு கொண் டுறையும் புள்கண் வாழ்க்கை
யானும் ஆற்றேன்"[110]

என்ற பாடலில் தலைவன் பிரியின் துணையைப் பிரிந்த அன்றில் பறவையைப் போல ஆற்றாது தலைவி இறந்துபடுவாள் என்ற கருத்து மறைமுகமாக வலியுறுத்தப் பெறுவதைக் காணலாம்.

நிறைசூழ் கொண்ட பெண்குருகு இரைதேட இயலாமல் வாடிக்கிடக்கின்றது. அதனையுணர்ந்த ஆண் குருகு கடலினின்றும் மீனைப்பிடித்துக் கடிதின் பறந்து வந்து தன் காதற்பெடைக்கு ஊட்டுகின்றது.[111] இதன் மூலம் களவு வாழ்க்கையில் இன்பம் துய்க்க இயலாத தலைவியை விரைந்து தலைவன் வரைந்து கொள்ள வேண்டுமென்ற கருத்து வலியுறுத்தப்பெறுகின்றது.

நெருப்பைப் போன்ற சிவந்த உச்சிக்கொண்டையை உடைய ஆண் அன்றில் இறாலினைப் போன்ற வளைந்த வாயினையுடைய பெண் அன்றிலோடு தடா மரத்தின் உயர்ந்த சினையில், தன் கூட்டிலிருந்து கொண்டு காதலரைப் பிரிந்தோர் நினைத்து வருந்துமாறு நடுயாமத்தே நரலும் என்று குறுந்தொகை விளக்கும்.[112]

தலைவனுடன் களவொழுக்கத்தில் தலைவி ஈடுபட்டிருப்பது ஒருவிதமாகத் தாய்க்குத் தெரிந்து விடுகிறது. தாய் அவளை இற்செறித்துவிடுகிறாள். தலைவனைச் சந்திக்காமல் தவிக்கிறாள். அத்தலைவி நீர்வாழ் காதற்பறவையான மகன்றிலையும் அதன் காதல் கடமையுணர்ச்சிகளையும் உன்னுகிறாள். மலர்களிலே பயிலும் அன்றில்கள் தாம் உடனுறையுங்காலத்து ஒரு மலர் இடைப்பட்டாலும் அது ஒரு கணநேரமேயாயினும் பலயாண்டுகள் கடந்தாற் போன்ற வேதனையை அனுபவிக்கும். இங்ஙனம் ஆற்றிக் கொண்டு தனித்து இருத்தலினும் தலைவனோடு சேர்ந்துள்ள காலத்திலேயே அவனுயிரும் என் உயிரும் ஒருங்கே நீங்கன் நலமாயிருக்குமே மீண்டும் காதலராகப் பிறக்கும் மாண்புறு வாய்ப்புக்கிட்டுமே என்று நினைக்கிறாள் தலைவனைப்பிரிந்து தவிக்கும் ஒரு தலைவி. மகன்றிற் பறவைகளின் மாசறு காதல் வாழ்வின் வழியைப் பின்பற்றித் தலைவனும் தலைவியும் வாழ வேண்டுமென்ற உட்கருத்தை இது மறைமுகமாக வற்புறுத்துகிறது.

குருகின் ஒலி தலைவனின் தேர் ஒலியை ஒத்திருக்கும் அதனைக்கேட்ட தலைவி தலைவன் வருவதாக மயங்குவாள்.

பிரிவால் பேதலித்துப் பெரிதும் புலம்பி உருகும் காதலர்களுக்கு நெய்தல் ஒழுக்கத்தின்நிகரற்ற பின்னணியாகவே, இவை பக்குவமாய்ப் படைக்கப்பட்டுள்ளன.

களவின்கண் அஞ்சியஞ்சி நெஞ்சம் குமுறிப் பிரிந்து வருந்தி வாழும் காதலர்கள், விரைந்து கடிமணம் புரிந்து நெடிதின்பம் துய்த்து வாழும் கற்பு நெறியாகிய இறுதி நிலையினை உறுதிப்படுத்தவே இவை படைக்கப்பட்டுள்ளன என்பது உணரற்பாலது.

ஆண் பறவைகள் தம் பெடைகளுடன் கடமையுணர்ச்சியோடும் கட்டுப் பாட்டோடும் வாழும் கண்ணிய முறையைச் சுட்டிக்காட்டும் நுணுக்கம் ஆறறிவு படைத்த மக்களுக்கு இவை இயற்கையன்னையளிக்கும் அரிய அறிவுரைகளாம். இல்லறத்தார் – காதலிருவர் கருத்தொருமித்துக் கடமையுணர்ச்சியுடன் ஆதரவாய் பயன்மிகு படிப்பினைகளை– அரும்பெரும் கருத்துகளை நுண்மாண்நுழைபுலம் கொண்ட புலவர் பெருமக்கள் நமக்கு இப்பறவைகளின் வாயிலாய் இனிதுணர்த்துகின்றனர்.

**பறை**

ஐந்திணைகளுக்கேற்பத் தொழில்களும் அத்தொழில்களுக்கேற்பப் பறைகளும் அமைந்திருந்தன. குறிஞ்சி நிலத்திற்குரிய பறை முருகியமும் தொண்டகப்பறையுமாகும். குறிஞ்சி நிலத்தின் சிறப்புத் தொழில் தினை விளைத்தல், தினைப்புனம் காத்தல் ஆகும். தினைப்புனம் காப்போர் இரவில் விலங்குகள் தினைக் கொல்லையை அணுகாதிருத்தற் பொருட்டுத் தொண்டகப் பறையை முழக்குவர்.[115] குறிஞ்சிநில மக்கள் தொண்டகப்பறை ஒலிக்க. அவ்வொலிக்கேற்ப ஆடவரும் மகளிரும் இணைந்து ஆடுவர்.[116]

தழல் என்பது கையால் சுற்றும் பொழுது தன்னிடத்துப் பிறக்கும் ஓசையால் கிளி முதலியவற்றை ஓட்டுங்கருவியாகும். சிலர் இதனைக் கவண் என்றுங்கூறுவர்.[117]

தினைப்புனங்களில் கிளி போன்ற பறவைகளே அன்றி விலங்குகளும் பயிரைக் கவர்ந்துண்பன விலங்குகள் புகுந்துவிட்டால் அவற்றைக் கணை எய்தி விரட்டுவர். யானை போன்ற விலங்குகளைக் கொள்ளிக்கட்டையினால் விரட்டுவர். இக்கொள்ளிக்கட்டை ஞெகிழி என்ற சொல்லால் சங்க இலக்கியத்தில் குறிக்கப்பட்டுள்ளது.[118] பன்றியைப் பிடிக்கப் பெரிய கல்லாலான ஒரு பொறியை வைத்திருப்பர். அப்பொறி அடாஅர் என்ற சொல்லால் வழங்கப்பட்டது.[119]

முரசின் முழக்கம் இடி முழக்கத்திற்கும் அருவி ஒலிக்கும் உவமிக்கப்பட்டுள்ளது.[120] ஊர் துயிலும் வேலையில் அச்சம் விளைவிக்கும் தன்மையுடன் குறிஞ்சிப்பண்ணைப் பாடிக்கொண்டு வரும் பாதுகாப்பான அகன்ற இல்லத்தைக்காக்கும் கானவர் தூங்கார்.[121] முல்லை நிலத்தில் கோவலர்களின் குழலோசை மாலை நேரத்தில் தலைவிக்கு வருத்தத்தை மிகச்செய்யும். இதனை நற்றிணை,

"குழல் தொடங்கினரே கோவலர்"[122]

என்றுரைக்கும்.

மருதநில பறை மணமுழவு மணமுழவுடன் முரசமும் ஒலிக்கத் திருமணம் நிகழ்வதைச் சங்க இலக்கியம் எடுத்துரைக்கின்றது.[123]

நெய்தல் நிலத்தினர் தொழில் மீன்பிடித்தலாகும். மீன்கோட்டு பறை அவர்களுக்கு உரியதாகும்.

பாலைத்திணைக்கு ஆறலைத்தல் தொழிலே சிறப்பானதாகலின் அதற்கு ஏற்ப ஆறலைப்பறையும் சூறைக்கோட்பறையும் உரியதாகின்றன. பாலைத் திணைக்குப் பறையாகச் சூறைக்கோட்பறையும் நிரைகோட்பறையும் எடுத்தியம்புவர் நச்சினார்க்கினியர்.[124] சீறூரிலுள்ள மறவர்களது எறுகோட்பறையொலிக்கு ஆண்பருந்து அஞ்சி மேலெழுந்து பறந்து செல்வதாக அகநானூறு மொழிகின்றது.

## செய்தி

"செய்தி" என்பது அவ்வந் நிலங்களுக்குரிய தொழிலைக் குறிப்பதாகத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் கூறுவர். அவர்கள் கூறியாங்கு முல்லைக்கு நிரை மேய்த்தலும், குறிஞ்சிக்குத் தேனழித்தலும், மருதத்திற்கு உழவுத்தொழிலும், நெய்தலுக்கு மீன்பிடித்தலும், பாலைக்கு ஆறலைத்தலும் செய்தியாகக் கொள்ளப்படுகின்றன. "செய்" என்னும் பகுதியும் "தி" என்னும் விகுதியும் கொண்டது "செய்தி" என்னும் சொல் செய்என்னும் சொல்லிற்குத் தொழில் என்பது பொருள். இதனை,

"பெருஞ்செய் நெல்லின் முகவைப்பாட்டும்"[126]

என்னும் சிலப்பதிகார அடி உணர்த்தும். எனவே வாழும் நிலத்தியல்பிற்கும் பருவ சூழ்நிலைகளுக்கும் ஏற்பவே அந்நில மக்களின் உள்ளத்து உணர்ச்சிகளும் தொழில் முறைகளும் உருவாகின்றன.

## குறிஞ்சி

குறிஞ்சி நிலம் மலையும் மலை சார்ந்த நிலமுமாகும். தேன்அழித்தல், கிழங்கு அகழ்தல் தினை முதலியன விளைத்தல்.கிளிகடிதல் குறிஞ்சி நிலத்தொழில்களாகக் கூறப்பெற்றுள்ளன. குறிஞ்சி நிலத்து வாழும் கானவர் ஐவனம், தினை முதலிய பயிர்களைக் காக்கும் பொருட்டுத் தினைப்புனத்தில் பரண் அமைத்து, அதன்கண் இருந்து கவண்கல் ஓச்சி விலங்கினங்களைக் கடிந்து காப்பர். இரவுக்காலங்களில் பரண்மீது விளக்கு ஒளியினை வைத்திருப்பதும், பன்றியின் வருதிறலும் நோக்கிக் காத்திருந்து கவண்கல் எறிவதும் வழக்கம்.[127]

வழிபறிப்பார் கொன்று குவிக்கும் இடங்களும், பிசாசும், பெரும்பாம்பும் போன்ற பல இடும்பைகளை உடையது மலையிடம்[128] உயர்ந்த பரண்மீது ஏறித்தினை உண்ணவரும் யானைகளின் மீது கவணுமிழ்கற்களை வீசுவர்.[129]

இரவில் கானவர் தினைப்புலம் காப்பதும் வழக்கம். மகளிர் பகலில் தினைக்கதிரைக் கொத்தித் தின்னவரும் கிளி கடிந்து தினைப்புனம் காப்பது வழக்கம். மகளிர் கையில் தட்டை,குளிர் என்னும் கிளி கடி கருவிகளைக் கொண்டு காத்தே செயலை,

> "சிறு தினைப் படுகிளி கடீஇயர் பன்மாண்
>
> குளிர்கொள் தட்டை மதனில் புடையா"[130]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**முல்லை**

முல்லைநில மக்கள் ஆடு,மாடு மேய்த்தலைத் தொழிலாகக்கொண்டவர். இவர்கள் ஆயர், இடையர், கோவலர் என அழைக்கப்பெறுபவர். ஆயர் அறநெஞ்சம் உடையவர் என்பதை 'அறவை நெஞ்சத்தாயர்' என்னும் தொடர் உணர்த்தும் இவர் பாலை கொடுத்து சோற்றைப்பெற்ற நிலையினைக் குறுந்தொகை குறிப்பிடுகிறது.[132] ஆம்பற்பண்ணை எழுப்பும் கோவலரைப் பற்றி குறிஞ்சிப்பாட்டு குறிப்பிட்டுள்ளது.[133]

**மருதம்**

வயலும் வயல் சார்ந்த நிலமுமாகிய மருதநிலத்தின் தொழில் உழவு. உழவுத்தொழில் மருதநிலத்தின் சிறப்புத் தொழிலாதலால் அத்தொழில் தொடர்பான செய்திகள் பல மருதத்திணைப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. மருதத்திற்குரிய செய்தியாக, நடுதலும் களைக்கட்டலும், அரிதலும் கடாவிடுதலும் குறிக்கப்பெற்றுள்ளது. பண்டைய தமிழர் நிலத்தை உழுவதற்கு எருதுகளையன்றி எருமைகளையும் பயன்படுத்தினர். நஞ்சையில் களையாக முளைத்திருந்த கோரை, நெய்தல் போன்றவற்றைக் களைந்தறிந்தனர்.

மழை பெய்தவுடன் பலமுறை நன்றாக உழப்பட்ட வயலினது செம்மண் நன்கு நெகிழ்ந்து கொடுக்கும். இக்கருத்தினை,

"____________ உறுபெயல்

தண்துளிக்கு ஏற்ற பலவுழு செஞ்செய்

மண்போல் நெகிழ்ந்து_____"[134]

என்ற அடிகள் உணர்த்தும்.

அக்காலத்தில் எருவாகப் பயன்படுத்தப்பட்டவை கால்நடைகளின் சாணமும், உலர்ந்து விழுந்த இலைதழைகளும் ஆகும். கால்நடைகளின் சாணத்தைத் தாதெரு என்றனர். எருக்களைக் கொட்டி வைப்பதற்கென்றே விடப்பட்ட மன்றங்களில் அவற்றைச் சேர்த்து வைப்பர். இதனை 'தாதெரு மன்றம்' என்று கலித்தொகை குறிக்கும்.[135]

வயல்களுக்குக் குளத்திலிருந்தும் கிணற்றிலிருந்தும் நீரிறைத்துப் பாய்ச்சப் பெற்றது. நீரிறைப்போர் பாடிக்கொண்டே இறைப்பர். நீரினை முகந்திறைக்கின்றவர் வரிசையாக நின்று இறைக்கின்றனர். இதனை மதுரைக்காஞ்சி,

"நீர்ந்தெவ்வு நிரைத்தொழுவர்

பாடுசிலம்பு மிசையேற்றத்

தோடுவழங்கும் அகலாம்பியிற்

கயன் அகைய வயல்நிறைக்கும்"[136]

என்று குறிப்பிடும்.

பலமுறை நன்றாக உழப்பட்டு, களைநீக்கி, உரமிட்டு, நீர் பாய்ச்சப்பெற்ற வயல்களில் நாற்றுகளை நன்றாக அழுந்த நடுவர் என்பதை,

"நீருறு செறுவில் நாறுமுடி யழுத்த"[137]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

உழவர்கள் வயலிடத்து விளைந்த செந்நெல்லை அரிந்து குவித்துக் கடாவிட்டுப் பிரித்துக் காற்றில் தூற்றுவர். நீரின்றிச் செந்நெல் விளையாது. காஞ்சி மரத்தின் குறுகிய மரத்துண்டுகளைக் குறுக்கே நட்டு உழவர் நெல் வயல்களில் நீரைத் தேக்கிய செய்தியும் சங்க இலக்கியத்தில் கூறப்பெற்றுள்ளன.[138] வயல்களுக்கு நீர் பாய்ச்சும் முறைகளும் விரிவாக இடம்பெற்றுள்ளன.[139] வயலை உழுதல் முதலாக உழுத நிலத்தைக் காலால் நிரவி மட்டஞ் செய்தல், நாற்று நடுதல், தொடுப்பினால் களைபறித்தல், நெற்கதிர் அரிதல், நெற்கட்டுகளை அடுக்குதல், போர் அடித்தல், வைக்கோலையும் கூளத்தையும் பிரித்துக் காற்றிலே தூற்றுதல் ஆகிய வினை வகைகளைப் பெரும்பாணாற்றுப்படை விளக்கமாக எடுத்துரைக்கின்றது.[140]

## நெய்தல்

கடலைச் சார்ந்த நெய்தல் நில மக்கள் நுளையர், பரதவர், வலைஞர், திமிலர், திமிலோன் என அழைக்கப்படுவர். பரதவர் என்ற பெயரே சங்க இலக்கியத்துள் பெரும்பான்மையும் இடம்பெற்றுள்ளது. கடலிலும் உப்பங்கழிகளிலும் மீன்பிடித்தலும், உப்பு விளைப்பதும் அவர்களது தொழில் ஆகும். இவற்றால் வரும் பொருள்களைக் கொண்டே அவர்கள் வாழ்க்கை நடத்தி வருவர். இவ்வுண்மையை ‘நெய்தற்கு உணவு– உப்பு விலையும் மீன்விலையும்’ என்று இளம்பூரணர் குறிப்பிடுவர்.[141]

பரதவர் மரக்கலங்களிலும், கட்டுமரங்களிலும் வலைகளை ஏற்றிச்சென்று கடலில் வீசி மீன் பிடிப்பர். ஆழ் கடலில் சென்று மீன் பிடிப்பதுமுண்டு, தூண்டிலில் சிறிய மீன்களை இரையாகக் குத்திக் கடலிலும் கழியிலும் எறிந்தும் மீன்பிடிப்பார்கள்.

வரிமணல் பரந்த மணல்மேடுகளில் தங்கள் சுற்றத்தார்களுடன் குழுமிக் கையாலும், படைக்கலங்களாலும் குத்தியும் குதித்தும், அடித்தும் இடித்தும் விளையாட்டுப் போர் விளைத்து மகிழ்ச்சியடைவர். அத்துடன் அமையாது உள்ளத்தே எழும் செருக்கினால்

தருக்கிப் பக்கத்தில் உள்ள பனைமரங்களிலே இலக்கு வைத்துக் கற்களை எறிந்து தங்கள் ஆற்றலை அளந்து ஆரவாரமிட்டுக் களித்துக் காலம் கழிப்பர். என்பதை,

"வரிமணல் அகன் திட்டை
இருங்கிளை இனன் ஒக்கல்
கருந்தொழில் கலிமாக்கள்
கடல்இறவின் சூடுதின்றும்
வயல்ஆமைப் புழுக்குண்டும்
வறள் அடும்பின் மலர் மலைந்தும்
புனல் ஆம்பல் பூச்சூடியும்
நீல்நிற விசும்பில் வலன்ஏர்பு திரி தரும்
நாள்மீன் விராஅய கோள்மீன் போல
மலர்தலை மன்றத்துப் பலர்உடன் குழீஇக்
கையிலும் கலத்திலும் மெய்உளத் தீண்டி
பெருஞ்சினத்தால் புறங்கொடா அது
இருஞ்செருவின் இகல் மொய்ம்பினோர்
கல்எறியும் கவண்வெரீஇப்
புள் இரியும் புகர்ப்போந்தை"[142]

எனும் பட்டினப்பாலைக் காட்டும்.

அயிலை என்பது ஒருவகைச் சிறுமீன். அதனைப் பிடிப்பதற்குச் சிறிய கண்களை உடைய வலைகளே தக்கன. அத்தகு வலையை பரதவர் பாய்ச்சி ஏராளமான அயிலை மீன்களைப் பிடித்தனர். அவற்றைத் தங்கள் தோணியில் நிரப்பிக் கொண்டு கரையை நோக்கி விரைந்து திரும்பினர். தம் பாக்கத்தே அம்மீனைக் கொட்டிக் குவித்துப் பங்கிட்டுக்கொண்டனர்.[143]

பரதவர்கள் கடலிலுள்ள மீன்களை யெல்லாம் வாரிக் கரையிற் கொட்டி விட்டனரோவென்று எண்ணக் கூடிய அளவு மீன்கொள்ளையினைத் தங்கள் பாக்கத்தே குவித்து விடுவர். விற்றதுபோக எஞ்சியவற்றையும், விற்பனைக்குரிய காலம் கடந்து பிடித்தவற்றையும் உப்பிட்டு மகளிர் வெயிலில் உணக்குவர். உணங்கிய மீனைக் கருவாடு என்பர்.

இவர்கள் மீன் பிடித்தலையே தலையாய தொழிலாய் கொண்டிருந்தனரேனும் முத்துச் சிப்பிகள் நிறைந்த கடற்பகுதிகளையொட்டி வாழ்ந்துவந்தவர்கள் முத்துக் குளிக்கும் தொழிலிலும், சங்கெடுக்கும் தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர்.

அளவுகடந்த முத்துச்சிப்பிகளையும் சங்குகளையும் மூழ்கியெடுத்துக் கரைக்குக் கொண்டு வந்து அவற்றைப் பங்கிட்டு விற்றுச் செல்வங்கொழித்து வாழ்ந்து வந்தனர்.

கொற்கை என்னும் துறைமுகம் முத்துக்குப் பெயர்போன துறையாய் விளங்கியது. கடலில் முத்துக்கள் மிகுதியாய் இருந்தமையால் அலைகள் அவற்றையள்ளிக் கரையில் வீசும்,கடற் கறை வெண்மணலெல்லாம் அம்முத்துக்கள் இமைத்துக் கொண்டிருக்கும். விரிந்த பெருங்கடலினின்றும் உருண்டு திகழும் முத்துக்களைத் திரட்டிக் கொண்டு வந்து, வண்டிசைக்கும் அகன்ற கரையினிடத்தே பரதவர்கள் பங்கிட்டுக் கொள்வர். சங்குகளும், சங்குகளில் மிக உயர்ந்த வலம்புரிகளும் கடலில் மிகுந்திருந்தன. அவை கரையிலும் மேய்ந்து வருவதுண்டு. வலம்புரிச் சங்குகள் மேய்ந்தமையால் அடிச்சுவடு பட்ட மணற் பரப்பு உழுததுபோல் காணப்படும். சங்குகளையும், முத்துக்களையும் பரதவர் தம் பாக்கத்தே விலைகூறி விற்பர். சங்குகளைக் கொண்டு அழகிய வளையல்கள் செய்வர். அவ்வளையல்களை மகளிர் அழகுற அணிந்து மகிழ்வுடன் விளங்குவர். என்ற செய்திகளை இலக்கியங்கள் இனிதெடுத்து இயம்புகின்றன.

"விரிதிரைக்

கண்முத்தம் கொண்டு ஞாங்கர்த்

தெள்இமிர் அகன்கரைப் பகுக்கும்

கானல் அம் பெருந்துறைப்பரதவன்"[144]

"வலம்புரி உழுத வார்மணல்"[145]

"துணைபுணர் எழுதரும் தூநிற வலம்புரி

இணைதிரள் மருப்பாக எறிவளி பாகனா

அயில் திணி நெடுங்கதவு அமைத்து அடைத்து அணிகொண்ட

எயில்இடு களிறேபோல் இடுமணல் நெடுங்கோட்டைப்

பயில்திரை நடுநன்னாள் பாய்ந்து உறூஉம் துறைவ"[146]

எனும் பாடல் இதனை விளக்கும்.

## பாலை

பாலை நிலத்தில் வாழும் மக்கள் எயினர், மறவர், வேடர் எனப்படுவர். பிற்காலத்தில் 'குறும்பர்' என்றும் வழங்கப்பெற்றனர். பாலைக்குரிய தொழில் ஆறலைத்தல். ஆறு என்பது வழியினைக் குறிக்கும். இங்கு இச்சொல் வழிச்செல்வோரின் மேலதாயிற்று. இதன்படி வழிச்செல்வோரை அலைத்து அவரிடத்துள்ள பொருளையும், பொருளில்லாத வழி உயிரையும் பறித்து அலைத்துண்ணுதல் ஆறலைத்தல் எனப்பெறும்.

வழிப்போக்கர்களிடத்து ஆறலை செய்தலை,

"வழங்குநர் இன்மையின் வெளவுநர் மடிய"[147]

"இலைமாண் பகழிச் சிலைமாண் இரீஇய
அன்பில் ஆடவர்"[148]

எனும் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

இப்பாலை நிலத்தின் தன்மைக்கேற்பவே அங்கு வாழும் ஆறலைக் கள்வரின் மனமும் வன்மை உடையதாக விளங்கியது. பிறர்க்குத் தீங்கிழைக்காமல் உழைத்து உயிர் வாழ அவர்களுக்கு இயலாததாயிற்று. எனவே அவ்வழிச் செல்லும் வழிப்போக்கரைப் பதைக்கப் பதைக்கக் கொன்று அவர்களின் கைப்பொருளைப் பறிப்பதைத் தம் வாழ்வாகக் கொண்டனர். ஆகவே 'கொலைவெங்கொள்கைக் கொடுந்தொழில் மறவர்களாய்'[149] அவர்கள் விளங்கினர். வழிவருவோரை அலைத்துண்ணுதற்கு இடப்பக்கம் ஏந்திய வில்லையுடையராய் வேறு ஒரு தொழிலையும் அறியாதவராக வாழ்ந்தனர் ஆறலைக் கள்வர்.'[150] கொடுவிலெயினர் என்று அழைக்கப்படும் அவர்கள் உலைக்கல்லன்ன பாறை மீது ஏறித் தம் அம்புகளைக் கூர்மையாக்கிக் கொள்வர். அவர்களின் செயல்குறித்து,

"கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற்"[152]

என்று கலித்தொகை கூறுகின்றது.

ஆறலைப்போர் வில்லால் மட்டுமின்றிக் கல்லாலும் வம்பலரை எறிவர்.[153] ஆறலைக்கள்வர் எய்யும் அம்பு வழிச்செல்வோரைக் கொன்று குவிக்கப் பருந்தினங்கள் தம் கிளையோடு உண்டு களிக்கும் என்று பாலை நிலத்தின் இயல்பும் அங்கு வாழும் மக்கள் தொழிலும் கூறப்பட்டுள்ளன.

## யாழின்பகுதி

தொல்காப்பியர் கருப்பொருள்களை வரிசையாகக் கூறுங்கால் 'யாழின் பகுதி'[155] என்று தொகுத்துச் சுட்டியுள்ளார். யாழின் பகுதி என்பதற்கு இளம்பூரணர் 'பண்' என்று பொருள் கொண்டு ஐந்நிலங்களுக்கும் உரியவாகக் குறிஞ்சி – குறிஞ்சிப்பண், முல்லை– சாதாரிப் பண், மருதம் – மருதப்பண், நெய்தல் – செவ்வழிப்பண், பாலை – பாலைப்பண், என்ற பண்களைக் குறிக்கின்றார்.[156]

நச்சினார்க்கினியர் 'யாழ்' என்றே பொருள் கொள்கிறார். எனவே ஐந்நிலங்களுக்கும் உரிய யாழ்களாகக் குறிஞ்சி– குறிஞ்சியாழ்; முல்லை–முல்லையாழ்; மருதம்–மருதயாழ்; நெய்தல்–நெய்தல்யாழ்; பாலை–பாலையாழ் என யாழின் பெயர்களைக் குறிப்பிடுகின்றார்.[157]

பகுதி என்று சுட்டியதற்கு இளம்பூரணர் மட்டுமே 'திறப்பண்'என்று உரை கூறியுள்ளார். அவர் எடுத்துக்காட்டுத் தரும்போது – முல்லைநிலத்துக்கு யாழ் – (பெரும்பண்) – முல்லை யாழாகும். முல்லை யாழின் பகுதி என்பது திறப்பண் ஆகும். அது முல்லையம் தீம் பாணியாகும் என்கிறார். எனவே 'யாழ்' என்பது நிலத்துக்குரிய பெரும் பண்ணையும் 'பகுதி' என்பது அதன்கிளைப்பண்ணையும் குறிப்பது என்ற விளக்கம் இளம்பூரணர் உரையில் மட்டுமே கிடைக்கின்றது.[158]

## யாழ்

மிகத்தொன்மையான இசைக்கருவிகளுள் ஒன்று யாழ். சீறியாழ், பேரியாழ் ஆகிய யாழ் வகைகள் யாழ் வடிவால் வேறுபட்டது என்பதை உணர்த்துகின்றன. யாழ் என்னும் சொல் இசைக்கருவியாகிய யாழை உணர்த்தியதோடு ஆகுபெயரால் யாழிலிருந்து பிறக்கும் இசையை – பண்ணை உணர்த்துவதாகக்கொள்வது ஏற்புடைத்து. "பண்ணுக்குப் பண்டை இசை நூல்களில் பல பெயர்கள். யாழ்,பாலை, அராகம்,இசை முதலியன. யாழில் பண் எழுந்ததால் ஆகுபெயராக 'யாழ்' எனப்பட்டது. தொல்காப்பியர் பண்களை'யாழ்' எனும் பெயரால் கூறினர்"[159] என்னும் கருத்து ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

## யாழ் இசைப்போர்

யாழிசைப்பதில் வல்லவர்களாகப் பாணர் விளங்கினர். பண் இசைப்பவர் பாணர். பண், பாண், பாணி, பாணர் இசை வாழ்க்கையினர். பத்துப்பாட்டுள் பாணரை ஆற்றுப்படுத்தும் நூல்கள் இரண்டு. அவை சிறுபாணாற்றுப்படை பெரும்பாணாற்றுப்படை ஆகியன.

"பொன் வார்ந்தன்ன புரியடங்கு நரம்பி

னின்குரற் சீறியா ழிடவயிற் றழீஇ"[160]

எனப் பாணன் கையிலிருந்த யாழ் கூறப்பட்டுள்ளது. எனவே சிறிய யாழையுடைய பாணர் சிறுபாணர் எனப்பட்டனர் என்பது அறிய வருகின்றது. இவ்வாறே 'இடனுடைப்பேரியாழ்'[161] என்று பெரும்பாணாற்றுப்படை கூறுவதால் பெரிய யாழையுடையவன் பெரும்பாணன் என்றும் அழைக்கப்பெற்றனன் என்பதை அறியலாம். இவற்றால் பாணருள் பெரும்பாணர் சிறுபாணர் என இருவகையினர் இருந்தமை பெறப்படுகின்றது. இசையறிவிலும், தேர்ச்சியிலும் சிறந்தவர்களைப் பெரும்பாணர் என்று கொள்ளலாம்.

## யாழின் வகைகள்

யாழ் என்பது 'யா என்னும் வேர்ச்சொல்லடியாகப் பிறப்பது. யா–'கட்டு' நரம்புகளை வேடர்கள் வேட்டையாடிய வில்லின் ஊடே கட்டித்தெறித்தமையால் நரம்புக் கட்டுக்களின் வழியாக இது யாழ் எனப்பெயர் பெற்றது.[162] இது மிகத் தொன்மையான நரம்புக்கருவி. சங்க இலக்கியத்தில் பேரியாழ், சீறி யாழ் ஆகிய இவற்றோடு வில்யாழ், மகரயாழ் என்று வேறு சிலவகை யாழின் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன.

## சீறியாழ்

சீறியாழ்–சிறிய யாழ். பேரியாழின் உருவத்தை நோக்க இது உருவத்தில் சிறியது. ஆனால் மிக இனிய ஓசையுடையது. பத்தர், திவவு, கோடு, போர்வை, நரம்பு ஆகிய உறுப்புக்களைக் கொண்டது சீறியாழ். இதனை 'விளரி நரம்பின் நயவரு சீறியாழ்'[163] 'மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்'[164] 'பொன்புனை நரம்பின் இன்குரல் சீறியாழ்'[165] 'கைவல் சீறியாழ்ப் பாண'[166] என்று இலக்கியங்கள் போற்றி உரைக்கின்றன. சீறியாழின் அமைப்பினைச் சிறுபாணாற்றுப்படை விளக்கமாகக் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது.

## பேரியாழ்

பேரியாழ் என்பதை 'இடனுடைப்பேரியாழ்'[167] என்று பெரும்பாணாற்றுப் படைகுறிப்பிடுவதால் அறியலாம். பழங்காலத்தில் 'தொண்டு'என்பது ஒன்பது என்னும் எண்ணைக் குறித்தது. எனவே ஒன்பது என்னும் எண்ணினையுடைய வார்க்கட்டினையுடையது பேரியாழ் என்றறியப்படுகிறது.

இதனைப் பண்டையோர் பெருங்கலம் என்றும் பரவையாழ் (பரந்து விரிந்த யாழ்) என்றும் கூறினர். இது 21 நரம்புகளைக் கொண்டது. பேரியாழிற்கும் பெரிய யாழ் ஒன்று மிகத் தொன்மைக் காலத்திருந்தது. அதனை 'ஆயிர நரம்பின் ஆதியாழ்' என்றனர்.[168]

## பண்கள்

செவ்வழி, குறிஞ்சி, மருதம், விளரி, பாலை ஆகிய நிலப்பண்களும், பஞ்சுரம், காமரம், நைவளம், காஞ்சி ஆகிய பண்களின் பெயர்களும், அவற்றில் பண்டைத்தமிழர் பெற்றிருந்த தேர்ச்சியும் பற்றிச் சங்க இலக்கியம் குறிப்பிடுகின்றன.

## செவ்வழிப்பண்

செவ்வழி என்பதற்குச் ' செம்மையாகியவழி' ' இசையின் பெருக்கத்திற்குச் செம்மையாகிய வழியை உடையபண்' என்று பொருள் கொள்வது பொருந்தும்.[169]

> "சீறியாழ் செவ்வழி பண்ணி"[170]

என்பதால் சீறியாழில் செவ்வழிப்பண் இசைத்தனர் என்பது புலனாகின்றது.

செவ்வழி பண்ணை அகநானூறு,

> "நயவன் தைவரும் செவ்வழி நல்யாழ்
> இசை ஓர்த்தன்ன இன்தீம் கிளவி"[171]

என்றுரைக்கும்.

முல்லை நிலமும் கார்காலமும், மாலை நேரமும் செவ்வழிப் பண்ணிற்கு உரியன என்பது தெளிவாகின்றது. மாலையிற் செவ்வழிப்பண்ணும் காலையில் மருதப்பண்ணும் வாசித்தல் வேண்டுமென்பது இசைநூன்மரபு .[172] செவ்வழி இரங்கற்பண். இதனை,

'சாயஎன் கிளவிபோல் செவ்வழியாழிசை நிற்ப'[173] என்பதால் அறியலாம். யாழில் செவ்வழிப்பண்ணைப் பாட, அரிய உயிர்களை வருத்தும் அவ்வோசையை மாரிக்காலத்து மாலைப்பொழுதில் மனையின்கண் தமியளாய் இருக்கும் தலைவி கேட்டு உள்ளம் சோர்வாள்'[174] என்று அகநானூறு குறிப்பிடுகிறது.

## குறிஞ்சிப்பண்

மலையும் மலை சார்ந்ததும் குறிஞ்சி நிலம். அக்குறிஞ்சி நிலக் கானவர் மகள் குறிஞ்சிப்பண் பாட தினைக்கதிரைத் தின்று கொண்டு நின்ற மதயானை ஒன்று அப்பாட்டைக் கேட்டதும் தினையும் உண்ணாது, நிலையினும் திரியாது பாடுபெறாத கண்களும், பாடுபெற்று விரைந்து உறங்கும் காட்சியைச் சங்க இலக்கியம் சித்தரிக்கின்றது.[175] வில்யாழில் இடைமகனால் இசைக்கப்படும் குறிஞ்சிப்பண் கேட்ட வண்டினம் தம்பினம் என மயங்கும்.[176] விறலியர் குறிஞ்சி நிலத்தில் குறிஞ்சிப்பண் பாடினர்.[177]

## மருதப்பண்

யாழோர் நரம்பை இனிதாகத் தெரிந்து மருதப்பண்ணை இசைக்க புலர்ந்த விரி விடியல் எய்த என்று மதுரைக் காஞ்சி குறிப்பிடுகின்றது.[178] மருதம் காலையில் இசைக்கும் பண்ணாகும்[179] யாழில் மருதப்பண் இசைத்த திறத்தினை மலைபடுகடாம் கூறுகின்றது.[180]

## விளரிப்பண்

"தீந்தொடை
விளரி நரம்பின் நயவரு சீறியாழ்"[181]

என்று விளரிப்பண் குறித்து அகநானூறு மொழிகின்றது. விளரி நெய்தல் நிலத்துக்குரிய இரங்கற்பண்.

"வளரத் தொடினும் விளைவுபு திரிந்து

விளரி யுறுதருந் தீந்தொடை நினையாது

தளரு நெஞ்சம்"[182]

என்றமையால் விளரிப்பண் இரங்கற்பண் என்பது புலனாகின்றது. "விளறி—இரங்கற்பண், நெய்தற்குரித்தாகலின் இரங்கற் பண்ணாயிற்று" என்று புறநானூற்றின் பழைய உரைக்குறிப்புக் கூறுகின்றது.[183]

விளரி என்னும் இரங்கற்பண் பாடிப் புண்பட்டுக் கிடக்கும் வீரனை உண்ணவரும் நரிகளை விரட்டி ஓட்டுகின்றாள் ஒரு வீரனின் மனைவி.[184] தலைவன் நெடிய தேரிலே கட்டப்பெற்ற சிறு நாவினையுடைய ஒண்மணிகள் தளரும் நெஞ்சினையுடைய தலைவி வருந்துமாறு விளரிப்பண் போல முழங்கின.[185] நெய்தற்குரிய சிறுபொழுதாகிய எற்பாடு விளரிப்பண் பாடுதற்குரிய காலமாகும்.[186]

**பாலைப்பண்**

இது பாலை நிலத்துக்குரிய பண். நண்பகலில் இசைக்கப்படுவது. பாலை நெறியில் வழிப்பறி செய்யும் ஆறலை கள்வர் கொலைக்கும் அஞ்சாக் கொடிய மனமுடையவர்கள். அவர்களும் பாலைப்பண்ணைக் கேட்டதும் உள்ளம் உருகி மறவுணர்வு நீங்கித் தம் தொழில் மறந்து தம் படைக்கலங்களை நழுவவிடுவர் எனப் பாலைப்பண்ணின் இயல்பு கூறப்படுகிறது. இதனை,

"ஆறலைக் கள்வர் படைவிட அருளின்

மாறுதலை பெயர்க்கும் மருவின் பாலை"[187]

என்பதால் அறியலாம். தீந்தொடை நரம்பின் பாலையாழினை வாசித்தலில் வல்லோன் துன்பத்தைச் செய்யும் உறுப்பையுடைய பாலைப்பண்களை மாறிமாறி வாசிப்பான். இத்தகைய பாலைப்பண் வெவ்வேறான சுவையையுடைய மதுவிற்கு உவமையாகும்.[188]

# ஆய்வு முடிவுகள்

1. சங்க காலத் தமிழர் இயற்கையோடியைந்து வாழ்ந்தனர். சங்க காலத் தமிழர் வாழ்வுக்கும் இயற்கைக்கும் உள்ள உறவினை அக்காலப் புலவர்களின் பாடல்கள் நமக்கு விளக்குகின்றன. முதல், கரு, உரி என்ற பொருள் நோக்கில், திணை அடிப்படையில் அமைந்த செய்யுள் மரபுவழி சங்க காலப் புலவர் பெருமக்களின் பாடல்கள் அமைந்தன.

2. முதற்பொருள் அடிப்படையில் கருப்பொருள் பின்னணியில் மக்கள் வாழ்க்கைக்கு உரிய உரிப்பொருள் பாடுபொருளாகச் சங்க காலப் புலவர்களின் பாடல்கள் அமைந்தன.

3. அகத்திணையில் அமைந்துள்ள ஐந்திணை நிலப்பாகுபாடும், காலப்பாகுபாடும், கருப்பொருள் பாகுபாடும் அகத்திணைக்கு அமையும் சிறந்த சூழ்நிலைகள் ஆகும்.

4. மானிட வாழ்க்கையின் குறியீடுகளாகச் சங்கப் புலவர் இயற்கையைப் பாடியுள்ளனர். அவர்கள் கருப்பொருள்களைப் பொருளாகக் கொண்டு, உள்ளுறை, இறைச்சி ஆகிய உத்திகளின் மூலம் வாழ்வியல் உண்மைகளை விளக்கினர். கருப்பொருள்கள் கருத்து விளக்கத்திற்குப் பயன்பட்டன.

5. இயற்கையோடு இணைந்த வழிபாட்டு முறையே தமிழர் வழிபாட்டு முறையாக இருந்தது. தொல்காப்பியர் நானிலத் தெய்வங்களாக மாயோன், சேயோன், வேந்தன், வருணன் ஆகிய தெய்வங்களைக் குறிப்பிடுவர். திணைத் தெய்வங்களைப் பற்றியும், அவற்றை மக்கள் வழிபட்ட முறைமையினையும் சங்க இலக்கியம் எடுத்துரைக்கிறது. கொற்றவை வழிபாடு குறித்த செய்தி இடம்பெற்றுள்ளது.

6. சங்க காலத்தில் நிலத்தொழில்களுக்கேற்பவும், அந்நிலத்தின் இயற்கைச் சூழலுக்கேற்பவும் மக்களின் உணவு வகைகள் அமைந்தன. மக்கள்தம் நிலத்தில் விளைந்த பொருள்களைப் பிற நிலத்தாரிடம் கொடுத்துப் பண்டமாற்று முறையில் பெற்ற பொருள்களையும் உணவாகக் கொண்டனர்.

7. ஐந்திணை மக்களிடத்து ஊன் உண்டலும், கள் உண்டலும் பெருவழக்காக நிலவியது.

8. சங்க இலக்கியத்தில் கருப்பொருள்களாகிய மா, மரம், புள் ஆகியவற்றின் செயல்கள் மனித வாழ்க்கையுடன் தொடர்புபடுத்திக் கூறப்பெற்றன.

9. தொல்காப்பியர் கருப்பொருள்களில் ஒன்றாகக் கூறும் 'செய்தி' என்னும் சொல் தொழிலை உணர்த்தும். மக்கள் வாழும் நிலத்தியல்பிற்கும், பருவச் சூழலுக்கும் ஏற்ப அந்நில மக்களின் தொழில்முறைகள் அமைந்திருந்தமையை இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

10. 'யாழின் பகுதி' என்று தொல்காப்பியர் சுட்டும் கருப்பொருளுக்கு 'யாழ்' என்பது நிலத்திற்குரிய பெரும்பண்ணையும் 'பகுதி' என்பது அதன் கிளைப்பண்ணையும் உணர்த்தும் என்ற இளம்பூரணர் விளக்கம் கொள்ளத்தக்கது.

11. செவ்வழி, குறிஞ்சி, மருதம், விளரி, பாலை ஆகிய நிலப்பண்கள் பண்டைத் தமிழரின் இசையறிவைப் புலப்படுத்துவன.

## சான்றெண் விளக்கம்

1. ஔவை.சு. துரைசாமிப் பிள்ளை, குறுந்தொகை சொற்பொழிவு, ப–54

2. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப–9

3. மேலது, ப–12

4. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப–203

5. தமிழ் இலக்கியக் கொள்கை ஓர் அறிமுகம் (தொகுதி) ப–4

6. தனிநாயக அடிகளார், தமிழ்த்தூது, ப–45

7. வ.சுப. மாணிக்கம், தமிழ்காதல், ப–318

8. மேலது, ப–190

9. குறுந்தொகை, பா–163, அடி–1

10. தொல்.பொருள், நூ–227

11. ஏ.வி. சுப்பிரமணிய அய்யர், தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, பா–72

12. மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப–46

13. நக்கீரர் திருமுருகாற்றுப்படை, அடி,17

14. பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப–12

15. குறுந்தொகை, பா–12

16. கி.வா. ஜெகந்நாதன், தாமரைப் பொய்கை (சங்க நூல் காட்சி) –முகவுரை

17. அகநானூறு, பா–68, அடி,9–11

18. பி.எல்.சாமி இலக்கியத்தில் அறிவியல், ப–35

19. மேலது, ப– 35

20. கலித் தொகை பா–9, அடி,12–20

21. ஐங்குறுநூறு பா–4, அடி,4–5

22. குறுந்தொகை, பா–40

23. தொல்.பொருள் பேராசியர் உரை, ப–97

24. தொல்.பொருள் உவமயியல், நூ−296

25. குறுந்தொகை, பா− 85

26. தொல்.பொருள், நூ−226

27. மேலது, இளம்பூரணர் உரை, ப− 349

28. நற்றிணை, பா−115, அடி−5−11

29. ந. தேவநேயப்பாவாணர், பண்டைத்தமிழர் நாகரீகமும் பண்பாடும், ப−84

30. தமிழ்காதல், ப−169

31. மேலது, ப−169

32. திரு. வி. கல்யான சுந்தரனார், முருகன் அல்லது அழகு, பக். 28−29

33. தொல்.பொருள், அகம் நூ−5

34. முல்லைப்பாட்டு, பா. அடி,3

35. மதுரைக்காஞ்சி, பா. அடி,1−3

36. முல்லைப்பாட்டு, பா. அடி,1−3

37. ந. சேதுரகுநாதன், பரிபாடல் சொற் பொழிவுகள், ப−3

38. பெரும்பாணாற்றுப்படை, அடி, 29−30, 402, 373

39. மதுரைக்காஞ்சி, அடி, 590−591

40. அகநானூறு, பா−59, அடி,3−6

41. கலித் தொகை பா−107, அடி, 32

42. அகநானூறு, பா−175, பா, 13−16

43. தொல்.பொருள், அகம் நூ−5

44. திருமுருகாற்றுப்படை, அடி, 267

45. மேலது, அடி, 317

46. குறிஞ்சிப்பாட்டு, அடி,208

47. அகநானூறு, பா−5

48. திருமுருகாற்றுப்படை, அடி, 269

49. மேலது, பா.அடி, 289–290

50. பத்துப்பாட்டு மூலமும், நச்சினார்க்கினியர் உரையும், ப–357

51. மலைபடுகடாம் அடி, 493

52. புறம், பா–120, அடி,21

53. கலித்தொகை பா– 105, அடி, 17

54. நற்றிணை, பா–34, அடி,8

55. குறிஞ்சிப்பாட்டு, அடி, 51–52

56. நற்றிணை, பா– 82, அடி,4

57. தொல்.பொருள்.அகம்.நூ–5

58. க. வெள்ளைவாரணன், தொல்காப்பியம் – வரலாறு, ப–131

59. புறநானூறு, பா–241, அடி,2–3

60. ஐங்குறுநூறு, பா–62, அடி–1

61. தொல்.பொருள்.அகம். நூ.5

62. தொல்.பொருள்.அகம். நச். உரை, ப–13

63. கலித்தொகை, பா–131, அடி–1

64. தி. முத்துக்கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப–215

65. நற்றிணை, பா–303, அடி, 3–4

66. பரிபாடல் சொற்பொழிவுகள், ப–62

67. தொல்.பொருள். புறம். நூ–62

68. நற்றிணை, பா–285

69. குறிஞ்சிப்பாட்டு, அடி, 204–205

70. சி. இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், ப–26

71. அகநானூறு, பா–348, அடி, 2–9

72. குறுந்தொகை, பா–22, அடி, 3–4

73. தமிழர் சால்பு, ப–204

74. அகநானூறு, பா–384, அடி, 5–6
75. மேலது, பா–194, அடி, 9–10
76. மேலது, பா–394, அடி, 5–7
77. சே. நமசிவாயம், தமிழர் உணவு, ப–14
78. பெரும்பாணாற்றுப்படை, அடி–254–256
79. அகநானூறு, பா–136 அடி–1
80. மேலது, பா–236, அடி, 1–3
81. புறநானூறு, பா–212, அடி, 2–3
82. நற்றிணை, பா–280, அடி, 6–7, பட்டினப்பாலை, அடி–64
83. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப–95
84. பட்டினப்பாலை, அடி, 176–178
85. அகநானூறு, பா–110, அடி–13
86. மேலது, பா–60, அடி, 4–6
87. பட்டினப்பாலை, அடி–86
88. மேலது, அடி–93
89. மேலது, அடி, 76–78
90. ஐங்குறுநூறு, பா–364, அடி–1
91. மேலது, பா–365, அடி–1
92. அகநானூறு, பா–223, அடி–8
93. மேலது, பா–213, அடி, 9–10
94. தொல்.பொருள்.அகம்.நச்.உரை, ப–46, இளம்பூரணர் உரை, ப–18
95. அகநானூறு, பா–157, அடி–11
96. மேலது, பா–245, அடி–9
97. மேலது, பா–157, அடி, 1–4

98. பி.எஸ்.சாமி விலங்கின விளக்கம், முன்னுரை.

99. அகநானூறு, பா–314, அடி, 5–6

100. குறுந்தொகை, பா–183, அடி, 3–4

101. அகநானூறு, பா–134, அடி, 7–14

102. மேலது, பா–4, அடி, 8–12

103. குறுந்தொகை, பா–37, அடி, 2–4

104. அகநானூறு, பா–121, அடி, 3–6

105. முனைவர் வே. நெடுஞ்செழியன், தமிழர் கண்ட தாவரவியல், ப–59

106. நற்றிணை, பா–362

107. மேலது, பா–218

108. குறுந்தொகை, பா–148

109. மேலது, பா–21, அடி, 3–5

110. நற்றிணை, பா–124, அடி, 1–3

111. மேலது, பா–263, அடி, 4–7

112. குறுந்தொகை, பா–170, அடி, 1–4

113. மேலது, பா–57

114. கலித்தொகை, பா–126, அடி, 6–7

115. குறுந்தொகை, பா–375, அடி, 3–6

116. அகநானூறு, பா–118, அடி, 3–4

117. குறிஞ்சிப்பாட்டு, அடி, 43–44

118. நற்றிணை, பா–393, அடி, 4–5

119. மேலது, பா–119, அடி–2

120. குறிஞ்சிப்பாட்டு, அடி–49, நற்றிணை, பா–176

121. நற்றிணை, பா–255

122. மேலது, பா–371, அடி–8

123. அகநானூறு, பா–136, அடி, 6–8

124. தொல்.பொருள்.அகம்.நச். உரை, ப–46

125. அகநானூறு, பா–297, அடி, 16–18

126. சிலப்பதிகாரம், காதை–10, அடி–136

127. அகநானூறு, பா–88, அடி, 1–6

128. குறிஞ்சிப்பாட்டு, அடி, 252–261

129. மலைபடுகடாம், அடி, 203–210

130. அகநானூறு, பா–32, அடி, 5–6

131. புறநானூறு, பா–390

132. குறுந்தொகை, பா–221, அடி, 3–4

133. குறிஞ்சிப்பாட்டு, அடி, 221–222

134. அகநானூறு, பா–26, அடி, 23–25

135. கலித்தொகை, பா–108, அடி–6

136. மதுரைக்காஞ்சி, அடி, 89–92

137. நற்றிணை, பா–60, அடி–7

138. அகநானூறு, பா–346, அடி, 1–11

139. மதுரைக்காஞ்சி, அடி, 89–93

140. பெரும்பாணாற்றுப்படை, அடி, 201–240

141. தொல்.பொருள்.அகம். நூ–20, இளம்பூரணர் உரை.

142. பட்டினப்பாலை, அடி, 60–74

143. அகநானூறு, பா–70, அடி, 1–4

144. மேலது, பா–280, அடி, 11–14

145. ஐங்குறுநூறு, பா–193, அடி–1

146. கலித்தொகை, பா–135, அடி, 1–5

147. அகநானூறு, பா–1, அடி–14

148. நற்றிணை, பா–352, அடி, 1–2

149. அகநானூறு, பா–363, அடி–10

150. மேலது, பா–127, அடி, 15–16

151. குறுந்தொகை, பா–12, அடி, 2–3

152. கலித்தொகை, பா–4, அடி, 4–5

153. அகநானூறு, பா–285, அடி–9

154. மேலது, பா–175, அடி, 2–5

155. தொல்.பொருள்.அகம்.நூ–18

156. மேலது, இளம்பூரணர் உரை, பக்.18–19

157. மேலது, நச்.உரை. பக், 45–46

158. வீ.பா.கா.சுந்தரனார், சேறை அறவாணர் இயற்றிய பஞ்சமரபு, ப–133

159. வீ.பா.கா. சுந்தரம், பழந்தமிழ் இலக்கியத்தில் இசையியல், ப–92

160. பெரும்பாணாற்றுப்படை, அடி, 15–16

161. மேலது, அடி–462

162. சேறை அறவாணர் இயற்றிய பஞ்சமரபு, ப–72

163. அகநானூறு, பா–279, அடி–11

164. நற்றிணை, பா–53, அடி–4

165. மேலது, பா–380, அடி–7

166. ஐங்குறுநூறு, பா–472, அடி–1

167. பெரும்பாணாற்றுப்படை, அடி–465

168. சேறை அறவாணர் இயற்றிய பஞ்சமரபு, ப–72

169. இ. அங்கயற்கண்ணி, இசையும் இலக்கியமும், ப–131

170. புறநானூறு, பா–144, அடி–2

171. அகநானூறு, பா–212, அடி–6

172. விபுலானந்தர், யாழ்நூல், ப–22

173. கலித்தொகை, பா–143, அடி–38

174. அகநானூறு, பா–214, அடி, 13–15

175. மேலது, பா–102, அடி, 1–9

176. பெரும்பாணாற்றுப்படை, அடி, 180–183

177. மலைபடுகடாம், அடி, 358–359

178. மதுரைக்காஞ்சி, அடி, 657–664

179. திருத்தக்கத்தேவர், சீவகசிந்தாமணி, பா–1991

180. மலைபடுகடாம், பா.469–470

181. அகநானூறு, பா–279, அடி, 10–11

182. புறநானூறு, பா–260, அடி, 1–3

183. புறநானூறு மூலமும் பழைய உரையும், ப–436

184. புறம், பா–29, அடி, 1–4

185. குறுந்தொகை, பா–336, அடி–3

186. யாழ்நூல், ப–22

187. பொருநராற்றுப்படை, அடி, 21–22

188. பதிற்றுப்பத்து, பா–65, அடி, 14–17

## இயல்–4

## கூற்றுகளில் கருப்பொருள்கள்

### முன்னுரை

சங்க இலக்கிய அகத்திணைப்பாடல்கள் யாவும் கூற்று முறையிலேயே அகவாழ்வை எடுத்துரைக்கின்றன. இவற்றை நாடகத் தனிநிலைச் செய்யுட்கள் என்பர். தோழி, தலைவன், தலைவி, பரத்தை, நற்றாய், பாணன், கண்டோர் ஆகிய அகத்திணை இலக்கியங்களில் இடம் பெறும் மாந்தர்கள் கூற்றுக்கு உரியராவர். அகப்பாடல்களின் சிறப்பு பாத்திரத்தின் இயற்பெயர் சுட்டப்பெறாமையாகும். இதனை

"மக்கள் நுதலிய அகனைந் திணையும்
சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்"[1]

என்ற தொல்காப்பிய நூற்பா உணர்த்தும்.

அகத்திணையில் தலைமை மாந்தர்களாக விளங்குபவர். தலைவனும் தலைவியும் ஆவர். தலைமக்களுடன் உறவுடையோராகக் கொள்ளப்பெறுபவர். தலைவியின் தாய்,(நற்றாய்) தலைவியின் தந்தை, செவிலி, தோழி, பாங்கன், பார்ப்பார், விறலியர், கூத்தர், இளையோர், விருந்தினர் பாகன் ஆகிய ஒன்பதின்மர் ஆவர். ஒவ்வொரு நிலையிலும் தலைமக்களுடன் தொடர்பு கொண்டவர்கள் இம்மாந்தர்களேயாவர். அகப்பொருள் நிகழ்ச்சிகளை நடத்திச் செல்பவர்களாக இவர்கள் விளங்குகின்றனர்.

சங்க அகப்பாடல்களில் அமைந்த பாடல்கள் அகத்திணை மாந்தர்களின் கூற்றுக்களாக அமைந்துள்ளன. ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு பாத்திரத்தின் கூற்றாகத் திகழ்கிறது. கூற்றுகளில் கருப்பொருள்கள் என்னும் இவ்வியற்கண் கருப்பொருள்கள்

அகப்பாடல்களில் இடம்பெறும் பாத்திரங்கள் வாயிலாகக் கூறப்படுவதுடன், அவர்கள் கருத்துணர்த்தும் நெறியும் ஆராயப்படுகின்றன.

**நாடக நிலை**

தொல்காப்பியர்,

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்"[2]

என்று கூறுவதால் அகத்திணைப் பாடல்கள் அனைத்தும் நாடக அமைப்பின. தலைவனோ, தலைவியோ, தோழியோ அன்றிப்பிற அகத்திணை மாந்தரோ கூறுவது போல் அமைந்த பான்மையின ஒவ்வோர் அகத்திணைப் பாடலும் அதனைப் படிப்போர் கண் முன்னர்ச்சிறு நாடகக் காட்சி ஒன்றைத் தோற்றுவிக்கும் தன்மையுடையது.

நாடகம் காட்சியளவை உடையது. எழுத்தறிவில்லார்க்கும் கருத்துணர்த்தும் ஊடகமாகும். இத்தன்மை இலக்கியத்தில் ஏற்றப்படின் கருத்துப் புலப்பாட்டில் வலிவும் மிகுதியாகும். பாத்திரமாக நின்று புலவர் மொழிதலே இதன் அடித்தளம். என அகத்துள் தலைமகள் கூற்று மெய்ப்பாடும் குரல் வேறுபாடும் அமைய நாடகமாகவே நிகழ்ந்தது காணத்தகும்.

நாடகத்தில் ஐந்து அங்கங்கள் உண்டு அகத்துறை இலக்கியத்தில் இயற்கைப் புணர்ச்சியே தோற்றம். பாங்கிமதி உடன்பாடு வளர்ச்சி பகற்குறியும், இரவுக்குறியும் முதிர்வு, அவற்றின் இடையீடு, வரைவு கடாதல், அறத்தோடு நிற்றல் முதலியன திருப்பம் வரைதல் முடிவாகும்[3] என்னும் கருத்து ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

தொல்காப்பியர் செய்யுள் உறுப்புகளாகத் திணை, கூற்று, கேட்போர், களன் ஆகியவற்றை மொழிந்துள்ளார். குறிப்பிட்ட சூழலில் குறிப்பிட்ட நிகழ்ச்சியே அகப்பாடல்களில் புனையப் பெறவேண்டும் என்பதைக் "களன்" என்னும் உறுப்பு விளக்குகின்றது.[4] பாடப்பெறும் நிகழ்ச்சிக்குப் பின்புலமாக அமைத்துப் பாடப்பெறும் முதற்பொருள், கருப்பொருள்களைத் "திணை" என்னும் உறுப்புக் குறித்து அகத்திணையியல் விவரிக்கின்றது.[5] அகத்திணை நிகழ்ச்சிகள் அகத்திணை மாந்தர்கள் கூறுவது போல் மாந்தரின் கூற்று முறையில் பாடப்பெற வேண்டுமென்பதால் "கூற்று" செய்யுள் உறுப்புகளுள் சிறப்பிடம் பெறுகின்றது. அகப்பாடல்கள் மாந்தரின் கூற்று முறையில் அமைத்துப் பாடும்போது இருவகையில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

1. ஒருவர் கூற்று முறையில் அமையும் பாடல்கள்
2. இருவர் மாறி மாறி உரையாடும் முறையில் அமையும் பாடல்கள்

என இருவகையாக அகப்பொருள் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. சங்க அக நூல்களில் கலித்தொகையில் மட்டும் இருவர் மாறி மாறி உரையாடும் முறையில் சில பாடல்கள் அமைந்துள்ளன. ஏனைய நூல்களில் ஒருவர் கூற்று முறையில் அமைந்துள்ள பாடல்களே உள்ளன.

சங்கஅகப்பாடல்களில் கலித்தொகைதவிர மற்றவை ஆசிரியப்பாவில் அமைந்தவை. ஒருவர் கூற்று முறையில் மட்டுமே இப்பாடல்கள் அமைந்துள்ளன. சில பாடல்களில் பிறிதொரு மாந்தரது கூற்றும் இடம்பெற நேரிடும்போது, அது கூற்று நிகழ்த்தும் மாந்தரால் கொண்டு கூறப்படுவதாகப் பாடப்பட்டுள்ளது. இருவர் உரையாடும்பான்மையில் பாடல்கள் அமையவில்லை. பாடலில் கூற்று நிகழ்த்தும் ஒருவர் கூற்று கொண்டே நிகழ்ச்சி, கேட்போர், பின்புலம் முதலிய நாடகச் சார்புகள் அறியப்படுகின்றன. எனவே இவற்றை 'நாடகத் தனிநிலைச் செய்யுட்கள்' என்று கூறுவது பொருந்தும்.

## அகப்பாடல்களில் கூற்று நிலை

| | | |
|---|---|---|
| தோழி கூற்றாக இடம்பெறும் பாடல்கள் | – | 781 |
| தலைவி கூற்றாக இடம்பெறும் பாடல்கள் | – | 549 |
| தலைவன் கூற்றாக இடம்பெறும் பாடல்கள் | – | 344 |
| தாயார் கூற்றாக இடம்பெறும் பாடல்கள் | – | 71 |
| பாணன் கூற்றாக இடம்பெறும் பாடல்கள் | – | 1 |
| ஏனையோர் கூற்றாக இடம்பெறும் பாடல்கள் | – | 54 |
| | | 1850 |

இவ்வாறு பாத்திரங்களின் கூற்றுகளாக அகப்பாடல்கள் அமைந்துள்ளன. "அகத்திணைகள் கூற்றுக்களாகவே அமையும். தலைவன், தலைவி, தோழி, செவிலி முதலானோர் கூறுதலாக, அகத்திணைகள் அமைந்தமையால் அகத்திணைகள் உயிர்த்துடிப்புடையன ஆயின. ஒவ்வொருவர் கூற்றும் பங்காளர் அன்றிப் படிப்பாரையும் பாத்திரமாக்கும்."[6] என்னும் கருத்து ஈண்டுக் கருதத்தக்கது.

## கூற்று முறை

அகப்பாடல்களில் முன்னிலை மொழி, முன்னிலைப் புறமொழிகளாகக் கூற்றுகள் இடம்பெற்றுள்ளன. ஒருவர் தமக்கு முன்னிருப்பவர் மட்டும் கேட்குமாறு, அவரை விளித்து மொழிவது 'முன்னிலை மொழி' எனப்படும். மற்றொருவரும் கேட்க வேண்டும் என்ற நோக்கில் முன்னிருப்பாரை விளித்துக் கூறுதல் 'முன்னிலைப் புறமொழி' எனப்படும். இதனை,

"முன்னிலைப் புறமொழி எல்லா வாயிற்கும்
பின்னிலைத் தோன்றும் என்மனார் புலவர்"[7]

"அன்புதலைப் பிரிந்த கிளவி தோன்றின்

சிறைப்புறங் குறித்ததன் றென்மனார் புலவர்"[8]

என்னும் தொல்காப்பிய நூற்பாக்கள் உணர்த்துகின்றன. 'முன்னிலைப் புறமொழி' என்பதற்கு உ.வே.சாமிநாதையர் "கூறப்படும் செய்தியைக் கேட்டறிதற்குரியவர் முன்னே இருக்கவும் அவரை விளித்துக் கூறாமல் வேறொருவரையேனும் பிறிதொரு பொருளையேனும் விளித்துக் கூறுவது"[9] என்று விளக்கம் தருகின்றார். இக்கிளத்தல் நெறியைத் தொல்காப்பியர், முன்னிலைப் புறமொழி என்றும், சிறைப் புறக்கிளவி என்றும் குறிப்பிடுகின்றார். "சிறைப்புறக்கிளவி என்பதற்குக் கூறப்படும் செய்தியைக் கேட்டறிதற்குரியவர் கேட்குமாறு தமக்கு முன்னிருக்கும் மாந்தரையோ பொருளையோ விளித்துக் கூறுவது."[10] என விளக்கம் கூறப்படுகின்றது.

## சிறைப்புறக் கிளவி

சிறைப்புறக்கிளவி நெறியில் மூவர் இடம்பெறுவர். ஒருவர் கூறுபவர், மற்றொருவர் கேட்பவர், மூன்றாமவர் மறைவான் இடத்திலோ, அன்றிச் சற்று அயலிலோ இருந்தும் கேட்பவராக அமைவர். கூறுபவருடைய நோக்கம் தாம் கூறுவதைக் தமக்கு முன்னால் உள்ளவர் மட்டுமின்றி மறைவான இடத்தில் உள்ளவரும் அறிந்து கொள்ள வேண்டுமென்பதாக இருக்கும். அயலில் உள்ளவர் செய்தியைக் கேட்கின்றார் என்பது மிகக் குறிப்பாகவே உணர்த்தப்படும். அகப்பாடல்களில் சிறைப்புறக் கிளவி எனும் துறையில் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அவை தலைவி கூற்றாகவும், தோழி கூற்றாகவும் அமைந்துள்ளன.

## தலைவி கூற்று

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைவி சொல்லியது என்னும் துறையில் பல பாடல்கள் உள்ளன. அவை குறிஞ்சித் திணையிலும் நெய்தல் திணையிலும் அமைந்துள்ளன.

தலைமகள் சிறைப்புறத்தானாக அயலில் நிற்கிறான். இதை அறிந்த தலைவி தோழிக்குச் சொல்லுவாளாய்க் களவொழுக்க நிலையினைக் கூறுகிறாள். தலைவனின் நாட்டைப்பற்றி,

"____________________ பெரிய
கேழல் அட்ட பேழ்வா யேற்றை
பலாவமல் அடுக்கல் புலவ ஈர்க்கும்
கழைநரல் சிலம்பின் ஆங்கண் வழையொடு
வாழை யோங்கிய தாழ்கண் அசும்பில்
படுகண் களிற்றின் வருந்தஞ் சொலிய
பிடிபடி முறுக்கிய பெருமரப் பூசல்
விண்டோய் விடரகத் தியம்பும் அவர்நாட்டு"[11]

என்று குறிஞ்சிநிலக் கருப்பொருள் வாயிலாகக் குறிப்பிடுகின்றாள்.

இப்பாடலில் தலைவன் மலைநாட்டு வளம் குறிக்கப்படுகிறது. ஆண் பன்றியினைக் கொன்ற ஆண்புலி அதனைப் பலா மரங்கள் நிறைந்த பக்கமலையில் இழுத்துச்செல்லும். மூங்கில்கள் ஒலிக்கும். வாழையும் சுரபுன்னையும் வளர்ந்துள்ள கரையையுடைய நீர்க் குமிழியில் களிறு மாட்டிக் கொள்ள அதனை வெளிக்கொணரப் பெரிய மரங்களைப் பெண் யானை ஒடித்துப் போட்டுக் களிற்றை வெளிவரச்செய்யும். இவ்வொலி தலைவனின் மலைக்குகைகளிலும் எதிரொலிக்கும் எனத் தோழியிடம் தலைவி கூறுகிறாள்.

புலி தனக்காகப் பெற்ற உணவைப் பலா மரங்கள் நிறைந்த பக்க மலைகளில் புலால் நாற்றம் வீச இருப்பதைப் போன்று தலைவனும் இன்பந்துய்க்கக் களவில் வந்து கூடி, நம் குடியை இகழ்ச்சியுடையதாக்கி விட்டான். களிறு நீர்ச்குமிழியில் விழப்பெண் யானை அதை வெளிக்கொணர உதவும் போது ஏற்படும் ஒலி, தலைவன் களவொழுக்கமாகிய குழியில் விழுந்து நம்மை வரையவும் மாட்டாது விடவுமாட்டாது துன்பப்படும்போது நாமே வரைய

முயலும் வழி ஊரெல்லாம் அறியும்படிச் செய்தான் என்ற உள்ளுறைச் செய்தியை உணர்த்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

நெய்தல் திணையில் தலைவியைச் சந்திக்க வரும் தலைவன் விரைந்து மணந்து கொள்ள வேண்டுமென்ற நோக்கில் சிறைப்புறக் கூற்றுகள் இடம்பெற்றுள்ளன.

தலைவன் சிறைபுறத்தானாகத் தலைவி தோழியிடத்து கூறும்போது,

"இலங்கு வளை நெகிழச் சாஅய் யானே
உளெனோ வாழி தோழி!சாரல்
தழை அணி அல்குல் மகளிருள்ளும்
விழவு மேம்பட்ட என் நலனே பழ விறல்
பறை வலம் தப்பிய பைதல் நாரை
திரை தோய் வாங்கு சினை இருக்கும்
தண்ணம் துறைவனோடு கண்மாறின்றே"[12]

நாரையானது தனது சிறகின் வண்மை தவறியதால் மரக்கிளையில் பறத்தற்கு இயலாது தங்கியிருக்கும். கடல் துறை தலைவனோடு என்னை விட்டுப்பிரிந்து இடம் பெயர்ந்தாலும் யான் உயிருடன் இருக்கின்றேன் என்கிறாள்.

மீனை தராவிடில் நாரை இரையின்றி உயிர் நீத்தலைப் போல தலைவன் இரங்கிவரைந்து கொள்ளாவிடில் யானும் உயிர்விடுவேன் என்பது கருப்பொருளால் அறிவது குறிப்பு மொழியாகும்.

ஐங்குறுநூற்றில் நெய்தல் திணையில் தோழிக்கு உரைத்தப்பத்து என்னும் தலைப்பில் அமைந்த பத்துப்பாடல்களும் தலைவி கூற்றாகத் தலைமகன் சிறைப்புறத் தானாகத் தோழிச் சொல்லியது எனும் துறையில் பாடப்பட்டுள்ளன.

"அம்ம வாழி தோழி பாணன்

சூழ்கழி மருங்கின் நாள் இரை கொளீஇச்

சினைக் கயல்மாய்க்கும் துறைவன் கேண்மை

பிரிந்தும் வாழ்துமோ நாமே-

அருந்தவம் முயறல் ஆற்றாதமே"[13]

உப்பங்கழியில் வாழும் கயில் மீன்களை பாணன் தூண்டில் கயிற்றால் பிடிக்கும் துறைவனின் நட்பைப்பிரியாது பெறுவதற்குத் தவத்தை செய்யாமையால் பிரிவுத் துன்பத்தில் உயிர் வாழ்க்கிறோம் என்கிறாள்.

பாணன் நாள் இரை கொளீஇக் கயல் மாய்க்கும் என்னும் கருப்பொருளால் தலைவன் களவுப்புணர்ச்சியில் தான் மிக்க மகிழ்ச்சி கொண்டு வரையாது நம்மைத் துன்புறுத்துகிறான் எனும் குறிப்புமொழி பெறப்படுகின்றது.

## தோழிகூற்று

சிறைப்புறத்தானாய தலைவன் கேட்குமாறு தோழி கூறியது என்னும் துறையில் பாடல்கள் அமைந்துள்ளன.குறிஞ்சித் திணையிலும், நெய்தல் திணையிலும் இரவுக்குறியில் தலைவன் சிறைப்புறமாகத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்.

"பாம்புடை பனிநீர் இட்டுத்துறைத்

தேங்கலந் தொழுக யாறுநிறைந் தனவே

வெண்கோட் டியானை பொருத புண்கூர்ந்து

பைங்கண் வல்லியம் கல்லளைச் செறிய

முடிக்கரும் பன்ன வள்ளுகிர் வயப்பிணவு

கடிகொள வழங்கார் ஆறே ஆயிடை

எல்லிற் றென்னான் வெள்வேல் ஏந்தி

நசைதர வந்த நன்ன ராளன்

நெஞ்சுபழு தாக வவியன் பெயரின்

இன்றிப் பொழுதும் யான்வா ழலனே

எவன்கொல் வாழி தோழி"[14]

யானை குத்திய புண் மிகுந்து புலி குகையில் தங்க வெண்புலி காத்து நிற்கும் அந்நெறியில் செல்லுதல் இயலாது. ஆறு நிறைந்தது. வேலேந்தி வரும் தலைவன் வறிதே பெயரின் யான் உயிர் வாழேன். திங்களின் ஒளி, மலை முழுவதும் பரவிவிட்டது. இனி நாம் செய்வது யாது என வினவுவாள் போன்று தலைமகனுக்குத் தலைமகளை வரைந்து கொள்ளவேண்டிய நிலையைக் குறிப்பால் தோழி வற்புறுத்துகிறாள்.

தலைவியைச் சந்திக்க வேண்டுமென்ற தலைவனின் நெஞ்சம் பழுதாகக் கூடாது என்பது தோழியின் எண்ணம். தலைவி மீது கொண்ட காதலால் நிறைந்த ஆற்றைப் பற்றிக் கவலைப்படாமலும் புலி உலவும் பாதையென அஞ்சாமலும் தலைவன் வேலேந்தி வருகிறான். இத்தகு ஊக்கம் உடையவன் விரைந்து மணந்து கொள்ள வேண்டும் என்பதைத் தலைவன் கேட்குமாறு வலியுறுத்துகிறாள். இதைக் கேட்கும் தலைவன் தலைவியும் தோழியும் தன்மீது வைத்திருக்கும் உயர்ந்த பற்றினை உணர்ந்து மணந்து கொள்ள வேண்டுமென்ற கருத்து இதன் மூலம் பெறப்படுகிறது. தோழியின் காப்புணர்வும் திருமணம் நடைபெற வேண்டும் என்னும் ஆர்வமும், ஒருங்கே கலந்து தலைவனையும் தலைவியையும் தெருட்டி வரைவுக்குடன்படுத்தும் அவளது உளவியல் பாங்கு குறிஞ்சித்திணைக் கருப்பொருள்கள் மூலம் வெளிப்படுகின்றது.

"வளைவாய்க் கோதையர் வண்டல் தைஇ

இளையோர் செல்ப எல்லும் எல்லின்று

---

ஆடுமகள் போலப் பெயர்தல்

ஆற்றேன் தெய்ய அலர்கவிவ் வூரே"[15]

இப்பாடல் பகலில் தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது என்னும் துறையில் அமைந்துள்ளது. பகலில் எம்மொடு ஆடிய நீ இரவு நம் இல்லத்திற்குச் செல்லுதல் வேண்டும் என்று கூறிய தோழிக்கு இரவு இல்லம் சென்று நோயொடு தங்குவேனாயின் என் தந்தையின் அருங்கடிச் காவலிற் படுவேன் என்ற தலைவியின் கூற்றைத் தோழி கொண்டு கூறுகின்றாள்.

இல்லத்திற்குச் செல் என்று தோழி கூற செல்லின் உயிர் வாழேன் என்கிறாள் தலைவி. அந்திக் காலத்துக் கடற்கெழு செல்வி கரை நின்றாங்கு நீ கானல் ஒழிய யான் என் அணி துறந்து ஆடுமகள் போலப் பெயர்தல் ஆற்றேன் இவ்வூர் அலர் கூறட்டும் என்றுரைக்கின்றாள் தோழி.

தலைவன் தலைவியை வரைந்து கொள்ள வேண்டும் அவனை விரைவில் ஈடுபடுத்த வேண்டும் என்பதே தோழியின் நோக்கம். ஊரில் அலர் எழின் அதனைத் தடுக்கத் தலைவன் தலைவியைத் திருமணம் புரிந்து கொள்ள வேண்டும். இதனைக் குறிப்பாகப் பெற வைக்கிறாள் தோழி. ஞாழல், நெய்தல், கடல்கெழு செல்வி, கானல் ஆகிய நெய்தல் நிலக் கருப்பொருள்கள் இப்பாடலில் இடம்பெற்றுச் சிறக்கின்றன.

"நெடுங் கடல் அலைத்த கொடுந் திமிற் பரதவர்
கொழு மீன் கொள்ளை அழி மணல் குவைஇ
------------------------------------------------
சுடுவான் போல நோக்கும் ,
அடு பால் அன்ன என் பசலை மெய்யே"[16]

பரதவர் கடலுள் சென்ற மீனை மணலில் குவித்து கிளிஞ்சலில் விளக்கேற்றி உறங்குவர். புன்னை மரம் அத்துறையில் வளர்ந்திருக்கும். அத்துறைவனோடு நட்பினை அறியாத பெண்டீர் அலர் தூற்றுவதும் அன்னை சுடு சொல் கூறுவதுமாக உள்ளாள்

என்கிறாள். இக்கருப்பொருளால் தலைவன் கொண்டுவந்த பொருளை இல்லின் முன்றிலில் வைத்து பலர் அறிய என்னை மணந்து இனிதிருப்பர் எனும் குறிப்பு மொழி அறியப்படுகிறது.

"உரு கெழு யானை உடை கொடு அன்ன,

ததர் பிணி அவிழ்ந்த தாழை வான்பூ,

---

வளி பொரு வயங்கு பிசிர் பொங்கும்

நளி கடற் சேர்ப்பனொடு நகாஅ ஊங்கே"[17]

தாழையின் வெள்ளைப் பூக்கள் யானையின்கொம்பு போலவும் காற்று வீசுதலால் அப்பூக்களின் நுண்ணிய தாதுக்கள் மகளிர் கட்டிய சிற்றில்லில் உதிர்க்கும் பஞ்சு போல பெருகும் அலைகளிலே காற்று வீசுதலால் பிசிர்கள் பொங்கும் கடல் சேர்ப்பனோடு இருந்தும் இல்லாததுபோல் உணர்க்கின்றேன் என்றும் அவரே நம் தலைவன் என்றும் தலைவி உறுதிப்படுத்துகிறாள்.

இரவு நேரத்தில் தலைவன் சிறைப்புறமாக இருப்பதைக்கண்டு தலைவன் அறியுமாறு தோழி மேகமே!நீ தான் இருண்டு மின்னி வெறும் அரவம் செய்வாயோ? அல்லது தலைவி காக்கும் தினைப்புனத்திற்கு மழையைத் தருவாயோ? வாழியே! என மேகத்தின் மீது தன் கருத்தை வைத்து மொழிகின்றாள்.

"பெருங்கிளை முகந்த இருங்கிளைக் கொண்மூ

இருண்டுயர் விசும்பின் வலனேர்பு வளைஇப்

---

குறமகள் காக்கும் ஏனற்

புறமும் தருதியோ வாழிய மழையே"[18]

தலைவன் அறிதற்காக மேகத்தின்மேல் வைத்துக்கூறும் தோழியின் கூற்று தலைவனை வரைவு கடாதற்காகும். இப்பாடற் குறிப்புப் பொருளையும் நல்குகின்றது. "இரவிற் சிறைப்புறமாகவுள்ள தலைவனைத் தோழி இங்ஙனம் மழையாக் கொண்டு குறிப்பினாலே நீ இங்ஙனம் வந்து ஒழுகுதலாற் பயனின்றி அலர் விளைக்கின்றாயோ அன்றி வரைந்து கொள்வையோ எனக் கூறி வரைவு கடாயினாள் என்க" என்னும் அகநானூற்றின் உரை ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. இப்பாடலில் குறிஞ்சிநிலக் கருப்பொருளாகிய வேங்கை, குறமகள் தினைப்புனம், தினைப்புனக்காவல் ஆகியன குறிஞ்சிநில உரிப்பொருளாகிய புணர்தல் நிமித்தத்திற்குப் பின் புலமாக அமைகின்றன.

## கூற்றினைக் கேட்டற்குரியோர்

தொல்காப்பியர் ஒரு மாந்தர் கூற்றினைக் கேட்போர் இரு வகைப்படுவர் என்கிறார்.

1.மாந்தர்

2.அஃறிணைப்பொருள்கள்.

என்பனவாகும்.

## 1.கேட்போர்–மாந்தர்

செய்யுளியலில் தொல்காப்பியர் ஒரு மாந்தர் கூற்றைக் கேட்டற்குரிய மாந்தர் பற்றி ஏழு நூற்பாக்களில் எடுத்தியம்புகின்றார்.[19] அந்நூற்பாக்களில் தலைவன், தலைவி, பார்ப்பார், அறிவர், நற்றாய், கண்டோர், பரத்தை, வாயில்கள் ஆகிய எண்மருடைய கூற்றுகளைக் கேட்கும் மாந்தர்பற்றி மட்டுமே குறிப்பிட்டுள்ளார்.

தலைவன், தலைவி கூற்றைக் கேட்போர் பற்றி,

"மனையோள் கிளவியுங் கிழவன் கிளவியும்
நினையுங் காலைக் கேட்குநர் அவரே"[20]

என்ற நூற்பாவில் கூறியுள்ளார். 'அவரே' என்ற சுட்டு, கூற்றிற்குரியோர் என அவரால் வரையறுத்துக் கூறப்பட்ட பன்னிருவருள் தலைவனும் தலைவியுமொழிந்த பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் ஆகியபதின்மரைச் சுட்டி நிற்கின்றது. இவ்விருவர் கூற்றை இப்பதின்மரும் கேட்பர் என்பதால் தலைவன் கூற்றைத் தலைவியும், தலைவி கூற்றைத் தலைவனும் கேட்பர் என்பது வெளிப்படை. எனவே தொல்காப்பியர் கருத்துப்படி கூற்றிற்குரியர் அனைவரும் 'கேட்போர்' ஆவர்.

அகப்பாடல்களில் தலைவன் மற்றவர்களுக்குக் கூறுவதைவிடத் தன் நெஞ்சுக்குக் கூறுவதாக அமைந்துள்ள பாடல்களின் எண்ணிக்கையே மிகுதியாகக் காணப்படுகிறது. நெஞ்சு கூறுவோரினின்றும் பிரிக்க முடியாத உணர்வுப் பொருள் ஆதலின் இவ்வகைப் பாக்கள் தனிமொழியில் அடங்கும் என்பது கருதத்தக்கது. தலைவன் தன் நெஞ்சுக்கு அடுத்துத் தேர்ப்பாகற்கே அதிகம் எடுத்துரைப்பவனாகின்றான். தலைவனுக்கும் தேர்ப்பாகனுக்கும் உள்ள தொடர்பினை இதன் மூலம் அறியமுடிகின்றது.

## தலைவன் தேர்ப்பாகற்குக்கூறியது

தலைவற்குரிய கிளவிகளையெல்லாம் தொகுத்துக்கூறும் தொல்காப்பியர் பாகனைக் குறிப்பிடுங்கால்,

" பேரிசை ஊர்திப் பாகர் பாங்கினும்"[21]

என்று கூறுவர். தலைவியைப் பிரிந்துறையுங்கால் பாகன் ஒருவனே தலைவனுடன் நெருங்கிப் பணிபுரிபவனாக– அணுக்கத்தொண்டனாக இருப்பதால் பாகனிடம் மட்டிலுமே தலைவன் தன் கடமைகளை இனிதே முடிக்க மகிழ்ச்சியையும் பிறவற்றையும் புலப்படுத்துவான். இதனை,

"________________ முடிந்த காலத்துப்

பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்"[22]

என்னும் தொல்காப்பிய நூற்பா உணர்த்தும்.

அகப்பாடல்களில் சிறப்பாக நற்றிணையிலும் அகநானூற்றிலும் தலைவன் தலைவியைச் சந்திக்க விரும்பும் தன் ஆரா விருப்பத்தைப் புலப்படுத்தும் நிகழ்ச்சிகள் அடங்கிய பாடல்கள் பலவற்றைக் காணலாம்.

" எல்லிடை யுறாஅ அளவை வல்லே
கழலொலி நாவில் தெண்மணி கறங்க
நிழலொலிப் பன்ன நிமிர்பரிப் புரவி
வயக்குறு கொடிஞ்சி பொலிய வள்பாய்ந்து
இயக்குமதி வாழியோ கையிடை வலவ!
பசப்புறு படர்அட வருந்திய
நயப்பின் காதலி நகைமுகம் பெயவே"[23]

இப்பாடற்பகுதியில் "என்காதலியின் முறுவலித்த முகத்தினைக் காண்பதற்காக, தேரிலுள்ள மணி ஒலிக்க நிமிர்ந்த செலவினையுடைய குதிரைகளை, கடிவாளத்தை ஆய்ந்து செலுத்தி, கொடிஞ்சி பொலிவுற்றுக் காணுமாறு தேரினைச் செலுத்துவாயாக" என்று பாகனை நோக்கி தலைவன் கூறுவதைக் காணலாம்.

தலைவன் பாகனிடம் பேசும் பொழுதெல்லாம் தலைவியின் நற்பண்புகளைப் புகழ்வதுடன் தானும் அவளும் அன்புடன் இனிய வாழ்வு நடத்தியபோது ஏற்பட்ட இனிய நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டுப் பேசுவதைக் காணலாம். இதனால் தலைவன் தன் பாகன் மீது கொண்டுள்ள நம்பிக்கையும் மதிப்பும் தெளிவாகப் புலனாகின்றன. தேரினைக் கடவும்

பாகனின் திறன் அடிக்கடி தலைவனால் குறிப்பிடப்பெறுவதைப் பாடல்களில் காண்கின்றோம்.

"செல்க தேரே நல்வலம் பெறுந"[24]

நூலறி வலவ! கடவுமதி"[25]

"இடிமறந் தேமதி வலவ"[26]

"ஊர்மதி வலவ!தேரே"[27]

"வல்விரை தூர்மதி நல்வலம் பெறுந"[28]

தான் விரைவில் வீட்டை அடைய வேண்டும் என்ற அவாவினால் இங்ஙனம் பாகனைப் புகழ்கின்றான். தலைவன் பாகனும் இதனால் உற்சாகமுற்றுத் தேரினை விரைவாகச் செலுத்துகின்றான்.

தலைவியை விட்டுப் பிரிந்து வினைமேற் சென்ற தலைவன் திரும்பி வருகின்றான், தேரின்மீது வருகின்றான். தேர்ப்பாகனை நோக்கி " இன்று மாலை வருவதற்குள் தலைவி இருக்குமிடத்திற்கு விரைவில் தேரைச் செலுத்து வாயாக" என்கின்றான். இச்செய்தியைக் கொண்ட குறுந்தொகைப்பாடல்,

" பரவலற் படுநீர் மாந்தித் துணையோ(டு)
இரலை நன்மான் நெறிமுதல் உகளும்
மாலை வாரா அளவைக் கால் இயல்
கருமாக் கடவுமதி பாக! நெடுநீர்ப்
பொருகயல் முரணிய உண்கண்
தெரிதீம் கிளவி தெருமரல் உயவே"[29]

இதில் "மாலை நேரம் வருவதற்குள் தலைவி இருக்கும் இடத்திற்குத் தேரைச் செலுத்துவாயாக" என்று தலைவன் பாகனை நோக்கி கூறுவதைக் காணலாம்.

நற்றிணையில் இத்தகைய காட்சிகளை நவிலும் பாடல்கள் உள்ளன.

"செல்க–பாக! நின் செய்வினை நெடுந்தேர்
விருந்து விருப்புறூஉம் பெருந்தோட் குறுமகள்
மின்ஒளிர் அவிர் இழை நல் நகர் விளங்க
நடை நாட் செய்த நவிலாச் சீறடிப்
பூங் கட் புதல்வன் உறங்குவயின் ஒல்கி,
'வந்தீக, எந்தை!' என்னும்
அம் தீம் கிளவி கேட்க நாமே"[30]

இதில் "பாகனே, என் மாளிகையில் என் அருமை மகன் மெருகிட்ட அணிகலன்களை அணிந்த வண்ணம் துயில்வான். நம் வருகையை அறியும் தலைவி நம்மை எதிர்கொள்ள 'எந்தாய் வருக' என்று மகனை எழுப்புவாள். இருவரும் வந்து என்னைக் காண்பர். அந்தக் காட்சி நெடுவழி வந்த வருத்தத்தைப் போக்கும். காதலியின் சொல் எனக்கு அமிழ்தமாகவும் இருக்கும். ஆதலின் அவ்வினிய சொல்லை யான் கேட்குமாறு நின் கைவன்மையால் விரைந்து தேரைக் கடவுக" என்று தலைவன் கூறுவதைக் காணலாம்.

வினைமுற்றி மீளுந் தலைவன் தன் குறிப்பறிந்து பாகன் மிக விரைவாகத் தேர் செலுத்தும் திறன் குறித்து,

"வான்வழுங் கியற்கை வளிபூட் டினையோ
மானுரு வாகநின் மனம்பூட் டினையோ
உரைமதி வாழியோ வலவ"[31]

என்று புகழ்ந்து கூறுகிறான். தலைவன் பாகனிடம் கூறும்போதெல்லாம் தலைவியின் நற்பண்புகளைப் புகழ்வதுடன் தானும் அவளும் அன்புடன் இனிய இல்லறம் நிகழ்த்திய

போது ஏற்பட்ட இனிய நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுவதை அகநானூற்றுப் பாடல்கள் விளக்குகின்றன. இதனால் தலைவன் பாகன் மீது கொண்டுள்ள நம்பிக்கையும், மதிப்பும் தெளிவாகப் புலனாகின்றன.

முல்லைத் திணையில் தேர்ப்பாகற்கு மட்டுமே கூறியதாக அமைந்த பாடல்கள் காணப்படுகின்றன. முல்லைத் திணையில் வினைவயிற் பிரிந்து சென்ற தலைவன் கார்ப் பருவத்தில் வருவேன் என்று கூறிச் செல்வதும், அவன் பிரிவைத் தலைவி ஆற்றியிருத்தலும் நிகழும் நிகழ்ச்சிகள். வினை முடிந்து தேரேறி வரும் தலைவன் விரைவில் தலைவியைக் காணப் பாகனிடம் தேரை விரைந்து செலுத்துமாறு வேண்டுவன். எனவே முல்லைத் திணையில் மட்டுமே தலைமகன் தேர்ப்பாகனிடம் கூறும் கூற்றுகள் நிகழும்.

வேந்தனுக்கு உறுதுணையாகப் போர் மேற்செல்லும் தலைவன் போர் முற்றியபின் இல்லம் திரும்புவான். அவ்வாறு வரும்போது பாகனிடம் தேரை விரைந்து செலுத்தித் தலைவியைக் காண உதவுமாறு கூறுவான். இச்செய்தியை முல்லைத் திணைக்குரிய கருப்பொருள் வழி உணர்த்தும் திறம் பாராட்டத்தக்கது.

"விருந்தின் மன்னர் அருங்கலந் தெறுப்ப
வேந்தனும் வெம்பகை தணிந்தனன் தீம்பெயற்
.....................................
திதலை யல்குலெங் காதலி
புதல்வற் பொய்க்கும் பூங்கொடி நிலையே"[32]

இப்பாடல் வினைமுடித்து மீளும் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது என்னும் துறை சார்ந்தது.

இப்பாடலில் முல்லைத் திணையில் முதற் பொருளாகிய மாலைக் காலத்தை உணர்த்த மழை பொழிவது முதலில் கூறப்பட்டது. பிறகு சிவந்த நிறமுள்ள முல்லை நிலம். இந்திரகோபப்பூச்சி, கோல்தாங்கிக் குழல் ஊதிக் கொண்டு வரும் கோவலர் பின்வர ஆநிரைகள் கன்றினை நினைந்து மனை படரும் நனைநகு மாலை என முல்லைத் திணைக்குரிய கார் காலமும் மாலை நேரமும் கூறப்பட்டுள்ளன. பாக! தேரை விரைந்து செலுத்துக! 'மதியே! என் மகனை நினைந்து இங்கு வந்தால் நினக்கும் பால் சோறு தருவேன் என இனிய கூறி விரல் விளி பயிற்றிப் புதல்வற் பொய்க்கும் பூங்கொடி நிலை காண்குவம்' என்று கூறுகிறான் தலைவன்.

## தலைவி கூற்று

வாழ்வில் குடும்பத்தை வளர்த்தும் காத்தும் வளஞ்செய்பவள் தலைமகள். இலக்கியத்தில் இவள் பெறுமிடம் இன்றியமையாதது. தலைமகளின் குணநலன்களைக் கூறும் தொல்காப்பியர், "கற்பு, காமம், ஒழுக்கம், பொறுமை, பெருமை, விருந்தோம்பல், சுற்றம் ஓம்பல் போன்ற பிறவுமாம்" எனக் கூறுகிறார்.[33]

நாண் என்பது பெண்டிர்க்கு இயல்பாக உள்ளதொரு தன்மை. மடம் என்பது, கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. அச்சம் என்பது, பெண்மையில் தான் காணப்படாததொரு பொருள் கண்டவிடத்து அஞ்சுவது. பயிர்ப்பு என்பது, பயிலாத பொருட்கண் அருவருத்து நிற்கும் நிலைமை. இத்தகைய சிறப்புகளையுடைய தலைவியாகப் பொலியக் கூடிய பெண் பிறவியை மலைநாட்டுத் தலைவன் ஒருவன் இறையை வேண்டிப் பெறுகின்றான். இதனை,

"குன்றக் குறவன் கடவுட் பேணி
இரந்தனன் பெற்ற எள்வளைக் குறுமகள்"[34]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடற் பகுதியால் அறிகின்றோம். இவளுடைய தனிப் பெருமையை உணர்த்துவதற்காகவே அகப்பொருள் நுதலும் நூல்கள் இவளுக்குத் தங்கை தமக்கை இருப்பதாகவே காட்டவில்லை போலும்.

இவள் சிறுமியாக இருந்த பொழுது மிகச் செல்லமாக வளர்க்கப் பெற்றவள் என்பதைப் பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பாலை உண்ண மறுக்கும் சிறுவிளையாட்டியாகவும், [35]

"செல்வத் தந்தை இடனுடை வரைப்பின்
ஆடுபந்து உருட்டுநள் போல ஓடி
அஞ்சில் ஓதி இவளுறும்
பஞ்சி மெல்லடி நடைபயிற் றும்மே" [36]

என்று பஞ்சு போன்ற மெல்லடியினை உடையாளாகவும் நற்றிணை குறிப்பிடுவதால் அறியலாம். இதனை அகநானூற்றுப் பாடல் ஒன்று மேலும் தெளிவுறுத்துகின்றது. இங்குச் சிறுமியாகிய தலைவி அதிக நேரம் விளையாடுவதைத் தாய் பொறுக்க முடியாத நிலையிலிருப்பதைக் காண்கின்றோம். விளையாட்டின் நடுவிலேயே ஒரு கிண்ணத்தில் பால் கொணர்ந்து அவளை அருந்தச் செய்கின்றாள். அவளோ ஒரு சிறிது அருந்தியதும் ஓடுகின்றாள். "எனக்காகச் சிறிது குடித்தாய்; உங்கள் அப்பாவிற்காகச் சிறிது குடி" என்று கெஞ்சித் தன் செல்வக் குழந்தையை அழைக்கின்றாள். [37] இதில் செல்லமாக வளர்த்த தலைமகளைத் தலைவன் சுட்டிச் சென்று விட்டானே என்று தாய் வருந்துவதைக் காணலாம்.

தலைவி தோழியிடம் களவுக் காதலுக்கு ஏற்படும் பல இடையூறுகளைத் தொகுத்துக் கூறும் பாடல் நயமிக்கது.[38] இரும்பிழிமாரி அழுங்கல் மூதூர் விழவின்றாயினும் துஞ்சாது. ஊர் துஞ்சினும் வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள். அன்னை துஞ்சினும் காவலர் துஞ்சார். காவலர் துஞ்சினாலும் நாய் துஞ்சாது. நாய் துஞ்சினும் நிலவு ஒளிரும். நிலவு மடியின் கூகை குழறும். கூகை துஞ்சினும் மனைச் செறி கோழியின் குரல் இயம்பும்.

அனைத்தும் துஞ்சினும் நில்லா நெஞ்சத்துத் தலைவன் வாரான் எனும் தலைவியின் கூற்று கருப்பொருள்களின் துணை கொண்டு களவுக் காதலுக்கு ஏற்படும் தடைகளை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது. இதன் மூலம் விரைவில் மணந்து கற்பு நெறியில் வாழத் தலைவனை நெறிப்படுத்த வேண்டும் என்பது நோக்கமாக அமைகிறது.

"மன்றுபா டவிந்து மனைமடிந் தற்றே
கொன்றோ ரன்ன கொடுமை யோடின்றே
.................................
இருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே"39

என்ற தலைவியின் கூற்று அவளுடைய காதல் நெஞ்சத்தின் புலப்பாடாகத் தோற்றுகிறது. இவ்வாறு காமத்தின் காரணமாகத் தலைவி துன்புறும் நிலையில் அவளது நெஞ்சம் தலைவன் வரும் வழியை எண்ணி அவனது அடிகள் துன்புறாது தாங்கும் பொருட்டுச் சென்று விட்டதாகக் கூறுகிறாள்.

தலைவி கூற்றாக அமைந்த,

"குன்றக் கூகை குழறினும் முன்றிற்
பலவின் இடுஞ் சினைக் கலை பாய்ந்து உகளினும்
..............................
அஞ்சும்மன் அளித்து என் நெஞ்சம்! இனியே
ஆர் இடுட் கங்குல் அவர்வயின்
சாரல் நீள் இடைச் செலவு ஆனாதே"40

என்ற பாடல் ஆந்தையின் ஒலியும் குரங்குகள் பாயும் ஒலியும் கேட்டு தலைவியின் நெஞ்சு நடுங்குவதால் இரவில் தலைவன் வரும் வழியின் ஏதம் கருதி, அஞ்சுவதாக தன் ஆற்றாமையை வெளிப்படுத்துகிறாள்.

குறுந்தொகைத் தலைவி ஒருத்தி கார் பருவம் வந்ததை அறிந்து தலைவன் வாராததால் துன்புற்று வருந்துகிறாள். ஆண்மான் பெண்மானோடு களிப்பினால் துள்ளி விளையாடும் காட்சியைப் பார்த்தும் மீண்டு வருதலை எண்ணாது தங்கிய தலைவன் தலைவி உயிரோடு இருத்தலை அறிந்து மீண்டு வருதலைக் கேட்டற்குக் கார்ப்பருவம் வந்ததாகக் குறிப்பிடுகிறாள். [41]

ஐங்குறுநூற்றில் மருதத்திணையில் கிழத்தி கூற்றுப் பத்து எனும் தலைப்பில் பத்துப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இவை தலைவன் புறத்தொழுக்கம் உடையவனாய் ஒழுகித் தன் இல்லத்திற்கு வந்தபோது தலைவி அவனுடன் புலந்து கூறுவதாகும்.

> "நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
> நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழூஉம்
> கைவண் மத்தி கழாஅர் அன்ன
> நல்லோர் நல்லோர் நாடி
> வதுவை அயர விரும்புதி நீயே" [42]

என்ற பாடல் மருதநில வளத்தைக் காட்டுகிறது. மாம்பழம் பொய்கையில் விழும் மத்தி என்பவனின் கழார் ஊரைச் சார்ந்த நல்ல மகளிரை மணம் செய்து கொள்ளும் தலைவனிடத்து இனி இதுபோல் நிகழாது என்று கூறுவது ஏன் ? எனக் கேட்கிறாள்.

## தோழி கூற்று

அகப்பொருள் பாத்திரங்களுள் மிகவும் பொறுப்பு வாய்ந்தவளும் அதிகம் இடம்பெறுபவளும் தோழியாவள். தலைவன், தலைவி, நற்றாய், செவிலி, பரத்தை, பாணன் போன்றவர்கட்கு அமைவன கூறி வாழ்வைச் செப்பஞ் செய்யும் ஆற்றல் பெற்றவள் தோழியாவாள். "தலைவனைக் கண்டவுடன் மயங்கி விடும் தலைவி போலாது பன்னாளும் அவன் குணங்களை ஆய்ந்து தேர்ந்து முடிவில் தலைவனிடம் கூட்டுவிப்பாள்.

தலைவனுடைய பிரிவுகளின் பொருத்தங்களை ஆய்ந்து ஒப்பித் தலைவியும் ஒப்புமாறு வற்புறுத்துவள். பிரிந்து வருந்தும் தலைவியைப் பல்லாற்றானும் தேற்றுபவள். ஒரோவழித் தலைவன்பால் குறைகள் காணின் கழறியுரைத்துத் திருத்துபவள். களவு, கற்பு என இரு கைகோள்களிலும் இத்தோழி தொடர்பு இல்லாத இடனில்லை என்று கூறத்தக்க முதன்மை வாய்ந்தவள்."[43]

## தோழி தலைவனைவரைவு கடாயது

அறிவு முதிர்ச்சியும் சிந்தனைச் செல்வமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற தோழி தலைவியின் வாழ்க்கையில் களவு என்று ஒன்று நடைபெற்றது என்பது தோன்றாவகையில் மனத்தை முடித்து வைக்கவே பாடுபடுவாள்; பல்வேறு வழிகளால் வற்புறுத்தி உரைப்பாள். இவ்வாறு மணம் செய்து கொள்ளுமாறு குறிப்பாகவோ வெளிப்படையாகவோ கேட்டலை அகத்திணை இலக்கணம் வரைவு கடாதல் என்ற துறையாக எடுத்துப் பேசும்.

தோழி தலைவனிடம் அவர்கள் களவொழுக்கம் ஊராரால் அறியப்பெற்று, முதலில் அம்பலாக முளைத்துப் பின்பு அலராக வளர்ந்தது என்று கூறி இனி வரைந்து கொள்வதில் காலம் தாழ்த்தல் கூடாது என்று வெளிப்படையாகவே கூறுவாள். அலரறிவுறுத்தலை,

"அறிந்தோர் 'அறனிலர்' என்றலின் சிறந்த
இன்னுயிர் கழியினும் நனிஇன் னாதே
..................................
தேர்வழங்கு தெருவின் அன்ன,
கௌவை ஆகின்றதுஐயநின்! அருளே"[44]

என்ற நற்றிணைப் பாடலால் அறியலாம். இது மணம் செய்து கொள்ளாது களவுப் புணர்ச்சியே கருதி வந்தொழுகும் தலைமகனைத் தோழி குறியிடத்தில் தொழுது தலைவனால் அருளிப் பாட்டோடு செய்த தலையளிதான் பலராலும் அறியப்பெற்று

அலராயிற்று என்றும், இனி இவள் இறந்து பட்டொழியினும் இப்பழிச்சொல் நீங்குவதொன்றன்று என்றும் வரைவு தோன்றக் கூறுவதை அறியலாம்.

வரைவு கடாதல் பற்றிய பெரும்பாலான பாடல்கள் தோழி தலைவனிடம் கூறியனவாகவே அமைந்திருக்கும்.

"இளம்பிறை யன்ன கோட்ட கேழல்
களங்கனி யன்ன பெண்பாற் புணரும்
அயந்திகழ் சிலம்ப கண்டிகும்
பயந்தன மாதோநீ நயந்தோள் கண்ணே"[45]

தோழி பகற்குறிக்கண்ணே தலைவனை எதிர்ப்பட்டுத் தலைவியின் பசலை கூறி வரைவுகடாதலை இப்பாடலில் காணலாம். கலித்தொகைத் தோழியொருத்தி தலைவியின் ஆற்றாமையையும் தலைவனது களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாகின்றமையும் எடுத்துக்காட்டி வரைவு கடாவுகின்றாள்.

"வீழ்பெயல் கங்குலின் விளியோர்ந்த ஒடுக்கத்தால்
வாழுநாட் சிறந்தவள் வருந்துதோள் தவறுண்டோ
தாழ்செறி கடுங்காப்பின் தாய் முன்னர் நின்சாரல்
ஊழுறு கோடல்போல் எல்விளை உகுபவால்"[46]

தாயால் தலைவி இற்செறிக்கப்பட்டிருப்பதையும், தலைவன் இரவுக் குறியின்போது செய்யும் குறிகளைத் தாரகமாகக் கொண்டு அவள் உயிர் வாழ்வதையும் பாடல் புலப்படுத்துகின்றது. "இந்நிலையில் அவளுடைய பூப்போலும் கண்பாடின்மையை நீங்கிப் பாடுவதற்கும் அஞ்சுவேன்; அதற்குக் காரணம் என்னவெனில், அத்துயிலிடை வருந்தத் தக்க களவால் பின்னர்த் தாங்கிய அரிய வருத்தத்தால் உற்ற கேட்டைச் சீர்தூக்கின் அஃது எல்லையறிய வொண்ணாது. இனி இவ்வருத்தம் அவள் உறாதவண்ணம் நீ வரையாமல் பிரியப்

பட்டாளொடு கொண்ட உறவு பின்னுதலை நீ ஈதல் வேண்டும்" என்று கூறி வரைவு கடாவுகின்றாள் தோழி.

## தோழி செவிலித் தாய்க்கு அறத்தொடு நிற்றல்

தலைவியின் களவொழுக்கம் தோழியின் துணையினால் தொடர்கின்றது. 'களவிற்குத் தோழியே சிறந்தா ளாயிற்று' என்பர் நச்சினார்க்கினியர்.[47] அறிவாற்றலும் பண்பு நலனும் வாய்ந்த தோழியின் துணையினால் தலைவியின் களவொழுக்கம் கற்பொழுக்கமாக மாறுகின்றது.

தான் கொண்ட காதலைத் தலைவி தோழிக்கு உணர்த்த, தோழி செவிலிக்கு உணர்த்த, செவிலி நற்றாய்க்கு உணர்த்த, நற்றாய் தந்தைக்கு உணர்த்த தந்தை அறிந்து மணமுடிக்கும் இயல்பு இருந்த நிலையை 'அறத்தொடு நிற்றல்' என்ற துறை உணர்த்துகிறது.

வலிய வில்லைக் கையிலேந்தி வரும் தலைவன், தன்னால் அம்பு எய்யப் பெற்ற யானையைத் தேடித் தினைப்புனம் வரும்போது பார்த்தோர் பலராவர். ஆயின் நீர் சொரியும் கண்ணுடன் நெகிழ்ந்த தோளுடன் ஆனது தான் மட்டுமே எனக் கூறுவதன் வழித்தான் கொண்ட காதலைத் தோழியிடம் வெளிப்படுத்துகிறாள் தலைவி.[48] பத்துப்பாட்டுள் ஒன்றான குறிஞ்சிப் பாட்டு தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல் என்னும் துறையில் அமைந்த பான்மையது.

களவில் ஒழுகும் ஐங்குறுநூற்றுத் தலைவி ஒருத்தியின் உடல் வேறுபாடு கண்டு ஐயுற்ற செவிலி 'இஃது எற்றினானாயிற்று ?' என வேலனை வினவினளாக, அவன் கழங்கு பார்த்து இது தெய்வத்தினானாயிற்று' என்று கூற, அஃதுணர்ந்த தோழி செவிலி கேட்கும் பொருட்டு அவள் கேட்கும் முறையில் கழங்கை முன்னிலைப் படுத்திக் கூற அறத்தொடு நிற்கின்றாள்.

"பொய்படு அறியாக் கழங்கே! மெய்யே
மணிவரைக் கட்சி மடமயில் ஆலும்நம்
மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோன்
ஆண்டகை விறல்வேள் அல்லன் இவள்
பூண்தாங்கு இளமுலை அணங்கி யோனே"[49]

இதில் தலைவியை வருத்தியவன் முருகன் அல்லன், வேறொருவன் எனத் தோழி கூறி அறத்தொடு நிற்றலைக் காணலாம்.

குறுந்தொகைத் தோழி ஒருத்தி தலைவியின் களவொழுக்கத்தைப் புலப்படுத்தும் முறை இது. தலைவியின் உடல் வேறுபாட்டைக் கண்டு செவிலித்தாய் முதலியோர் நெற்குறி பார்ப்பவளைக் கொண்டு அதன் காரணத்தை ஆராயத் தொடங்குகின்றனர். குறத்திப் பாட்டு பாடிக் கொண்டு குறி பார்க்கின்றாள். தோழி குறத்தியை நோக்கி,

"அகவன் மகளே! அகவன் மகளே!
மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே! பாடுக பாட்டே;
இன்னும் பாடுக பாட்டே, அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே"[50]

என்று கூறுகின்றாள்.

## தோழி தலைவற்கு வாயில் மறுத்தல்

ஐங்குறுநூற்றில் தோழி தலைவனிடம் வாயில் மறுத்துப் பேசுதலை,

"நீருறை கோழி நீலச்சேவல்
கூருகிர்ப்பேடை வயாஅம் ஊர!

புளிங்காய் வேட்கைத் தன்றுநின்

மலர்ந்த மார்பிவள் வயாஅ நோய்க்கே"[51]

எனும் பாடல் காட்டும். நீருறை கோழி பெடையுடன் வாழும் எனும் மருதக் கருப்பொருளைக் காட்டி புளிங்காயை நினைத்தவழி வாயில் நீர் ஊறி வேட்கைத் தணிதல் போல அன்று நின் மார்பு பிரிவையும் துன்பத்தையும் தந்து வருத்துவது எனப் பரத்தையில் சென்று வந்த தலைவனை மறுத்துரைக்கிறாள்.

குறுந்தொகைத் தோழி 'வாரல் எம்சேரி தாரல் நின்தாரே' என்று மறுத்துரைத்து உரையாடுகிறாள்.[52]

நற்றிணையில் தோழி விறலியிடம் வாயில் மறுத்துரைக்கும் பகுதி வரலாற்று செய்தியுடன் அமைந்துள்ளது. முள்ளூர் எனும் ஊரில் ஆரியர்கள் ஒன்றுகூடி மலையனுடன் அஞ்சி ஓடியது போன்று விறலியின் வன்மைக்கு நாம் அழிந்து பயனில்லாது போவோம் என்று தோழி மறுத்துரைக்கிறாள்.[53]

## நற்றாய் கூற்று

அகஇலக்கியங்களில் இவளுடைய பங்கு மிகக் குறைவாகவே காணப்பெறுகின்றது. இவள் தன் மகளுடைய கரந்த வொழுக்கத்தைச் செவியுற்றதும், அவ்வொழுக்கத்தின் போக்கையும் தன் மகள் தேர்ந்தெடுத்த தலைவனுடைய பொருத்தத்தையும் தன் தோழியுடன் (செவிலியுடன்) ஆராய்ந்து வருவாள்.

"கிழவோன் அறியா அறிவினள் இவள்என

மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்

ஐயக் கிளவியின் அறிதலும் உரித்தே"[54]

என விதி செய்வர் தொல்காப்பியர். தலைவியின் பிற்கால வாழ்க்கையில் மிகவும் கருத்துடைய இவளைத் தலைவி தன் போக்கிற்கு இடையூறாக இருப்பதாக எண்ணி மனம்

வருந்துவாள். இதனால் தலைவி நற்றாய்க்கு 'வல்லுரைக்கடுஞ் சொல் அன்னை'[55] 'பிணிகோளருஞ் சிறை அன்னை'[56] 'அறனில் யாய்'[57] என்றின்னவாறெல்லாம் பட்டம் அளிப்பதுண்டு. தலைவி தனக்குத் தக்க தலைவனைத் தானே தேர்ந்து கொள்வது இவளுக்கு உடன்பாடேயாயினும், இவர்கள் உடனே வரைந்து கொண்டு வாழ்க்கை நடத்த வேண்டுமென்பதே இவள் எண்ணமாகும்.

## நற்றாய் வேலனை வினாயது

உடன்போய தலைவன் தலைவியர் சின்னாள் கழித்து மீண்டும் வருதல் பற்றிய செய்தி நற்றாய்க்குக் கிட்டுகிறது. இச்செய்தியறிந்த தாய் இருவரையும் ஆவலுடன் வரவேற்க விழைகிறாள். தலைவன் இல்லத்திலும் அவர்களை வரவேற்கச் சுவரில் செம்மண் பூசுகின்றனர். முற்றத்தில் மணல் கொட்டுகின்றனர். மாலை தொங்க விடுகின்றனர் என்ற செய்தியும் நற்றாய்க்குக் கிடைக்கிறது. தலைவியை உடன் அழைத்துச் சென்ற தலைவன் தன் வீட்டுக்கு வருவானா அல்லது அவர்கள் வீட்டுக்குப் போவானா என்ற வினாக்கள் அவள் உள்ளத்தில் எழுகின்றன. எனவே வேலனை அழைத்து,

"ஆகுவ தறியும் முதுவாய் வேல
கூறுக மாதோநின் கழங்கின் திட்பம்
மாறா வருபனி கலுழக் கங்குலின்
ஆனாது துயறுமெய் கண்ணினிது படீஇயர்
எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே"[58]

என்று தலைவனின் குறிப்பறிந்து கூறுமாறு வேண்டுகிறாள். தன் வீட்டுக்கே முதலில் அவர்கள் வருதல் வேண்டும் என்ற விழைவும் ஆர்வமும் அவள் குரலில் எதிரொலித்தலைக் காண இயல்கின்றது.

## செவிலி கூற்று

கூறுதற்குரிய மறைபொருளெல்லாங் குறிப்பானன்றிக் கூற்றினாற் கூறத்தக்கவள் செவிலியாகும்.

பிறந்தநாள் தொட்டுத் தலைவியைச் சிறந்திட வளர்த்து வருபவள் செவிலி. இவளே தலைவியின் உயிர்த் தோழியாக இருப்பவளை ஈன்ற தாய்; நற்றாய்க்குத் தோழியாக இருப்பவள். இதனை,

> "செவிலி நற்றாய் தோழி யாகி
> அவல நீக்கி அறிவும் ஆசாரமும்
> கொளுத்தித் தலைவியை வளர்த்த தாயே"[59]

என்று கூறுவர் நாற்கவிராச நம்பி. தொல்காப்பியரும்,

> "ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
> தாய் எனப்படுவாள் செவிலியாகும்."[60]

என்றும்,

> "கழிவினும் நிகழ்வினும் எதிர்வினும் வழிகொள்
> நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்
> செவிலிக் குரிய ஆகும் என்ப.[61]

என்றும் இவளை அறிமுகம் செய்து இவளது கடமைகளையும் தெளிவுறுத்துவர். அகநானூற்றுச் செவிலியும் தலைவியின் மென்மைத் தன்மையையும் அருஞ்சுரத்தின் கடுமையையும் நினைந்து நினைந்து உருகுவதை,

> "வளங்கெழு திருநகர்ப் பந்துசிறி தெறியினும்
> இளந்துணை ஆயமொடு கழங்குடன் ஆடினும்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

வைகுறு மீனில் தோன்றும்

மைபடு மாமலை விளங்கிய சுரனே"[62]

என்ற அகப்பாடலில் கண்டு தெளியலாம். உடன்போக்குச் சென்ற தலைவியைத் தேடிக் காணாது, பாலைநிலத்தில், "நடந்த கால்களும் ஓய்ந்தன; பார்த்த கண்ணும் பூத்தன. இருவரையும் கண்டேன் இல்லை" என்று வெறுத்துக் கூறுவதை,

"காலே பரிதப் பினவே; கண்ணே

நோக்கி நோக்கி வாள்இழந் தனவே

அகலிரு விசும்பின் மீனினும்

பலரே மன்றஇவ் உலகத்துப் பலரே"[63]

என்பதால் நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும் காட்சியைக் காணலாம்.

## உழையர் (இளையோர்) கூற்று

இவர் தலைவன் தலைவி இவர்களை விட்டுப் பிரியாது அவர்களுடன் இருந்து அவர்களுக்குக் குற்றேவல் செய்யும் ஏவலர் ஆவர். அகப்பாடல்களில் உழையர் கூற்றாகப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. வினை முற்றிய தலைமகன் கருத்துணர்ந்தும், தலைமகன் வரவு கண்டு தலைவிக்குக் கூறியதாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

சான்றாகத் தலைவனிடம் இளையோர் கூறுவதாக அமைந்த பாடல் ஒன்றில் "வேந்தனும் வென்று கொடி எடுத்தனன். பல்லான் மேய்க்கும் கோவலர் மீண்டும் மனை புகுதற்கு ஆநிரைகளை அழைக்கக் குழல்வாய் வைத்தனர். இளையர் விரைந்து ஏக, பாகன் விரைந்து தேரைச் செலுத்தப் புலவர் போற்றும் விழுப்புண் கொண்ட மார்பில் சந்தனம் அணிய வென்றிகொள். உவகையுடன் நீ இல்லம் புகுதல் வேண்டும். தீதிலாட்டியாகிய

தலைவியின் திருநுதற் பரந்த பசப்பு இனியாண்டு உறையும் என்றுரைத்தனன்.[64] இப்பாடலில் முல்லைத் திணையின் முதற்பொருள் கருப்பொருள்கள் சிறப்புறப் புனையப்பட்டுள்ளன.

**கண்டார் கூற்று**

இவர், களவுக் காலத்தில் தலைவியின் பெற்றோர் அவள் களவினை உணர்ந்து அவளை வேற்றவர்க்கு மணம் நிச்சயிக்கப்போகும்போதும், தலைவி தலைவனுடன் சென்று அவன் மனையில் வரைந்து கொள்ளும் நோக்குடன் செல்லும்போதும் காட்டு வழியில் சந்திக்கும் மாந்தர் ஆவர். உடன்போக்கில் தலைவனும் தலைவியும் தமரின் நீங்கிச் சென்ற காலத்தில் அவர்களைத் தேடிச் சென்ற செவிலியிடம் இடைச் சுரத்துக்கண்டோர் கூறியதாக ஒரு குறுந்தொகைப் பாடல் உள்ளது.

> "வில்லோன் காலன கழலே; தொடியோள்
> மெல்லடி மேலவும் சிலம்பே; நல்லோர்
> ..............................
> வேய்பயில் அழுவம் முன்னி யோரே"[65]

தலைவி காலில் அணிந்திருந்த சிலம்பினால் அவ்விருவருக்கும் மணம் நடைபெறவில்லை என்பதை உணர்ந்து இரங்கிக் கூறுகின்றனர். கண்டோர் சொல்லியதாக நற்றிணையிலும் ஒரு பாடல் வருகின்றது.

> "வையெயிற்(று) ஐயள் மடந்தை முன்னுற்று
> எல்லிடை நீங்கும் இளையோன் உள்ளம்
> காலொடு பட்ட மாரி
> மால்வரை மிளிர்க்கும் உருமினும் கொடிதே"[66]

இதில் "மடப்பமும் இளமையும் பொருந்திய இவளை முன்னே செல்ல விடுத்துப் பின்னே செல்லும் இளைஞனின் உள்ளம் காற்றொடுபட்ட மாரிக் காலத்தே மலை பிளக்க

இடிக்கும் இடியைக் காட்டிலும் கொடியது போலும்'' என்று கண்டோர் வருந்திச் செல்வதைக் காணலாம். ஐங்குறுநூற்றில் ஒரு பதிகம் முழுவதும் கண்டோர் கூற்றாகவும் பிறவாகவும் அமைந்துள்ளது.[67]

"புன்கண் யானையொடு புலிவழங்(கு) அத்தம்
நயந்த காதலற் புணர்ந்து சென்றனளே
நெடுஞ்சுவர் நல்இல் மருண்ட
இடும்பை யுறுவிநின் கடுஞ்சூல் மகளே''[68]

இதில், "நீ மருண்டு உன் வீட்டில் இற்செறிந்த கொடுமை பொறாது, நின் நல்லில்லில் நின்னோடு உறைதலினும் யானையும் புலியும் வழங்கும் காட்டுவழியில் தன்னை நயந்தானோடு போதலே அறமாம் என்று துணிந்து போயினள்'' என்று கூறுவர். 'அஃது அவட்கு அறமே ஆகும். ஆதலால் நீ வருந்தற்க' என்ற குறிப்பெச்சமாகப் பெற வைத்த நயம் உணர்ந்து மகிழத் தக்கது.

## பாங்காயினார் கேட்பக் கூறியது

பாங்காயினார் கேட்பக் கூறியது என்னும் துறையில் பரத்தை, பாணன் ஆகிய இருவரின் கூற்றுக்கள் இடம்பெறும்.

பரத்தையரைப்பற்றி இளம்பூரணர் கூறுவது: "பரத்தையராவார் யாவரெனின் அவர் ஆடலும் பாலும் வல்லராகி அழகும் இளமையும் காட்டி இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர் மாட்டுந் தங்காதார்''[69] என்பது. பண்டைக் காலத்தில் இங்ஙனம் ஒருவகையார் உளராய உண்மையினை மறைக்காது எடுத்துக் காட்டிய ஒரு சிறப்பினானே நாம் நம் பண்டைய நூல்களிடத்து, அவை கூறும் ஏனைய தலைவன் முதலியோர் பெருமைகளை உள்ளதை உள்ளபடியே கூறும் உண்மைக் கூற்றுக்களாகத் தெளிந்து ஒரு தனி மதிப்புக் கொள்ளுகின்றோம்.

பாணன் அகத்திணை நாடகத்தில் வரும் சிறுமாந்தர்களுள் ஒருவன். பண் என்பது இசை. இசையில் வல்லுநனாக இருப்பவன் பாணன். யாழினை இயக்கி அதனைப் பக்க வாத்தியமாகக் கொண்டு பாடவல்லவனாதலின் இவன் யாழ்ப்பாணன் எனவும் வழங்கப் பெறுவான். "கைகவர்நரம்பிற் பனுவற் பாணன்"[70] என்று நற்றிணையிலும் "முல்லை நல்யாழ்ப் பாணன்"[71] "கைவல்சீறியாழ்ப் பாணன்"[72] என்று ஐங்குறுநூற்றிலும் பிற இடங்களிலும் இவனைப் பற்றிய குறிப்பு வருதலினின்றும் இதனை ஒருவாறு அறியலாம். அகப்பாடல்களில் காணப்பெறும்இவன் தலைவனைப் பரத்தையரிடம் கூட்டி வைப்பதற்குக் கருவியாக அமைபவன்.

தலைவனின் பரத்தைப் பிரிவுக்குக் காரணமாயிருந்த பாணன் தலைவியுடன் கூட்டிவைப்பதற்கும் வாயிலாக வருகின்றான். தலைவி வெகுளுவதனை அறிந்த தோழி வாயில் மறுக்கின்றாள். அப்பொழுது அவ்வழியே ஊரில் திருவிழா நடப்பதனை ஊரார்க்குத் தெரிவிக்குமாறு போந்த குயவனை நோக்கிப் பேசுவதாக அமைந்த நற்றிணைப்பாடல் ஒன்றில்

"....... அகனெழுந் தெருவில்
சாறெனை நுவலும் முதுவாய்க் குயவ!
..................................
ஐதகல் அல்குல் மகளிர்! இவன்
பொய்பொதி கொடுஞ்சொல் ஓம்புமின் எனவே"[73]

"அறிவு வாய்ந்த குயவனே, நீ திருவிழாச் செய்தியினை அறிவிக்கும்பொழுது ஆங்காங்குள்ள மகளிரிடம் 'மங்கைமீர், இசையால் மயக்க வல்ல பாணன் செய்த துன்பங்கள் பலவாகி வளர்வன வாயின. ஆகவே, பொய் பொதிந்த அவன் சொல்லினின்றும் நும்மைப் பாதுகாத்துங் கொள்ளுவீர்களாக' என்றும் சேர்த்துக் கொள்க" என்று தோழியின் கூற்றில் பாணன் செய்த கொடுமை புலப்படுவதைக் காணலாம்.

### கேட்போர் – அஃறிணைப் பொருள்கள்

ஒருவர் கூற்றினைக் கேட்டற்குரிய அஃறிணைப் பொருள்களை,

"ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
அவையல பிறவு நுதலிய நெறியாற்
சொல்லுந போலவுங் கேட்குந போலவுஞ்
சொல்லியாங் கமையும் என்மனார் புலவர்"[74]

என்னும் தொல்காப்பிய நூற்பா எடுத்துக் காட்டுகின்றது.

இப்பொருள்களுள் ஞாயிறு, திங்கள், கடல், கானல், விலங்கு, மரம், பொழுது, புள் ஆகியன கண்ணால் காண்டற்குரிய பருப்பொருள்கள்; அறிவு, நாண் ஆகியன மனத்தால் உணர்தற்குரிய கருத்துப் பொருள்கள்; நெஞ்சு கூறுவோரினின்று பிரிக்க முடியாத உணர்வுப் பொருள். தொல்காப்பியர் கேட்பதற்குரிய அஃறிணைப் பொருள்களாகக் கூறும் ஞாயிறு, திங்கள் முதலியவற்றுள் நெஞ்சு நீங்கலான பொருள்களை விளித்துக் கூறுவது அஃறிணைப் பொருள் கேட்குமாறு கூறுவதாகும். தொல்காப்பியர் கேட்பதற்குரிய அஃறிணைப் பொருள்களுள் வாயுடைய விலங்கையும், புள்ளையும் சொல்லா மரபின என்றும், ஏனையவற்றுள் நெஞ்சு நீங்கலாக உள்ள பிறவற்றைச் 'செய்யா மரபின' என்றும் இருவகைப்படுத்துகின்றார்.[75] இப்பொருள்கள் கூறுபவர் கூறுவதைக் கேட்பதில்லை; கூறுவதற்குப் பதில் கூறுதலில்லை; கூறுவதைச் செய்வதுமில்லை. ஆயினும், கூறுபவர்க்குத் தாம் கூறுவதை அவை கேட்பது போலவும், கூறுவதற்குப் பதில் சொல்வது போலவும், கூறுவதைச் செய்வது போலவும் தோன்றலின் ஒரு மன நிறைவு ஏற்படுகின்றது. பெரும்பாலும் துன்ப உணர்வினும், சிறுபான்மை இன்ப உணர்வினும் இத்தகு கூற்றுகள்

ஒருவர்பால் நிகழ்வதை அகப்பாடல்கள் புலப்படுத்துகின்றன. அகநானூற்றில் தலைவியின் கூற்றாக இடம்பெறும்.

> "கானலுங் கழறாது கழியுங் கூறாது
> தேனிமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியா
> ..................................
> பறைஇய தளருந் துறைவனை நீயே
> சொல்லல் வேண்டுமால் அலவ"[76]

என்னும் பாடல் அலவனை விளித்துக் கூறுவதாக அமைந்துள்ளது. இப்பாடலில் தலைவி கானலுங் கழறாது, கழியுங் கூறாது, புன்னையும் மொழியாது நீயே சொல்லல் வேண்டும் என்று அலவனை விளித்துக் கூறுகிறாள். அஃறிணைப் பொருள்களை விளித்துக்கூறும் இவ்வகைப்பாடல்கள் காமம் மிக்கக் கழிபடர் கிளவி என்னும் வகையில் அடங்குவன. இப்பாடலில் நெய்தல் படுலக் கருப்பொருளாகிய கானல், கழி, புன்னை, நெய்தல்மலர், அலவன் ஆகிய அஃறிணைப் பொருள்கள் இடம்பெற்று தலைவியின் வருத்தத்தின் வெளிப்படுத்தற்கு உறுதுணையாகின்றன.

## தனிமொழி

மாந்தர் தனித்துத் தமக்குத் தாமே மனத்தில் உள்ளவற்றை வெளியே எடுத்துரைப்பது தனிமொழியாம். கூற்றினைக் கேட்டற்குரிய அஃறிணைப் பொருள்களுள் 'நெஞ்சு' கூறுவோரினின்று தனியே பிரிக்க முடியாதது. துன்பம் மிகுதியாகித் தளர்வெய்திக் கலங்கும் போதோ, இன்பம் மிகுதியாகி மகிழும் போதோ, அவ்வுணர்வுகளைப் பகிர்ந்து கொள்வதற்கு அருகில் யாருமில்லாத நிலையிலும், அவற்றை அகத்திணை மாந்தர் தம் நெஞ்சிற்குக் கூறிக் கொள்வர். இக்கூற்று வகையை 'நெஞ்சொடு கிளத்தல்' என்பர்.

அகப்பாடல்களில் தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக பாடல்கள் அமைந்துள்ளது. நெஞ்சை நோக்கித் தலைவன் கூறுவதாக அமைந்துள்ள இப்பாடல்கள் யாவும் தனிமொழிப் பாடல்களாகக் கொள்ளத்தக்கவை.

"வெருவரு தகுன் கானம் நம்மொடு
வருக என்னுதி யாயின்
வாரேன் நெஞ்சம் வாய்க்க நின்வினையே"[77]

என்ற பாடல் தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக அமைந்துள்ள போதிலும், அவன் தன் மனக்கருத்தை வெளிப்படுத்துவதற்கு நெஞ்சை ஒரு கருவியாக்கி முன்னிலைப்படுத்தி மொழிகின்றான் என்பதே தகும். நற்றிணையில் தலைவன் ஆற்றானாகி தலைவியை நினைந்து தன்னுள்ளே சொல்லும் பாடல்,

"ஒதமும் ஒலி ஒவின்றே; ஊதையும்
தாது உளர் கானல் தவ்வென்றன்றே;
..............................
மீன் கண் துஞ்சும் பொழுதும்,
யான் கண் துஞ்சேன்; யாதுகொல் நிலையே ?"[78]

கடலொலியும், ஊதைக்காற்றும் அடங்கிற்று ஆண் கூகை, பெண் கூகையோடு சதுக்கத்தில் கூவும் இருளையுடைய நடுநாளில் பேய்கள் வெளிக்கிளம்பும் இந்நேரத்திலும் யான் கண்ணுறங்காமல் உள்ளேன் என் நிலையாதோ என்றான் தலைவன்.

குறுந்தொகை தலைவன் நெஞ்சிடத்து முதுமை பெற்ற நாரை அயிரை மீனை பெரும்பொருட்டு தலையைத் தூக்கி அண்ணாந்து பார்த்தாற்போல நெடுந்தூரத்தில் உள்ளவரும் பெருதற்கரியவரும் ஆகிய தலைவியை நினைத்தாய் அதனால் ஊழ் வினையையுடைய வருத்தத்தை அடைந்தாய் என்பதை,

"குண கடல் திரையது பறை தபு நாரை

திண் தேர்ப் பொறையன் தொண்டி முன்துறை

அயிரை ஆர் இரைக்கு அணவந்தா அங்குச்

சேயள் அரியோள் படர்தி;

நோயை நெஞ்சே! நோய்ப் பாலோயே."[79]

எனும் பாடல் காட்டும்.

மற்றொரு பாடலில் தலைவி தரும் இன்பம் ஐம்புலனுக்கும் விருந்தாக அமைந்திருந்தது என்று தலைவன் தன் நெஞ்சிடத்து கூறுவதை,

"ஒடுங்கு ஈர் ஓதி ஒள் நுதற் குறுமகள்

நறுந் தண் நீரள் ஆர் அணங்கினளே

இனையள் என்று அவட் புனை அளவு அறியேன்

சில மெல்லியவே கிளவி

அனை மெல்லியல் யான் முயங்குங்காலே."[80]

எனும் பாடலும், ஐங்குறுநூற்றில் இயற்கைப்புணர்ச்சியில் தலைவியை இன்புற்ற இடத்தில் மறு நாளும் சென்று அவளைச் சேர்தல் தவறாது கைகூடும் என்று தன் மனத்துள் கூறுவதை,

"அணங்குடைப் பனித்துறைத் தொண்டி அன்ன

மணங்கமழ் பொழில்குறி நல்கினள் – நுணங்கு இழை

பொங்கரி பரந்த உண்கண்

அம்கலிழ் மேனி அசைஇய எமக்கே"[81]

என்னும் பாடல் வழி அறியமுடிகிறது. இவ்வாறே பட்டினப்பாலையிலும் செலவழுங்கிக் கூறும் தலைவனின் கூற்று அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

"முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்

வாரிருங் கூந்தற் வயங்கிழை யொழிய

வாரேன் வாழிய நெஞ்சே"[82]

என்று நெஞ்சை விளித்துக் கூறும் தலைவன், தலைவியைப் பிரிந்து செல்ல எண்ணியுள்ள கானம் 'திருமா வளவன் தெவ்வர்க் கோக்கிய வேலினும் வெய்யது' என்றும் குறிப்பிடுகின்றான். அத்தகைய பாலை நெறியில் செல்லுங்கால் தான் பிரிதற்குரிய தலைவியின் தோள்களோ திருமாவளவன் கோலினும் இனிய இயல்பின என்று கூறித் தலைவியிடம் தான் பெறும் இன்பத்தைக் குறிப்பால் பெற வைக்கிறான் தலைவன். தலைவனையும் தலைவன் நெஞ்சையும் பிரித்தல் இயலாது. (நெஞ்சு கூறுவோரினின்று பிரிக்க முடியாத உணர்வுப் பொருள்). இவ்வாறு நெஞ்சை முன்னிலைப்படுத்திக் கூறுவது நாடக வழக்காகும். எனவே இவை தலைவனின் தனிமொழிகளாகும்.

# ஆய்வு முடிவுகள்

1. அகத்திணைப் பாடல்கள் நாடக அமைப்பின. மாந்தர்களின் கூற்று முறையில் அமைவன. அகப்பாடல்களில் கலித்தொகை தவிர மற்றவை ஆசிரியப்பாவில் பாத்திரக்கூற்று முறையில் அமைந்தவை. அவை முன்னிலை மொழி, முன்னிலைப் புறமொழி, தனிமொழிகளாக இடம்பெற்றுள்ளன.

2. முன்னிலைப் புறமொழி சிறைப்புறக்கிளவி என்றும் கூறப்பெறும். சிறைப்புறக் கிளவி என்பது கூறப்படும் செய்தியைக் கேட்டறிதற்குரியவர் கேட்குமாறு தமக்கு முன்னிருக்கும் மாந்தரையோபொருளையோ விளித்துக் கூறுவது என்று விளக்கம் பெறும். இக்கிளத்தல் நெறியில் அகப்பாடல்களில் இடம்பெற்றுள்ள தலைவி, தோழி ஆகிய இருவர் கூற்றுகள் கருப்பொருள் வாயிலாக உணர்த்தப்பெறும் பாங்கு எடுத்துரைக்கப் பெறுகின்றது.

3. அகப்பாடல்களில் தலைவனுடைய கூற்றுகளைக் கேட்போராகத் தலைவி, தேர்ப்பாகன், பாங்கன், தோழி ஆகியோர் இடம் பெற்றுள்ளனர்.

4. தலைவி தோழிக்கும் தலைவனுக்கும் பாணன், பாங்கன், ஆகியோருக்கும் கூற்று நிகழ்த்துபவளாக அமைந்துள்ளாள். இக்கூற்றுகள் தலைவி அறத்தொடு நின்றமையை, தலைவனுடையபிரிவு ஆற்றாமல் வருந்தும் நிலையை, தலைவனுடைய புறத்தொழுக்கத்தை உணர்த்துவனவாக அமைந்துள்ளன.

5. அகத்திணையில் இன்றியமையா இடத்தைப் பெறுபவள் தோழியாகும். தோழி தலைவனுக்கும், தலைவிக்கும், செவிலிக்கும், பாணனுக்கும் கூறுபவளாக அமைகிறாள்.

6. தலைவனுடன் போகிய தலைவியை நினைந்து நற்றாய் தெய்வம் பரவுவதாகவும், வேலனை வினவுவதாகவும் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. உழையர், கண்டோர் கூற்று நிகழ்த்துபவராக உள்ளனர்.

7. பாங்காயினார் கேட்பக் கூறுபவராகப் பரத்தையும் பாணனும் அமைகின்றனர். பரத்தையின் கூற்றுகள் யாவும் மருதத்திணையில் இடம் பெற்றுள்ளன.

8. அஃறிணைப் பொருள்களை விளித்துக் கூறும் பாடல்கள் 'காமம்மிக்க கழிபடர் கிளவி' என்னும் வகையுள் அடங்குவன. ஆற்றொடு புலந்தும், அறிவு மயங்கியும் கூறும் தலைவியின் கூற்றுகள் இடம் பெற்றுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. தொல்.பொருள்.அகம். நூ—5
2. மேலது, நூ—56
3. சரளா ராஜகோபாலன், சங்க இலக்கியத்தில் தோழி, ப—22
4. தொல்.பொருள்.செய்யுளியல், நூ—310
5. மேலது, இளம்பூரணர் உரை, பக்.4—12, 19—20
6. க.ப. அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப—165
7. தொல்.பொருள்.கற்பு. நூ—165
8. மேலது, நூ—177
9. குறுந்தொகை, பா—47, டாக்டர் உ.வே. சாமிநாதையர் குறிப்புரை
10. ந. பாலகிருஷ்ணன், தொல்காப்பியப் பொருளதிகாரவழி நற்றிணை ஓர் ஆய்வு, ப—158
11. அகநானூறு, பா—8, அடி, 5—12
12. குறுந்தொகை, பா—125
13. ஐங்குறுநூறு, பா—111
14. அகநானூறு, பா—362, அடி, 1—12
15. மேலது, பா—370
16. நற்றிணை, பா—175
17. மேலது, பா—299
18. அகநானூறு, பா—188
19. தொல்.பொருள்.செய்யுளியல், நூ—493, 501
20. மேலது, நூ—497
21. தொல்.பொருள்.கற்பு. நூ—144

22. மேலது, அகம், நூ–44

23. அகநானூறு, பா–344

24. மேலது, பா–34

25. மேலது, பா–114

26. மேலது, பா–134

27. மேலது, பா–154

28. மேலது, பா–234

29. குறுந்தொகை, பா–250

30. நற்றிணை, பா–221, அடி, 8–14

31. அகநானூறு, பா–384, அடி, 9–11

32. மேலது, பா–54

33. தொல்.பொருள். நூ–150

34. ஐங்குறுநூறு, பா–257

35. நற்றிணை, பா–110

36. மேலது, பா–324

37. அகநானூறு, பா–219

38. மேலது, பா–122

39. மேலது, பா–128

40. குறுந்தொகை, பா–153

41. மேலது, பா–65

42. ஐங்குறுநூறு, பா–61

43. அகநானூற்றுச் சொற்பொழிவுகள், ப–19

44. நற்றிணை, பா–227

45. ஐங்குறுநூறு, பா–264

46. கலித்தொகை, பா–48

47. தொல்.பொருள். நச். உரை, ப–151

48. அகநானூறு, பா–82

49. ஐங்குறுநூறு, பா–250

50. குறுந்தொகை, பா–23

51. ஐங்குறுநூறு, பா–51

52. குறுந்தொகை, பா–258

53. நற்றிணை, பா–53

54. தொல்.பொருள்.களவியல், நூ–115

55. அகநானூறு, பா–122

56. மேலது, பா–122

57. ஐங்குறுநூறு, பா–385

58. அகநானூறு, பா–195, அடி, 14–19

59. நம்பியகப்பொருள், நூ–111

60. தொல்.பொருள்.களவியல், நூ–33

61. மேலது, கற்பியல், நூ–12

62. அகநானூறு, பா–17

63. குறுந்தொகை, பா–44

64. அகநானூறு, பா–354

65. மேலது, பா–7

66. நற்றிணை, பா–2

67. ஐங்குறுநூறு, பா–36

68. மேலது, பா–386

69. தொல்.பொருள்.கற்பியல், நூ–10, இளம்பூரணர் உரை

70. நற்றிணை, பா–200

71. ஐங்குறுநூறு, பா–478

72. மேலது, பா–472

73. நற்றிணை, பா–200

74. தொல்.பொருள்.செய்யுளியல், நூ–501

75. தொல்.பொருள்.பொருளியல், நூ–194 இளம்பூரணர் உரை

76. அகநானூறு, பா–170, அடி, 1–8

77. மேலது, பா–131, அடி, 13–15

78. நற்றிணை, பா–319

79. குறுந்தொகை, பா–128

80. மேலது, பா–70

81. ஐங்குறுநூறு, பா–174

82. பட்டினப்பாலை, அடி, 218–220.

## இயல்–4

## கூற்றுகளில் கருப்பொருள்கள்

### முன்னுரை

சங்க இலக்கிய அகத்திணைப்பாடல்கள் யாவும் கூற்று முறையிலேயே அகவாழ்வை எடுத்துரைக்கின்றன. இவற்றை நாடகத் தனிநிலைச் செய்யுட்கள் என்பர். தோழி, தலைவன், தலைவி, பரத்தை, நற்றாய், பாணன், கண்டோர் ஆகிய அகத்திணை இலக்கியங்களில் இடம் பெறும் மாந்தர்கள் கூற்றுக்கு உரியராவர். அகப்பாடல்களின் சிறப்பு பாத்திரத்தின் இயற்பெயர் சுட்டப்பெறாமையாகும். இதனை

> "மக்கள் நுதலிய அகனைந் திணையும்
> சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்"[1]

என்ற தொல்காப்பிய நூற்பா உணர்த்தும்.

அகத்திணையில் தலைமை மாந்தர்களாக விளங்குபவர், தலைவனும் தலைவியும் ஆவர். தலைமக்களுடன் உறவுடையோராகக் கொள்ளப்பெறுபவர். தலைவியின் தாய்,(நற்றாய்) தலைவியின் தந்தை, செவிலி, தோழி, பாங்கன், பார்ப்பார், விறலியர், கூத்தர், இளையோர், விருந்தினர் பாகன் ஆகிய ஒன்பதின்மர் ஆவர். ஒவ்வொரு நிலையிலும் தலைமக்களுடன் தொடர்பு கொண்டவர்கள் இம்மாந்தர்களேயாவர். அகப்பொருள் நிகழ்ச்சிகளை நடத்திச் செல்பவர்களாக இவர்கள் விளங்குகின்றனர்.

சங்க அகப்பாடல்களில் அமைந்த பாடல்கள் அகத்திணை மாந்தர்களின் கூற்றுக்களாக அமைந்துள்ளன. ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு பாத்திரத்தின் கூற்றாகத் திகழ்கிறது. கூற்றுகளில் கருப்பொருள்கள் என்னும் இவ்வியற்கண் கருப்பொருள்கள்

அகப்பாடல்களில் இடம்பெறும் பாத்திரங்கள் வாயிலாகக் கூறப்படுவதுடன், அவர்கள் கருத்துணர்த்தும் நெறியும் ஆராயப்படுகின்றன.

## நாடக நிலை

தொல்காப்பியர்,

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்

பாடல் சான்ற புலனெறி வழக்கம்"[2]

என்று கூறுவதால் அகத்திணைப் பாடல்கள் அனைத்தும் நாடக அமைப்பின. தலைவனோ, தலைவியோ, தோழியோ அன்றிப்பிற அகத்திணை மாந்தரோ கூறுவது போல் அமைந்த பான்மையின ஒவ்வோர் அகத்திணைப் பாடலும் அதனைப் படிப்போர் கண் முன்னர்ச்சிறு நாடகக் காட்சி ஒன்றைத் தோற்றுவிக்கும் தன்மையுடையது.

நாடகம் காட்சியளவை உடையது. எழுத்தறிவில்லார்க்கும் கருத்துணர்த்தும் ஊடகமாகும். இத்தன்மை இலக்கியத்தில் ஏற்றப்படின் கருத்துப் புலப்பாட்டில் வலிவும் மிகுதியாகும். பாத்திரமாக நின்று புலவர் மொழிதலே இதன் அடித்தளம். என அகத்துள் தலைமகள் கூற்று மெய்ப்பாடும் குரல் வேறுபாடும் அமைய நாடகமாகவே நிகழ்ந்தது காணத்தகும்.

நாடகத்தில் ஐந்து அங்கங்கள் உண்டு அகத்துறை இலக்கியத்தில் இயற்கைப் புணர்ச்சியே தோற்றம். பாங்கிமதி உடன்பாடு வளர்ச்சி பகற்குறியும், இரவுக்குறியும் முதிர்வு, அவற்றின் இடையீடு, வரைவு கடாதல், அறத்தோடு நிற்றல் முதலியன திருப்பம் வரைதல் முடிவாகும்[3] என்னும் கருத்து ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

தொல்காப்பியர் செய்யுள் உறுப்புகளாகத் திணை, கூற்று, கேட்போர், களன் ஆகியவற்றை மொழிந்துள்ளார். குறிப்பிட்ட சூழலில் குறிப்பிட்ட நிகழ்ச்சியே அகப்பாடல்களில் புனையப் பெறவேண்டும் என்பதைக் "களன்" என்னும் உறுப்பு விளக்குகின்றது.[4] பாடப்பெறும் நிகழ்ச்சிக்குப் பின்புலமாக அமைத்துப் பாடப்பெறும் முதற்பொருள், கருப்பொருள்களைத்"திணை"என்னும் உறுப்புக் குறித்து அகத்திணையியல் விவரிக்கின்றது.[5] அகத்திணை நிகழ்ச்சிகள் அகத்திணை மாந்தர்கள் கூறுவது போல் மாந்தரின் கூற்று முறையில் பாடப்பெற வேண்டுமென்பதால் "கூற்று" செய்யுள் உறுப்புகளுள் சிறப்பிடம் பெறுகின்றது. அகப்பாடல்கள் மாந்தரின் கூற்று முறையில் அமைத்துப் பாடும்போது இருவகையில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

1. ஒருவர் கூற்று முறையில் அமையும் பாடல்கள்
2. இருவர் மாறி மாறி உரையாடும் முறையில் அமையும் பாடல்கள்

என இருவகையாக அகப்பொருள் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. சங்க அக நூல்களில் கலித்தொகையில் மட்டும் இருவர் மாறி மாறி உரையாடும் முறையில் சில பாடல்கள் அமைந்துள்ளன. ஏனைய நூல்களில் ஒருவர் கூற்று முறையில் அமைந்துள்ள பாடல்களே உள்ளன.

சங்கஅகப்பாடல்களில் கலித்தொகைதவிர மற்றவை ஆசிரியப்பாவில் அமைந்தவை. ஒருவர் கூற்று முறையில் மட்டுமே இப்பாடல்கள் அமைந்துள்ளன. சில பாடல்களில் பிறிதொரு மாந்தரது கூற்றும் இடம்பெற நேரிடும்போது, அது கூற்று நிகழ்த்தும் மாந்தரால் கொண்டு கூறப்படுவதாகப் பாடப்பட்டுள்ளது. இருவர் உரையாடும்பான்மையில் பாடல்கள் அமையவில்லை. பாடலில் கூற்று நிகழ்த்தும் ஒருவர் கூற்று கொண்டே நிகழ்ச்சி, கேட்போர், பின்புலம் முதலிய நாடகச் சார்புகள் அறியப்படுகின்றன. எனவே இவற்றை 'நாடகத் தனிநிலைச் செய்யுட்கள்' என்று கூறுவது பொருந்தும்.

## அகப்பாடல்களில் கூற்று நிலை

| | | |
|---|---|---|
| தோழி கூற்றாக இடம்பெறும் பாடல்கள் | – | 781 |
| தலைவி கூற்றாக இடம்பெறும் பாடல்கள் | – | 549 |
| தலைவன் கூற்றாக இடம்பெறும் பாடல்கள் | – | 344 |
| தாயார் கூற்றாக இடம்பெறும் பாடல்கள் | – | 71 |
| பாணன் கூற்றாக இடம்பெறும் பாடல்கள் | – | 1 |
| ஏனையோர் கூற்றாக இடம்பெறும் பாடல்கள் | – | 54 |
| | | 1850 |

இவ்வாறு பாத்திரங்களின் கூற்றுகளாக அகப்பாடல்கள் அமைந்துள்ளன. "அகத்திணைகள் கூற்றுக்களாகவே அமையும். தலைவன், தலைவி, தோழி, செவிலி முதலானோர் கூறுதலாக, அகத்திணைகள் அமைந்தமையால் அகத்திணைகள் உயிர்த்துடிப்புடையன ஆயின. ஒவ்வொருவர் கூற்றும் பங்காளர் அன்றிப் படிப்பாரையும் பாத்திரமாக்கும்."[6] என்னும் கருத்து ஈண்டுக் கருதத்தக்கது.

## கூற்று முறை

அகப்பாடல்களில் முன்னிலை மொழி, முன்னிலைப் புறமொழிகளாகக் கூற்றுகள் இடம்பெற்றுள்ளன. ஒருவர் தமக்கு முன்னிருப்பவர் மட்டும் கேட்குமாறு, அவரை விளித்து மொழிவது 'முன்னிலை மொழி' எனப்படும். மற்றொருவரும் கேட்க வேண்டும் என்ற நோக்கில் முன்னிருப்பாரை விளித்துக் கூறுதல் 'முன்னிலைப் புறமொழி' எனப்படும். இதனை,

"முன்னிலைப் புறமொழி எல்லா வாயிற்கும்
பின்னிலைத் தோன்றும் என்மனார் புலவர்"[7]

"அன்புதலைப் பிரிந்த கிளவி தோன்றின்

சிறைப்புறங் குறித்ததன் றென்மனார் புலவர்"[8]

என்னும் தொல்காப்பிய நூற்பாக்கள் உணர்த்துகின்றன. 'முன்னிலைப் புறமொழி' என்பதற்கு உ.வே.சாமிநாதையர் "கூறப்படும் செய்தியைக் கேட்டறிதற்குரியவர் முன்னே இருக்கவும் அவரை விளித்துக் கூறாமல் வேறொருவரையேனும் பிறிதொரு பொருளையேனும் விளித்துக் கூறுவது"[9] என்று விளக்கம் தருகின்றார். இக்கிளத்தல் நெறியைத் தொல்காப்பியர், முன்னிலைப் புறமொழி என்றும், சிறைப் புறக்கிளவி என்றும் குறிப்பிடுகின்றார். "சிறைப்புறக்கிளவி என்பதற்குக் கூறப்படும் செய்தியைக் கேட்டறிதற்குரியவர் கேட்குமாறு தமக்கு முன்னிருக்கும் மாந்தரையோ பொருளையோ விளித்துக் கூறுவது."[10] என விளக்கம் கூறப்படுகின்றது.

## சிறைப்புறக் கிளவி

சிறைப்புறக்கிளவி நெறியில் மூவர் இடம்பெறுவர். ஒருவர் கூறுபவர், மற்றொருவர் கேட்பவர், மூன்றாமவர் மறைவான் இடத்திலோ, அன்றிச் சற்று அயலிலோ இருந்தும் கேட்பவராக அமைவர். கூறுபவருடைய நோக்கம் தாம் கூறுவதைக் தமக்கு முன்னால் உள்ளவர் மட்டுமின்றி மறைவான இடத்தில் உள்ளவரும் அறிந்து கொள்ள வேண்டுமென்பதாக இருக்கும். அயலில் உள்ளவர் செய்தியைக் கேட்கின்றார் என்பது மிகக் குறிப்பாகவே உணர்த்தப்படும். அகப்பாடல்களில் சிறைப்புறக் கிளவி எனும் துறையில் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அவை தலைவி கூற்றாகவும், தோழி கூற்றாகவும் அமைந்துள்ளன.

## தலைவி கூற்று

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைவி சொல்லியது என்னும் துறையில் பல பாடல்கள் உள்ளன. அவை குறிஞ்சித் திணையிலும் நெய்தல் திணையிலும் அமைந்துள்ளன.

தலைமகன் சிறைப்புறத்தானாக அயலில் நிற்கிறான். இதை அறிந்த தலைவி தோழிக்குச் சொல்லுவாளாய்க் களவொழுக்க நிலையினைக் கூறுகிறாள். தலைவனின் நாட்டைப்பற்றி,

"_______________ பெரிய
கேழல் அட்ட பேழ்வா யேற்றை
பலாவமல் அடுக்கல் புலவ ஈர்க்கும்
கழைநரல் சிலம்பின் ஆங்கண் வழையொடு
வாழை யோங்கிய தாழ்கண் அசும்பில்
படுகண் களிற்றின் வருந்தஞ் சொலிய
பிடிபடி முறுக்கிய பெருமரப் பூசல்
விண்டோய் விடரகத் தியம்பும் அவர்நாட்டு"[11]

என்று குறிஞ்சிநிலக் கருப்பொருள் வாயிலாகக் குறிப்பிடுகின்றாள்.

இப்பாடலில் தலைவன் மலைநாட்டு வளம் குறிக்கப்படுகிறது. ஆண் பன்றியினைக் கொன்ற ஆண்புலி அதனைப் பலா மரங்கள் நிறைந்த பக்கமலையில் இழுத்துச்செல்லும். மூங்கில்கள் ஒலிக்கும். வாழையும் சுரபுன்னையும் வளர்ந்துள்ள கரையையுடைய நீர்க் குமிழியில் களிறு மாட்டிக் கொள்ள அதனை வெளிக்கொணரப் பெரிய மரங்களைப் பெண் யானை ஒடித்துப் போட்டுக் களிற்றை வெளிவரச்செய்யும். இவ்வொலி தலைவனின் மலைக்குகைகளிலும் எதிரொலிக்கும் எனத் தோழியிடம் தலைவி கூறுகிறாள்.

புலி தனக்காகப் பெற்ற உணவைப் பலா மரங்கள் நிறைந்த பக்க மலைகளில் புலால் நாற்றம் வீச இருப்பதைப் போன்று தலைவனும் இன்பந்துய்க்கக் களவில் வந்து கூடி, நம் குடியை இகழ்ச்சியுடையதாக்கி விட்டான். களிறு நீர்ச்குமிழியில் விழப்பெண் யானை அதை வெளிக்கொணர உதவும் போது ஏற்படும் ஒலி, தலைவன் களவொழுக்கமாகிய குழியில் விழுந்து நம்மை வரையவும் மாட்டாது விடவுமாட்டாது துன்பப்படும்போது நாமே வரைய

முயலும் வழி ஊரெல்லாம் அறியும்படிச் செய்தான் என்ற உள்ளுறைச் செய்தியை உணர்த்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

நெய்தல் திணையில் தலைவியைச் சந்திக்க வரும் தலைவன் விரைந்து மணந்து கொள்ள வேண்டுமென்ற நோக்கில் சிறைப்புறக் கூற்றுகள் இடம்பெற்றுள்ளன.

தலைவன் சிறைபுறத்தானாகத் தலைவி தோழியிடத்து கூறும்போது,

"இலங்கு வளை நெகிழச் சாஅய் யானே
உளெனோ வாழி தோழி!சாரல்
தழை அணி அல்குல் மகளிருள்ளும்
விழவு மேம்பட்ட என் நலனே பழ விறல்
பறை வலம் தப்பிய பைதல் நாரை
திரை தோய் வாங்கு சினை இருக்கும்
தண்ணம் துறைவனோடு கண்மாறின்றே"[12]

நாரையானது தனது சிறகின் வண்மை தவறியதால் மரக்கிளையில் பறத்தற்கு இயலாது தங்கியிருக்கும். கடல் துறை தலைவனோடு என்னை விட்டுப்பிரிந்து இடம் பெயர்ந்தாலும் யான் உயிருடன் இருக்கின்றேன் என்கிறாள்.

மீனை தராவிடில் நாரை இரையின்றி உயிர் நீத்தலைப் போல தலைவன் இரங்கிவரைந்து கொள்ளாவிடில் யானும் உயிர்விடுவேன் என்பது கருப்பொருளால் அறிவது குறிப்பு மொழியாகும்.

ஐங்குறுநூற்றில் நெய்தல் திணையில் தோழிக்கு உரைத்தப்பத்து என்னும் தலைப்பில் அமைந்த பத்துப்பாடல்களும் தலைவி கூற்றாகத் தலைமகன் சிறைப்புறத் தானாகத் தோழிச் சொல்லியது எனும் துறையில் பாடப்பட்டுள்ளன.

"அம்ம வாழி தோழி பாணன்

சூழ்கழி மருங்கின் நாள் இரை கொளீஇச்

சினைக் கயல்மாய்க்கும் துறைவன் கேண்மை

பிரிந்தும் வாழ்துமோ நாமே–

அருந்தவம் முயறல் ஆற்றாதமே"[13]

உப்பங்கழியில் வாழும் கயில் மீன்களை பாணன் தூண்டில் கயிற்றால் பிடிக்கும் துறைவனின் நட்பைப்பிரியாது பெறுவதற்குத் தவத்தை செய்யாமையால் பிரிவுத் துன்பத்தில் உயிர் வாழ்க்கிறோம் என்கிறாள்.

பாணன் நாள் இரை கொளீஇக் கயல் மாய்க்கும் என்னும் கருப்பொருளால் தலைவன் களவுப்புணர்ச்சியில் தான் மிக்க மகிழ்ச்சி கொண்டு வரையாது நம்மைத் துன்புறுத்துகிறான் எனும் குறிப்புமொழி பெறப்படுகின்றது.

## தோழிகூற்று

சிறைப்புறத்தானாய தலைவன் கேட்குமாறு தோழி கூறியது என்னும் துறையில் பாடல்கள் அமைந்துள்ளன.குறிஞ்சித் திணையிலும், நெய்தல் திணையிலும் இரவுக்குறியில் தலைவன் சிறைப்புறமாகத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்.

"பாம்புடை பனிநீர் இட்டுத்துறைத்

தேங்கலந் தொழுக யாறுநிறைந் தனவே

வெண்கோட் டியானை பொருத புண்கூர்ந்து

பைங்கண் வல்லியம் கல்லளைச் செறிய

முடிக்கரும் பன்ன வள்ளுகிர் வயப்பிணவு

கடிகொள வழங்கார் ஆறே ஆயிடை

எல்லிற் றென்னான் வெள்வேல் ஏந்தி

நசைதர வந்த நன்ன ராளன்

நெஞ்சுபழு தாக வவியன் பெயரின்

இன்றிப் பொழுதும் யான்வா ழலனே

எவன்கொல் வாழி தோழி"[14]

யானை குத்திய புண் மிகுந்து புலி குகையில் தங்க வெண்புலி காத்து நிற்கும் அந்நெறியில் செல்லுதல் இயலாது. ஆறு நிறைந்தது. வேலேந்தி வரும் தலைவன் வறிதே பெயரின் யான் உயிர் வாழேன். திங்களின் ஒளி, மலை முழுவதும் பரவிவிட்டது. இனி நாம் செய்வது யாது என வினவுவாள் போன்று தலைமகனுக்குத் தலைமகளை வரைந்து கொள்ளவேண்டிய நிலையைக் குறிப்பால் தோழி வற்புறுத்துகிறாள்.

தலைவியைச் சந்திக்க வேண்டுமென்ற தலைவனின் நெஞ்சம் பழுதாகக் கூடாது என்பது தோழியின் எண்ணம். தலைவி மீது கொண்ட காதலால் நிறைந்த ஆற்றைப் பற்றிக் கவலைப்படாமலும் புலி உலவும் பாதையென அஞ்சாமலும் தலைவன் வேலேந்தி வருகிறான். இத்தகு ஊக்கம் உடையவன் விரைந்து மணந்து கொள்ள வேண்டும் என்பதைத் தலைவன் கேட்குமாறு வலியுறுத்துகிறாள். இதைக் கேட்கும் தலைவன் தலைவியும் தோழியும் தன்மீது வைத்திருக்கும் உயர்ந்த பற்றினை உணர்ந்து மணந்து கொள்ள வேண்டுமென்ற கருத்து இதன் மூலம் பெறப்படுகிறது. தோழியின் காப்புணர்வும் திருமணம் நடைபெற வேண்டும் என்னும் ஆர்வமும், ஒருங்கே கலந்து தலைவனையும் தலைவியையும் தெருட்டி வரைவுக்குடன்படுத்தும் அவளது உளவியல் பாங்கு குறிஞ்சித்திணைக் கருப்பொருள்கள் மூலம் வெளிப்படுகின்றது.

"வளைவாய்க் கோதையர் வண்டல் தைஇ

இளையோர் செல்ப எல்லும் எல்லின்று

-----------------------------------------------

ஆடுமகள் போலப் பெயர்தல்

ஆற்றேன் தெய்ய அலர்கவிவ் வூரே"[15]

இப்பாடல் பகலில் தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது என்னும் துறையில் அமைந்துள்ளது. பகலில் எம்மொடு ஆடிய நீ இரவு நம் இல்லத்திற்குச் செல்லுதல் வேண்டும் என்று கூறிய தோழிக்கு இரவு இல்லம் சென்று நோயொடு தங்குவேனாயின் என் தந்தையின் அருங்கடிச் காவலிற் படுவேன் என்ற தலைவியின் கூற்றைத் தோழி கொண்டு கூறுகின்றாள்.

இல்லத்திற்குச் செல் என்று தோழி கூற செல்லின் உயிர் வாழேன் என்கிறாள் தலைவி. அந்திக் காலத்துக் கடற்கெழு செல்வி கரை நின்றாங்கு நீ கானல் ஒழிய யான் என் அணி துறந்து ஆடுமகள் போலப் பெயர்தல் ஆற்றேன் இவ்வூர் அலர் கூறட்டும் என்றுரைக்கின்றாள் தோழி.

தலைவன் தலைவியை வரைந்து கொள்ள வேண்டும் அவனை விரைவில் ஈடுபடுத்த வேண்டும் என்பதே தோழியின் நோக்கம். ஊரில் அலர் எழின் அதனைத் தடுக்கத் தலைவன் தலைவியைத் திருமணம் புரிந்து கொள்ள வேண்டும். இதனைக் குறிப்பாகப் பெற வைக்கிறாள் தோழி. ஞாழல், நெய்தல், கடல்கெழு செல்வி, கானல் ஆகிய நெய்தல் நிலக் கருப்பொருள்கள் இப்பாடலில் இடம்பெற்றுச் சிறக்கின்றன.

> "நெடுங் கடல் அலைத்த கொடுந் திமிற் பரதவர்
> கொழு மீன் கொள்ளை அழி மணல் குவைஇ
> ---------------------------------------------------------------
> சுடுவான் போல நோக்கும் ,
> அடு பால் அன்ன என் பசலை மெய்யே"[16]

பரதவர் கடலுள் சென்ற மீனை மணலில் குவித்து கிளிஞ்சலில் விளக்கேற்றி உறங்குவர். புன்னை மரம் அத்துறையில் வளர்ந்திருக்கும். அத்துறைவனோடு நட்பினை அறியாத பெண்டீர் அலர் தூற்றுவதும் அன்னை சுடு சொல் கூறுவதுமாக உள்ளாள்

என்கிறாள். இக்கருப்பொருளால் தலைவன் கொண்டுவந்த பொருளை இல்லின் முன்றிலில் வைத்து பலர் அறிய என்னை மணந்து இனிதிருப்பர் எனும் குறிப்பு மொழி அறியப்படுகிறது.

"உரு கெழு யானை உடை கொடு அன்ன,

ததர் பிணி அவிழ்ந்த தாழை வான்பூ,

---

வளி பொரு வயங்கு பிசிர் பொங்கும்

நளி கடற் சேர்ப்பனொடு நகாஅ ஊங்கே"[17]

தாழையின் வெள்ளைப் பூக்கள் யானையின்கொம்பு போலவும் காற்று வீசுதலால் அப்பூக்களின் நுண்ணிய தாதுக்கள் மகளிர் கட்டிய சிற்றில்லில் உதிர்க்கும் பஞ்சு போல பெருகும் அலைகளிலே காற்று வீசுதலால் பிசிர்கள் பொங்கும் கடல் சேர்ப்பனோடு இருந்தும் இல்லாததுபோல் உணர்க்கின்றேன் என்றும் அவரே நம் தலைவன் என்றும் தலைவி உறுதிப்படுத்துகிறாள்.

இரவு நேரத்தில் தலைவன் சிறைப்புறமாக இருப்பதைக்கண்டு தலைவன் அறியுமாறு தோழி மேகமே!நீ தான் இருண்டு மின்னி வெறும் அரவம் செய்வாயோ? அல்லது தலைவி காக்கும் தினைப்புனத்திற்கு மழையைத் தருவாயோ? வாழியே! என மேகத்தின் மீது தன் கருத்தை வைத்து மொழிகின்றாள்.

"பெருங்கிளை முகந்த இருங்கிளைக் கொண்மூ

இருண்டுயர் விசும்பின் வலனேர்பு வளைஇப்

---

குறமகள் காக்கும் ஏனற்

புறமும் தருதியோ வாழிய மழையே"[18]

தலைவன் அறிதற்காக மேகத்தின்மேல் வைத்துக்கூறும் தோழியின் கூற்று தலைவனை வரைவு கடாதற்காகும். இப்பாடற் குறிப்புப் பொருளையும் நல்குகின்றது. "இரவிற் சிறைப்புறமாகவுள்ள தலைவனைத் தோழி இங்ஙனம் மழையாக் கொண்டு குறிப்பினாலே நீ இங்ஙனம் வந்து ஒழுகுதலாற் பயனின்றி அலர் விளைக்கின்றாயோ அன்றி வரைந்து கொள்வையோ எனக் கூறி வரைவு கடாயினாள் என்க" என்னும் அகநானூற்றின் உரை ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. இப்பாடலில் குறிஞ்சிநிலக் கருப்பொருளாகிய வேங்கை, குறமகள் தினைப்புனம், தினைப்புனக்காவல் ஆகியன குறிஞ்சிநில உரிப்பொருளாகிய புணர்தல் நிமித்தத்திற்குப் பின் புலமாக அமைகின்றன.

## கூற்றினைக் கேட்டற்குரியோர்

தொல்காப்பியர் ஒரு மாந்தர் கூற்றினைக் கேட்போர் இரு வகைப்படுவர் என்கிறார்.

1.மாந்தர்

2.அஃறிணைப்பொருள்கள்.

என்பனவாகும்.

## 1.கேட்போர்–மாந்தர்

செய்யுளியலில் தொல்காப்பியர் ஒரு மாந்தர் கூற்றைக் கேட்டற்குரிய மாந்தர் பற்றி ஏழு நூற்பாக்களில் எடுத்தியம்புகின்றார்.[19] அந்நூற்பாக்களில் தலைவன், தலைவி, பார்ப்பார், அறிவர், நற்றாய், கண்டோர், பரத்தை, வாயில்கள் ஆகிய எண்மருடைய கூற்றுகளைக் கேட்கும் மாந்தர்பற்றி மட்டுமே குறிப்பிட்டுள்ளார்.

தலைவன், தலைவி கூற்றைக் கேட்போர் பற்றி,

"மனையோள் கிளவியுங் கிழவன் கிளவியும்
நினையுங் காலைக் கேட்குநர் அவரே"[20]

என்ற நூற்பாவில் கூறியுள்ளார். 'அவரே' என்ற சுட்டு, கூற்றிற்குரியோர் என அவரால் வரையறுத்துக் கூறப்பட்ட பன்னிருவருள் தலைவனும் தலைவியுமொழிந்த பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் ஆகியபதின்மரைச் சுட்டி நிற்கின்றது. இவ்விருவர் கூற்றை இப்பதின்மரும் கேட்பர் என்பதால் தலைவன் கூற்றைத் தலைவியும், தலைவி கூற்றைத் தலைவனும் கேட்பர் என்பது வெளிப்படை. எனவே தொல்காப்பியர் கருத்துப்படி கூற்றிற்குரியர் அனைவரும் 'கேட்போர்' ஆவர்.

அகப்பாடல்களில் தலைவன் மற்றவர்களுக்குக் கூறுவதைவிடத் தன் நெஞ்சுக்குக் கூறுவதாக அமைந்துள்ள பாடல்களின் எண்ணிக்கையே மிகுதியாகக் காணப்படுகிறது. நெஞ்சு கூறுவோரினின்றும் பிரிக்க முடியாத உணர்வுப் பொருள் ஆதலின் இவ்வகைப் பாக்கள் தனிமொழியில் அடங்கும் என்பது கருததத்தக்கது. தலைவன் தன் நெஞ்சுக்கு அடுத்துத் தேர்ப்பாகற்கே அதிகம் எடுத்துரைப்பவனாகின்றான். தலைவனுக்கும் தேர்ப்பாகனுக்கும் உள்ள தொடர்பினை இதன் மூலம் அறியமுடிகின்றது.

## தலைவன் தேர்ப்பாகற்குக்கூறியது

தலைவற்குரிய கிளவிகளையெல்லாம் தொகுத்துக்கூறும் தொல்காப்பியர் பாகனைக் குறிப்பிடுங்கால்,

" பேரிசை ஊர்திப் பாகர் பாங்கினும்"[21]

என்று கூறுவர். தலைவியைப் பிரிந்துறையுங்கால் பாகன் ஒருவனே தலைவனுடன் நெருங்கிப் பணிபுரிபவனாக– அணுக்கத்தொண்டனாக இருப்பதால் பாகனிடம் மட்டிலுமே தலைவன் தன் கடமைகளை இனிதே முடிக்க மகிழ்ச்சியையும் பிறவற்றையும் புலப்படுத்துவான். இதனை,

"____________________ முடிந்த காலத்துப்

பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்"[22]

என்னும் தொல்காப்பிய நூற்பா உணர்த்தும்.

அகப்பாடல்களில் சிறப்பாக நற்றிணையிலும் அகநானூற்றிலும் தலைவன் தலைவியைச் சந்திக்க விரும்பும் தன் ஆரா விருப்பத்தைப் புலப்படுத்தும் நிகழ்ச்சிகள் அடங்கிய பாடல்கள் பலவற்றைக் காணலாம்.

" எல்லிடை யுறாஅ அளவை வல்லே
கழலொலி நாவில் தெண்மணி கறங்க
நிழலொலிப் பன்ன நிமிர்பரிப் புரவி
வயக்குறு கொடிஞ்சி பொலிய வள்பாய்ந்து
இயக்குமதி வாழியோ கையிடை வலவ!
பசப்புறு படர்அட வருந்திய
நயப்பின் காதலி நகைமுகம் பெயவே"[23]

இப்பாடற்பகுதியில் "என்காதலியின் முறுவலித்த முகத்தினைக் காண்பதற்காக, தேரிலுள்ள மணி ஒலிக்க நிமிர்ந்த செலவினையுடைய குதிரைகளை, கடிவாளத்தை ஆய்ந்து செலுத்தி, கொடிஞ்சி பொலிவுற்றுக் காணுமாறு தேரினைச் செலுத்துவாயாக" என்று பாகனை நோக்கி தலைவன் கூறுவதைக் காணலாம்.

தலைவன் பாகனிடம் பேசும் பொழுதெல்லாம் தலைவியின் நற்பண்புகளைப் புகழ்வதுடன் தானும் அவளும் அன்புடன் இனிய வாழ்வு நடத்தியபோது ஏற்பட்ட இனிய நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டுப் பேசுவதைக் காணலாம். இதனால் தலைவன் தன் பாகன் மீது கொண்டுள்ள நம்பிக்கையும் மதிப்பும் தெளிவாகப் புலனாகின்றன. தேரினைக் கடவும்

பாகனின் திறன் அடிக்கடி தலைவனால் குறிப்பிடப்பெறுவதைப் பாடல்களில் காண்கின்றோம்.

"செல்க தேரே நல்வலம் பெறுந"[24]

நூலறி வலவ! கடவுமதி"[25]

"இடிமறந் தேமதி வலவ"[26]

"ஊர்மதி வலவ!தேரே"[27]

"வல்விரை தூர்மதி நல்வலம் பெறுந"[28]

தான் விரைவில் வீட்டை அடைய வேண்டும் என்ற அவாவினால் இங்ஙனம் பாகனைப் புகழ்கின்றான். தலைவன் பாகனும் இதனால் உற்சாகமுற்றுத் தேரினை விரைவாகச் செலுத்துகின்றான்.

தலைவியை விட்டுப் பிரிந்து வினைமேற் சென்ற தலைவன் திரும்பி வருகின்றான், தேரின்மீது வருகின்றான். தேர்ப்பாகனை நோக்கி " இன்று மாலை வருவதற்குள் தலைவி இருக்குமிடத்திற்கு விரைவில் தேரைச் செலுத்து வாயாக" என்கின்றான். இச்செய்தியைக் கொண்ட குறுந்தொகைப்பாடல்,

" பரவலற் படுநீர் மாந்தித் துணையோ(டு)
இரலை நன்மான் நெறிமுதல் உகளும்
மாலை வாரா அளவைக் கால் இயல்
கருமாக் கடவுமதி பாக! நெடுநீர்ப்
பொருகயல் முரணிய உண்கண்
தெரிதீம் கிளவி தெருமரல் உயவே"[29]

இதில் "மாலை நேரம் வருவதற்குள் தலைவி இருக்கும் இடத்திற்குத் தேரைச் செலுத்துவாயாக" என்று தலைவன் பாகனை நோக்கி கூறுவதைக் காணலாம்.

நற்றிணையில் இத்தகைய காட்சிகளை நவிலும் பாடல்கள் உள்ளன.

"செல்க—பாக! நின் செய்வினை நெடுந்தேர்
விருந்து விருப்புறூஉம் பெருந்தோட் குறுமகள்
மின்ஒளிர் அவிர் இழை நல் நகர் விளங்க
நடை நாட் செய்த நவிலாச் சீறடிப்
பூங் கட் புதல்வன் உறங்குவயின் ஒல்கி,
'வந்தீக, எந்தை!' என்னும்
அம் தீம் கிளவி கேட்க நாமே"[30]

இதில் "பாகனே, என் மாளிகையில் என்அருமை மகன் மெருகிட்ட அணிகலன்களை அணிந்த வண்ணம் துயில்வான். நம் வருகையை அறியும் தலைவி நம்மை எதிர்கொள்ள 'எந்தாய் வருக' என்று மகனை எழுப்புவாள். இருவரும் வந்து என்னைக் காண்பர். அந்தக் காட்சி நெடுவழி வந்த வருத்தத்தைப் போக்கும். காதலியின் சொல் எனக்கு அமிழ்தமாகவும் இருக்கும். ஆதலின் அவ்வினிய சொல்லை யான் கேட்குமாறு நின் கைவன்மையால் விரைந்து தேரைக் கடவுக" என்று தலைவன் கூறுவதைக் காணலாம்.

வினைமுற்றி மீளுந் தலைவன் தன் குறிப்பறிந்து பாகன் மிக விரைவாகத் தேர் செலுத்தும் திறன் குறித்து,

"வான்வழுங் கியற்கை வளிபூட் டினையோ
மானுரு வாகநின் மனம்பூட் டினையோ
உரைமதி வாழியோ வலவ"[31]

என்று புகழ்ந்து கூறுகிறான். தலைவன் பாகனிடம் கூறும்போதெல்லாம் தலைவியின் நற்பண்புகளைப் புகழ்வதுடன் தானும் அவளும் அன்புடன் இனிய இல்லறம் நிகழ்த்திய

போது ஏற்பட்ட இனிய நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுவதை அகநானூற்றுப் பாடல்கள் விளக்குகின்றன. இதனால் தலைவன் பாகன் மீது கொண்டுள்ள நம்பிக்கையும், மதிப்பும் தெளிவாகப் புலனாகின்றன.

முல்லைத் திணையில் தேர்ப்பாகற்கு மட்டுமே கூறியதாக அமைந்த பாடல்கள் காணப்படுகின்றன. முல்லைத் திணையில் வினைவயிற் பிரிந்து சென்ற தலைவன் கார்ப் பருவத்தில் வருவேன் என்று கூறிச் செல்வதும், அவன் பிரிவைத் தலைவி ஆற்றியிருத்தலும் நிகழும் நிகழ்ச்சிகள். வினை முடிந்து தேரேறி வரும் தலைவன் விரைவில் தலைவியைக் காணப் பாகனிடம் தேரை விரைந்து செலுத்துமாறு வேண்டுவன். எனவே முல்லைத் திணையில் மட்டுமே தலைமகன் தேர்ப்பாகனிடம் கூறும் கூற்றுகள் நிகழும்.

வேந்தனுக்கு உறுதுணையாகப் போர் மேற்செல்லும் தலைவன் போர் முற்றியபின் இல்லம் திரும்புவான். அவ்வாறு வரும்போது பாகனிடம் தேரை விரைந்து செலுத்தித் தலைவியைக் காண உதவுமாறு கூறுவான். இச்செய்தியை முல்லைத் திணைக்குரிய கருப்பொருள் வழி உணர்த்தும் திறம் பாராட்டத்தக்கது.

> "விருந்தின் மன்னர் அருங்கலந் தெறுப்ப
> வேந்தனும் வெம்பகை தணிந்தனன் தீம்பெயற்
> ........................................
> திதலை யல்குலெங் காதலி
> புதல்வற் பொய்க்கும் பூங்கொடி நிலையே"[32]

இப்பாடல் வினைமுடித்து மீளும் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது என்னும் துறை சார்ந்தது.

இப்பாடலில் முல்லைத் திணையில் முதற் பொருளாகிய மாலைக் காலத்தை உணர்த்த மழை பொழிவது முதலில் கூறப்பட்டது. பிறகு சிவந்த நிறமுள்ள முல்லை நிலம். இந்திரகோபப்பூச்சி, கோல்தாங்கிக் குழல் ஊதிக் கொண்டு வரும் கோவலர் பின்வர ஆநிரைகள் கன்றினை நினைந்து மனை படரும் நனைநகு மாலை என முல்லைத் திணைக்குரிய கார் காலமும் மாலை நேரமும் கூறப்பட்டுள்ளன. பாக! தேரை விரைந்து செலுத்துக! 'மதியே! என் மகனை நினைந்து இங்கு வந்தால் நினக்கும் பால் சோறு தருவேன் என இனிய கூறி விரல் விளி பயிற்றிப் புதல்வற் பொய்க்கும் பூங்கொடி நிலை காண்குவம்' என்று கூறுகிறான் தலைவன்.

## தலைவி கூற்று

வாழ்வில் குடும்பத்தை வளர்த்தும் காத்தும் வளஞ்செய்பவள் தலைமகள். இலக்கியத்தில் இவள் பெறுமிடம் இன்றியமையாதது. தலைமகளின் குணநலன்களைக் கூறும் தொல்காப்பியர், "கற்பு, காமம், ஒழுக்கம், பொறுமை, பெருமை, விருந்தோம்பல், சுற்றம் ஓம்பல் போன்ற பிறவுமாம்" எனக் கூறுகிறார்.[33]

நாண் என்பது பெண்டிர்க்கு இயல்பாக உள்ளதொரு தன்மை. மடம் என்பது, கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. அச்சம் என்பது, பெண்மையில் தான் காணப்படாததொரு பொருள் கண்டவிடத்து அஞ்சுவது. பயிர்ப்பு என்பது, பயிலாத பொருட்கண் அருவருத்து நிற்கும் நிலைமை. இத்தகைய சிறப்புகளையுடைய தலைவியாகப் பொலியக் கூடிய பெண் பிறவியை மலைநாட்டுத் தலைவன் ஒருவன் இறையை வேண்டிப் பெறுகின்றான். இதனை,

"குன்றக் குறவன் கடவுட் பேணி
இரந்தனன் பெற்ற எள்வளைக் குறுமகள்"[34]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடற் பகுதியால் அறிகின்றோம். இவளுடைய தனிப் பெருமையை உணர்த்துவதற்காகவே அகப்பொருள் நுதலும் நூல்கள் இவளுக்குத் தங்கை தமக்கை இருப்பதாகவே காட்டவில்லை போலும்.

இவள் சிறுமியாக இருந்த பொழுது மிகச் செல்லமாக வளர்க்கப் பெற்றவள் என்பதைப் பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பாலை உண்ண மறுக்கும் சிறுவிளையாட்டியாகவும், [35]

"செல்வத் தந்தை இடனுடை வரைப்பின்
ஆடுபந்து உருட்டுநள் போல ஓடி
அஞ்சில் ஓதி இவளுறும்
பஞ்சி மெல்லடி நடைபயிற் றும்மே" [36]

என்று பஞ்சு போன்ற மெல்லடியினை உடையாளாகவும் நற்றிணை குறிப்பிடுவதால் அறியலாம். இதனை அகநானூற்றுப் பாடல் ஒன்று மேலும் தெளிவுறுத்துகின்றது. இங்குச் சிறுமியாகிய தலைவி அதிக நேரம் விளையாடுவதைத் தாய் பொறுக்க முடியாத நிலையிலிருப்பதைக் காண்கின்றோம். விளையாட்டின் நடுவிலேயே ஒரு கிண்ணத்தில் பால் கொணர்ந்து அவளை அருந்தச் செய்கின்றாள். அவளோ ஒரு சிறிது அருந்தியதும் ஓடுகின்றாள். "எனக்காகச் சிறிது குடித்தாய்; உங்கள் அப்பாவிற்காகச் சிறிது குடி" என்று கெஞ்சித் தன் செல்வக் குழந்தையை அழைக்கின்றாள். [37] இதில் செல்லமாக வளர்த்த தலைமகளைத் தலைவன் சுட்டிச் சென்று விட்டானே என்று தாய் வருந்துவதைக் காணலாம்.

தலைவி தோழியிடம் களவுக் காதலுக்கு ஏற்படும் பல இடையூறுகளைத் தொகுத்துக் கூறும் பாடல் நயமிக்கது.[38] இரும்பிழிமாரி அழுங்கல் மூதூர் விழவின்றாயினும் துஞ்சாது. ஊர் துஞ்சினும் வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள். அன்னை துஞ்சினும் காவலர் துஞ்சார். காவலர் துஞ்சினாலும் நாய் துஞ்சாது. நாய் துஞ்சினும் நிலவு ஒளிரும். நிலவு மடியின் கூகை குழறும். கூகை துஞ்சினும் மனைச் செறி கோழியின் குரல் இயம்பும்.

அனைத்தும் துஞ்சினும் நில்லா நெஞ்சத்துத் தலைவன் வாரான் எனும் தலைவியின் கூற்று கருப்பொருள்களின் துணை கொண்டு களவுக் காதலுக்கு ஏற்படும் தடைகளை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது. இதன் மூலம் விரைவில் மணந்து கற்பு நெறியில் வாழத் தலைவனை நெறிப்படுத்த வேண்டும் என்பது நோக்கமாக அமைகிறது.

"மன்றுபா டவிந்து மனைமடிந் தற்றே
கொன்றோ ரன்ன கொடுமை யோடின்றே
................................
இருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே"[39]

என்ற தலைவியின் கூற்று அவளுடைய காதல் நெஞ்சத்தின் புலப்பாடாகத் தோற்றுகிறது. இவ்வாறு காமத்தின் காரணமாகத் தலைவி துன்புறும் நிலையில் அவளது நெஞ்சம் தலைவன் வரும் வழியை எண்ணி அவனது அடிகள் துன்புறாது தாங்கும் பொருட்டுச் சென்று விட்டதாகக் கூறுகிறாள்.

தலைவி கூற்றாக அமைந்த,

"குன்றக் கூகை குழறினும் முன்றிற்
பலவின் இடுஞ் சினைக் கலை பாய்ந்து உகளினும்
............................
அஞ்சுமன் அளித்து என் நெஞ்சம்! இனியே
ஆர் இடுட் கங்குல் அவர்வயின்
சாரல் நீள் இடைச் செலவு ஆனாதே"[40]

என்ற பாடல் ஆந்தையின் ஒலியும் குரங்குகள் பாயும் ஒலியும் கேட்டு தலைவியின் நெஞ்சு நடுங்குவதால் இரவில் தலைவன் வரும் வழியின் ஏதம் கருதி, அஞ்சுவதாக தன் ஆற்றாமையை வெளிப்படுத்துகிறாள்.

குறுந்தொகைத் தலைவி ஒருத்தி கார் பருவம் வந்ததை அறிந்து தலைவன் வாராததால் துன்புற்று வருந்துகிறாள். ஆண்மான் பெண்மானோடு களிப்பினால் துள்ளி விளையாடும் காட்சியைப் பார்த்தும் மீண்டு வருதலை எண்ணாது தங்கிய தலைவன் தலைவி உயிரோடு இருத்தலை அறிந்து மீண்டு வருதலைக் கேட்டற்குக் கார்ப்பருவம் வந்ததாகக் குறிப்பிடுகிறாள்.[41]

ஐங்குறுநூற்றில் மருதத்திணையில் கிழத்தி கூற்றுப் பத்து எனும் தலைப்பில் பத்துப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இவை தலைவன் புறத்தொழுக்கம் உடையவனாய் ஒழுகித் தன் இல்லத்திற்கு வந்தபோது தலைவி அவனுடன் புலந்து கூறுவதாகும்.

"நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழூஉம்
கைவண் மத்தி கழா அர்அன்ன
நல்லோர் நல்லோர் நாடி
வதுவை அயர விரும்புதி நீயே"[42]

என்ற பாடல் மருதநில வளத்தைக் காட்டுகிறது. மாம்பழம் பொய்கையில் விழும் மத்தி என்பவனின் கழார் ஊரைச் சார்ந்த நல்ல மகளிரை மணம் செய்து கொள்ளும் தலைவனிடத்து இனி இதுபோல் நிகழாது என்று கூறுவது ஏன் ? எனக் கேட்கிறாள்.

## தோழி கூற்று

அகப்பொருள் பாத்திரங்களுள் மிகவும் பொறுப்பு வாய்ந்தவளும் அதிகம் இடம்பெறுபவளும் தோழியாவள். தலைவன், தலைவி, நற்றாய், செவிலி, பரத்தை, பாணன் போன்றவர்கட்கு அமைவன கூறி வாழ்வைச் செப்பஞ் செய்யும் ஆற்றல் பெற்றவள் தோழியாவாள். "தலைவனைக் கண்டவுடன் மயங்கி விடும் தலைவி போலாது பன்னாளும் அவன் குணங்களை ஆய்ந்து தேர்ந்து முடிவில் தலைவனிடம் கூட்டுவிப்பாள்.

தலைவனுடைய பிரிவுகளின் பொருத்தங்களை ஆய்ந்து ஒப்பித் தலைவியும் ஒப்புமாறு வற்புறுத்துவள். பிரிந்து வருந்தும் தலைவியைப் பல்லாற்றானும் தேற்றுபவள். ஒரோவழித் தலைவன்பால் குறைகள் காணின் கழறியுரைத்துத் திருத்துபவள். களவு, கற்பு என இரு கைகோள்களிலும் இத்தோழி தொடர்பு இல்லாத இடனில்லை என்று கூறத்தக்க முதன்மை வாய்ந்தவள்."[43]

## தோழி தலைவனைவரைவு கடாயது

அறிவு முதிர்ச்சியும் சிந்தனைச் செல்வமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற தோழி தலைவியின் வாழ்க்கையில் களவு என்று ஒன்று நடைபெற்றது என்பது தோன்றாவகையில் மனத்தை முடித்து வைக்கவே பாடுபடுவாள்; பல்வேறு வழிகளால் வற்புறுத்தி உரைப்பாள். இவ்வாறு மணம் செய்து கொள்ளுமாறு குறிப்பாகவோ வெளிப்படையாகவோ கேட்டலை அகத்திணை இலக்கணம் வரைவு கடாதல் என்ற துறையாக எடுத்துப் பேசும்.

தோழி தலைவனிடம் அவர்கள் களவொழுக்கம் ஊராரால் அறியப்பெற்று, முதலில் அம்பலாக முளைத்துப் பின்பு அலராக வளர்ந்தது என்று கூறி இனி வரைந்து கொள்வதில் காலம் தாழ்த்தல் கூடாது என்று வெளிப்படையாகவே கூறுவாள். அலரறிவுறுத்தலை,

> "அறிந்தோர் 'அறனிலர்' என்றலின் சிறந்த
> இன்னுயிர் கழியினும் நனிஇன் னாதே
> ....................................
> தேர்வழங்கு தெருவின் அன்ன,
> கௌவை ஆகின்றதுஐயநின்! அருளே"[44]

என்ற நற்றிணைப் பாடலால் அறியலாம். இது மணம் செய்து கொள்ளாது களவுப் புணர்ச்சியே கருதி வந்தொழுகும் தலைமகனைத் தோழி குறியிடத்தில் தொழுது தலைவனால் அருளிப் பாட்டோடு செய்த தலையளிதான் பலராலும் அறியப்பெற்று

அலராயிற்று என்றும், இனி இவள் இறந்து பட்டொழியினும் இப்பழிச்சொல் நீங்குவதொன்றன்று என்றும் வரைவு தோன்றக் கூறுவதை அறியலாம்.

வரைவு கடாதல் பற்றிய பெரும்பாலான பாடல்கள் தோழி தலைவனிடம் கூறியனவாகவே அமைந்திருக்கும்.

"இளம்பிறை யன்ன கோட்ட கேழல்
களங்கனி யன்ன பெண்பாற் புணரும்
அயந்திகழ் சிலம்ப கண்டிகும்
பயந்தன மாதோநீ நயந்தோள் கண்ணே"[45]

தோழி பகற்குறிக்கண்ணே தலைவனை எதிர்ப்பட்டுத் தலைவியின் பசலை கூறி வரைவுகடாதலை இப்பாடலில் காணலாம். கலித்தொகைத் தோழியொருத்தி தலைவியின் ஆற்றாமையையும் தலைவனது களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாகின்றமையும் எடுத்துக்காட்டி வரைவு கடாவுகின்றாள்.

"வீழ்பெயல் கங்குலின் விளியோர்ந்த ஒடுக்கத்தால்
வாழுநாட் சிறந்தவள் வருந்துதோள் தவறுண்டோ
தாழ்செறி கடுங்காப்பின் தாய் முன்னர் நின்சாரல்
ஊழுறு கோடல்போல் எல்விளை உகுபவால்"[46]

தாயால் தலைவி இற்செறிக்கப்பட்டிருப்பதையும், தலைவன் இரவுக் குறியின்போது செய்யும் குறிகளைத் தாரகமாகக் கொண்டு அவள் உயிர் வாழ்வதையும் பாடல் புலப்படுத்துகின்றது. "இந்நிலையில் அவளுடைய பூப்போலும் கண்பாடின்மையை நீங்கிப் பாடுவதற்கும் அஞ்சுவேன்; அதற்குக் காரணம் என்னவெனில், அத்துயிலிடை வருந்தத் தக்க கனவால் பின்னர்த் தாங்கிய அரிய வருத்தத்தால் உற்ற கேட்டைச் சீர்தூக்கின் அஃது எல்லையறிய வொண்ணாது. இனி இவ்வருத்தம் அவள் உறாதவண்ணம் நீ வரையாமல் பிரியப்

பட்டாளொடு கொண்ட உறவு பின்னுதலை நீ ஈதல் வேண்டும்" என்று கூறி வரைவு கடாவுகின்றாள் தோழி.

### தோழி செவிலித் தாய்க்கு அறத்தொடு நிற்றல்

தலைவியின் களவொழுக்கம் தோழியின் துணையினால் தொடர்கின்றது. 'களவிற்குத் தோழியே சிறந்தா ளாயிற்று' என்பர் நச்சினார்க்கினியர்.[47] அறிவாற்றலும் பண்பு நலனும் வாய்ந்த தோழியின் துணையினால் தலைவியின் களவொழுக்கம் கற்பொழுக்கமாக மாறுகின்றது.

தான் கொண்ட காதலைத் தலைவி தோழிக்கு உணர்த்த, தோழி செவிலிக்கு உணர்த்த, செவிலி நற்றாய்க்கு உணர்த்த, நற்றாய் தந்தைக்கு உணர்த்த தந்தை அறிந்து மணமுடிக்கும் இயல்பு இருந்த நிலையை 'அறத்தொடு நிற்றல்' என்ற துறை உணர்த்துகிறது.

வலிய வில்லைக் கையிலேந்தி வரும் தலைவன், தன்னால் அம்பு எய்யப் பெற்ற யானையைத் தேடித் தினைப்புனம் வரும்போது பார்த்தோர் பலராவர். ஆயின் நீர் சொரியும் கண்ணுடன் நெகிழ்ந்த தோளுடன் ஆனது தான் மட்டுமே எனக் கூறுவதன் வழித்தான் கொண்ட காதலைத் தோழியிடம் வெளிப்படுத்துகிறாள் தலைவி.[48] பத்துப்பாட்டுள் ஒன்றான குறிஞ்சிப் பாட்டு தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல் என்னும் துறையில் அமைந்த பான்மையது.

களவில் ஒழுகும் ஐங்குறுநூற்றுத் தலைவி ஒருத்தியின் உடல் வேறுபாடு கண்டு ஐயுற்ற செவிலி 'இஃது எற்றினானாயிற்று ?' என வேலனை வினவினளாக, அவன் கழங்கு பார்த்து இது தெய்வத்தினானாயிற்று' என்று கூற, அஃதுணர்ந்த தோழி செவிலி கேட்கும் பொருட்டு அவள் கேட்கும் முறையில் கழங்கை முன்னிலைப் படுத்திக் கூற அறத்தொடு நிற்கின்றாள்.

"பொய்படுபு அறியாக் கழங்கே! மெய்யே
மணிவரைக் கட்சி மடமயில் ஆலும்நம்
மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோன்
ஆண்டகை விறல்வேள் அல்லன் இவள்
பூண்தாங்கு இளமுலை அணங்கி யோனே"[49]

இதில் தலைவியை வருத்தியவன் முருகன் அல்லன், வேறொருவன் எனத் தோழி கூறி அறத்தொடு நிற்றலைக் காணலாம்.

குறுந்தொகைத் தோழி ஒருத்தி தலைவியின் களவொழுக்கத்தைப் புலப்படுத்தும் முறை இது. தலைவியின் உடல் வேறுபாட்டைக் கண்டு செவிலித்தாய் முதலியோர் நெற்குறி பார்ப்பவளைக் கொண்டு அதன் காரணத்தை ஆராயத் தொடங்குகின்றனர். குறத்திப் பாட்டு பாடிக் கொண்டு குறி பார்க்கின்றாள். தோழி குறத்தியை நோக்கி,

"அகவன் மகளே! அகவன் மகளே!
மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே! பாடுக பாட்டே;
இன்னும் பாடுக பாட்டே, அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே"[50]

என்று கூறுகின்றாள்.

## தோழி தலைவற்கு வாயில் மறுத்தல்

ஐங்குறுநூற்றில் தோழி தலைவனிடம் வாயில் மறுத்துப் பேசுதலை,

"நீருறை கோழி நீலச்சேவல்
கூருகிர்ப்பேடை வயாஅம் ஊர!

புளிங்காய் வேட்கைத் தன்றுநின்

மலர்ந்த மார்பிவள் வயாஅ நோய்க்கே"[51]

எனும் பாடல் காட்டும். நீருறை கோழி பெடையுடன் வாழும் எனும் மருதக் கருப்பொருளைக் காட்டி புளிங்காயை நினைத்தவழி வாயில் நீர் ஊறி வேட்கைத் தணிதல் போல அன்று நின் மார்பு பிரிவையும் துன்பத்தையும் தந்து வருத்துவது எனப் பரத்தையில் சென்று வந்த தலைவனை மறுத்துரைக்கிறாள்.

குறுந்தொகைத் தோழி 'வாரல் எம்சேரி தாரல் நின்தாரே' என்று மறுத்துரைத்து உரையாடுகிறாள்.[52]

நற்றிணையில் தோழி விறலியிடம் வாயில் மறுத்துரைக்கும் பகுதி வரலாற்று செய்தியுடன் அமைந்துள்ளது. முள்ளூர் எனும் ஊரில் ஆரியர்கள் ஒன்றுகூடி மலையனுடன் அஞ்சி ஓடியது போன்று விறலியின் வன்மைக்கு நாம் அழிந்து பயனில்லாது போவோம் என்று தோழி மறுத்துரைக்கிறாள்.[53]

## நற்றாய் கூற்று

அகஇலக்கியங்களில் இவளுடைய பங்கு மிகக் குறைவாகவே காணப்பெறுகின்றது. இவள் தன் மகளுடைய கரந்த வொழுக்கத்தைச் செவியுற்றதும், அவ்வொழுக்கத்தின் போக்கையும் தன் மகள் தேர்ந்தெடுத்த தலைவனுடைய பொருத்தத்தையும் தன் தோழியுடன் (செவிலியுடன்) ஆராய்ந்து வருவாள்.

"கிழவோன் அறியா அறிவினள் இவள்என

மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்

ஐயக் கிளவியின் அறிதலும் உரித்தே"[54]

என விதி செய்வர் தொல்காப்பியர். தலைவியின் பிற்கால வாழ்க்கையில் மிகவும் கருத்துடைய இவளைத் தலைவி தன் போக்கிற்கு இடையூறாக இருப்பதாக எண்ணி மனம்

வருந்துவாள். இதனால் தலைவி நற்றாய்க்கு 'வல்லுரைக்கடுஞ் சொல் அன்னை'[55] 'பிணிகோளருஞ் சிறை அன்னை'[56] 'அறனில் யாய்'[57] என்றின்னவாறெல்லாம் பட்டம் அளிப்பதுண்டு. தலைவி தனக்குத் தக்க தலைவனைத் தானே தேர்ந்து கொள்வது இவளுக்கு உடன்பாடேயாயினும், இவர்கள் உடனே வரைந்து கொண்டு வாழ்க்கை நடத்த வேண்டுமென்பதே இவள் எண்ணமாகும்.

## நற்றாய் வேலனை வினாயது

உடன்போய தலைவன் தலைவியர் சின்னாள் கழித்து மீண்டும் வருதல் பற்றிய செய்தி நற்றாய்க்குக் கிட்டுகிறது. இச்செய்தியறிந்த தாய் இருவரையும் ஆவலுடன் வரவேற்க விழைகிறாள். தலைவன் இல்லத்திலும் அவர்களை வரவேற்கச் சுவரில் செம்மண் பூசுகின்றனர். முற்றத்தில் மணல் கொட்டுகின்றனர். மாலை தொங்க விடுகின்றனர் என்ற செய்தியும் நற்றாய்க்குக் கிடைக்கிறது. தலைவியை உடன் அழைத்துச் சென்ற தலைவன் தன் வீட்டுக்கு வருவானா அல்லது அவர்கள் வீட்டுக்குப் போவானா என்ற வினாக்கள் அவள் உள்ளத்தில் எழுகின்றன. எனவே வேலனை அழைத்து,

"ஆகுவ தறியும் முதுவாய் வேல
கூறுக மாதோநின் கழங்கின் திட்பம்
மாறா வருபனி கலுழக் கங்குலின்
ஆனாது துயறுமெய் கண்ணினிது படீஇயர்
எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே"[58]

என்று தலைவனின் குறிப்பறிந்து கூறுமாறு வேண்டுகிறாள். தன் வீட்டுக்கே முதலில் அவர்கள் வருதல் வேண்டும் என்ற விழைவும் ஆர்வமும் அவள் குரலில் எதிரொலித்தலைக் காண இயல்கின்றது.

**செவிலி கூற்று**

கூறுதற்குரிய மறைபொருளெல்லாங் குறிப்பானன்றிக் கூற்றினாற் கூறத்தக்கவள் செவிலியாகும்.

பிறந்தநாள் தொட்டுத் தலைவியைச் சிறந்திட வளர்த்து வருபவள் செவிலி. இவளே தலைவியின் உயிர்த் தோழியாக இருப்பவளை ஈன்ற தாய்; நற்றாய்க்குத் தோழியாக இருப்பவள். இதனை,

"செவிலி நற்றாய் தோழி யாகி
அவல நீக்கி அறிவும் ஆசாரமும்
கொளுத்தித் தலைவியை வளர்த்த தாயே"[59]

என்று கூறுவர் நாற்கவிராச நம்பி. தொல்காப்பியரும்,

"ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாய் எனப்படுவாள் செவிலியாகும்."[60]

என்றும்,

"கழிவினும் நிகழ்வினும் எதிர்வினும் வழிகொள்
நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்
செவிலிக் குரிய ஆகும் என்ப.[61]

என்றும் இவளை அறிமுகம் செய்து இவளது கடமைகளையும் தெளிவுறுத்துவர். அகநானூற்றுச் செவிலியும் தலைவியின் மென்மைத் தன்மையையும் அருஞ்சுரத்தின் கடுமையையும் நினைந்து நினைந்து உருகுவதை,

"வளங்கெழு திருநகர்ப் பந்துசிறி தெறியினும்
இளந்துணை ஆயமொடு கழங்குடன் ஆடினும்

.........................................

வைகுறு மீனில் தோன்றும்

மைபடு மாமலை விளங்கிய சுரனே"[62]

என்ற அகப்பாடலில் கண்டு தெளியலாம். உடன்போக்குச் சென்ற தலைவியைத் தேடிக் காணாது, பாலைநிலத்தில், "நடந்த கால்களும் ஓய்ந்தன; பார்த்த கண்ணும் பூத்தன. இருவரையும் கண்டேன் இல்லை" என்று வெறுத்துக் கூறுவதை,

"காலே பரிதப் பினவே; கண்ணே

நோக்கி நோக்கி வாள்இழந் தனவே

அகலிரு விசும்பின் மீனினும்

பலரே மன்றஇவ் உலகத்துப் பலரே"[63]

என்பதால் நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும் காட்சியைக் காணலாம்.

## உழையர் (இளையோர்) கூற்று

இவர் தலைவன் தலைவி இவர்களை விட்டுப் பிரியாது அவர்களுடன் இருந்து அவர்களுக்குக் குற்றேவல் செய்யும் ஏவலர் ஆவர். அகப்பாடல்களில் உழையர் கூற்றாகப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. வினை முற்றிய தலைமகன் கருத்துணர்ந்தும், தலைமகன் வரவு கண்டு தலைவிக்குக் கூறியதாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

சான்றாகத் தலைவனிடம் இளையோர் கூறுவதாக அமைந்த பாடல் ஒன்றில் "வேந்தனும் வென்று கொடி எடுத்தனன். பல்லான் மேய்க்கும் கோவலர் மீண்டும் மனை புகுதற்கு ஆநிரைகளை அழைக்கக் குழல்வாய் வைத்தனர். இளையர் விரைந்து ஏக, பாகன் விரைந்து தேரைச் செலுத்தப் புலவர் போற்றும் விழுப்புண் கொண்ட மார்பில் சந்தனம் அணிய வென்றிகொள். உவகையுடன் நீ இல்லம் புகுதல் வேண்டும். தீதிலாட்டியாகிய

தலைவியின் திருநுதற் பரந்த பசப்பு இனியாண்டு உறையும் என்றுரைத்தனன்.[64] இப்பாடலில் முல்லைத் திணையின் முதற்பொருள் கருப்பொருள்கள் சிறப்புறப் புனையப்பட்டுள்ளன.

**கண்டார் கூற்று**

இவர், களவுக் காலத்தில் தலைவியின் பெற்றோர் அவள் களவினை உணர்ந்து அவளை வேற்றவர்க்கு மணம் நிச்சயிக்கப்போகும்போதும், தலைவி தலைவனுடன் சென்று அவன் மனையில் வரைந்து கொள்ளும் நோக்குடன் செல்லும்போதும் காட்டு வழியில் சந்திக்கும் மாந்தர் ஆவர். உடன்போக்கில் தலைவனும் தலைவியும் தமரின் நீங்கிச் சென்ற காலத்தில் அவர்களைத் தேடிச் சென்ற செவிலியிடம் இடைச் சுரத்துக்கண்டோர் கூறியதாக ஒரு குறுந்தொகைப் பாடல் உள்ளது.

"வில்லோன் காலன கழலே; தொடியோள்

மெல்லடி மேலவும் சிலம்பே; நல்லோர்

...............................

வேய்பயில் அழுவம் முன்னி யோரே"[65]

தலைவி காலில் அணிந்திருந்த சிலம்பினால் அவ்விருவருக்கும் மணம் நடைபெறவில்லை என்பதை உணர்ந்து இரங்கிக் கூறுகின்றனர். கண்டோர் சொல்லியதாக நற்றிணையிலும் ஒரு பாடல் வருகின்றது.

"வையெயிற்(று) ஐயள் மடந்தை முன்னுற்று

எல்லிடை நீங்கும் இளையோன் உள்ளம்

காலொடு பட்ட மாரி

மால்வரை மிளிர்க்கும் உருமினும் கொடிதே"[66]

இதில் "மடப்பமும் இளமையும் பொருந்திய இவளை முன்னே செல்ல விடுத்துப் பின்னே செல்லும் இளைஞனின் உள்ளம் காற்றொடுபட்ட மாரிக் காலத்தே மலை பிளக்க

இடிக்கும் இடியைக் காட்டிலும் கொடியது போலும்" என்று கண்டோர் வருந்திச் செல்வதைக் காணலாம். ஐங்குறுநூற்றில் ஒரு பதிகம் முழுவதும் கண்டோர் கூற்றாகவும் பிறவாகவும் அமைந்துள்ளது.[67]

"புன்கண் யானையொடு புலிவழங்(கு) அத்தம்
நயந்த காதலற் புணர்ந்து சென்றனளே
நெடுஞ்சுவர் நல்இல் மருண்ட
இடும்பை யுறுவிநின் கடுஞ்சூல் மகளே"[68]

இதில், "நீ மருண்டு உன் வீட்டில் இற்செறிந்த கொடுமை பொறாது, நின் நல்லில்லில் நின்னோடு உறைதலினும் யானையும் புலியும் வழங்கும் காட்டுவழியில் தன்னை நயந்தானோடு போதலே அறமாம் என்று துணிந்து போயினள்" என்று கூறுவர். 'அஃது அவட்கு அறமே ஆகும். ஆதலால் நீ வருந்தற்க' என்ற குறிப்பெச்சமாகப் பெற வைத்த நயம் உணர்ந்து மகிழத் தக்கது.

## பாங்காயினார் கேட்பக் கூறியது

பாங்காயினார் கேட்பக் கூறியது என்னும் துறையில் பரத்தை, பாணன் ஆகிய இருவரின் கூற்றுக்கள் இடம்பெறும்.

பரத்தையரைப்பற்றி இளம்பூரணர் கூறுவது: "பரத்தையராவார் யாவரெனின் அவர் ஆடலும் பாலும் வல்லராகி அழகும் இளமையும் காட்டி இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர் மாட்டுந் தங்காதார்"[69] என்பது. பண்டைக் காலத்தில் இங்ஙனம் ஒருவகையார் உளராய உண்மையினை மறைக்காது எடுத்துக் காட்டிய ஒரு சிறப்பினானே நாம் நம் பண்டைய நூல்களிடத்து, அவை கூறும் ஏனைய தலைவன் முதலியோர் பெருமைகளை உள்ளதை உள்ளபடியே கூறும் உண்மைக் கூற்றுக்களாகத் தெளிந்து ஒரு தனி மதிப்புக் கொள்ளுகின்றோம்.

பாணன் அகத்திணை நாடகத்தில் வரும் சிறுமாந்தர்களுள் ஒருவன். பண் என்பது இசை. இசையில் வல்லுநனாக இருப்பவன் பாணன். யாழினை இயக்கி அதனைப் பக்க வாத்தியமாகக் கொண்டு பாடவல்லவனாதலின் இவன் யாழ்ப்பாணன் எனவும் வழங்கப் பெறுவான். "கைகவர்நரம்பிற் பனுவற் பாணன்"[70] என்று நற்றிணையிலும் "முல்லை நல்யாழ்ப் பாணன்"[71] "கைவல்சீறியாழ்ப் பாணன்"[72] என்று ஐங்குறுநூற்றிலும் பிற இடங்களிலும் இவனைப் பற்றிய குறிப்பு வருதலினின்றும் இதனை ஒருவாறு அறியலாம். அகப்பாடல்களில் காணப்பெறும்இவன் தலைவனைப் பரத்தையரிடம் கூட்டி வைப்பதற்குக் கருவியாக அமைபவன்.

தலைவனின் பரத்தைப் பிரிவுக்குக் காரணமாயிருந்த பாணன் தலைவியுடன் கூட்டிவைப்பதற்கும் வாயிலாக வருகின்றான். தலைவி வெகுளுவதனை அறிந்த தோழி வாயில் மறுக்கின்றாள். அப்பொழுது அவ்வழியே ஊரில் திருவிழா நடப்பதனை ஊரார்க்குத் தெரிவிக்குமாறு போந்த குயவனை நோக்கிப் பேசுவதாக அமைந்த நற்றிணைப்பாடல் ஒன்றில்

"....... அகனெழுந் தெருவில்
சாறெனா நுவலும் முதுவாய்க் குயவ!
..............................
ஐதகல் அல்குல் மகளிர்! இவன்
பொய்பொதி கொடுஞ்சொல் ஓம்புமின் எனவே"[73]

"அறிவு வாய்ந்த குயவனே, நீ திருவிழாச் செய்தியினை அறிவிக்கும்பொழுது ஆங்காங்குள்ள மகளிரிடம் 'மங்கைமீர், இசையால் மயக்க வல்ல பாணன் செய்த துன்பங்கள் பலவாகி வளர்வன வாயின. ஆகவே, பொய் பொதிந்த அவன் சொல்லினின்றும் நும்மைப் பாதுகாத்துங் கொள்ளுவீர்களாக' என்றும் சேர்த்துக் கொள்க" என்று தோழியின் கூற்றில் பாணன் செய்த கொடுமை புலப்படுவதைக் காணலாம்.

### கேட்போர் – அஃறிணைப் பொருள்கள்

ஒருவர் கூற்றினைக் கேட்டற்குரிய அஃறிணைப் பொருள்களை,

"ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
அவையல பிறவு நுதலிய நெறியாற்
சொல்லுந போலவுங் கேட்குந போலவுஞ்
சொல்லியாங் கமையும் என்மனார் புலவர்"[74]

என்னும் தொல்காப்பிய நூற்பா எடுத்துக் காட்டுகின்றது.

இப்பொருள்களுள் ஞாயிறு, திங்கள், கடல், கானல், விலங்கு, மரம், பொழுது, புள் ஆகியன கண்ணால் காண்டற்குரிய பருப்பொருள்கள்; அறிவு, நாண் ஆகியன மனத்தால் உணர்தற்குரிய கருத்துப் பொருள்கள்; நெஞ்சு கூறுவோரினின்று பிரிக்க முடியாத உணர்வுப் பொருள். தொல்காப்பியர் கேட்பதற்குரிய அஃறிணைப் பொருள்களாகக் கூறும் ஞாயிறு, திங்கள் முதலியவற்றுள் நெஞ்சு நீங்கலான பொருள்களை விளித்துக் கூறுவது அஃறிணைப் பொருள் கேட்குமாறு கூறுவதாகும். தொல்காப்பியர் கேட்பதற்குரிய அஃறிணைப் பொருள்களுள் வாயுடைய விலங்கையும், புள்ளையும் சொல்லா மரபின என்றும், ஏனையவற்றுள் நெஞ்சு நீங்கலாக உள்ள பிறவற்றைச் 'செய்யா மரபின' என்றும் இருவகைப்படுத்துகின்றார்.[75] இப்பொருள்கள் கூறுபவர் கூறுவதைக் கேட்பதில்லை; கூறுவதற்குப் பதில் கூறுதலில்லை; கூறுவதைச் செய்வதுமில்லை. ஆயினும், கூறுபவர்க்குத் தாம் கூறுவதை அவை கேட்பது போலவும், கூறுவதற்குப் பதில் சொல்வது போலவும், கூறுவதைச் செய்வது போலவும் தோன்றலின் ஒரு மன நிறைவு ஏற்படுகின்றது. பெரும்பாலும் துன்ப உணர்வினும், சிறுபான்மை இன்ப உணர்வினும் இத்தகு கூற்றுகள்

ஒருவர்பால் நிகழ்வதை அகப்பாடல்கள் புலப்படுத்துகின்றன. அகநானூற்றில் தலைவியின் கூற்றாக இடம்பெறும்.

"கானலுங் கழறாது கழியுங் கூறாது
தேனிமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியா
..................................
பறைஇய தளருந் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமால் அலவ"[76]

என்னும் பாடல் அலவனை விளித்துக் கூறுவதாக அமைந்துள்ளது. இப்பாடலில் தலைவி கானலுங் கழறாது, கழியுங் கூறாது, புன்னையும் மொழியாது நீயே சொல்லல் வேண்டும் என்று அலவனை விளித்துக் கூறுகிறாள். அஃறிணைப் பொருள்களை விளித்துக்கூறும் இவ்வகைப்பாடல்கள் காமம் மிக்கக் கழிபடர் கிளவி என்னும் வகையில் அடங்குவன. இப்பாடலில் நெய்தல் படுலக் கருப்பொருளாகிய கானல், கழி, புன்னை, நெய்தல்மலர், அலவன் ஆகிய அஃறிணைப் பொருள்கள் இடம்பெற்று தலைவியின் வருத்ததின் வெளிப்படுத்தற்கு உறுதுணையாகின்றன.

## தனிமொழி

மாந்தர் தனித்துத் தமக்குத் தாமே மனத்தில் உள்ளவற்றை வெளியே எடுத்துரைப்பது தனிமொழியாம். கூற்றினைக் கேட்டற்குரிய அஃறிணைப் பொருள்களுள் 'நெஞ்சு' கூறுவோரினின்று தனியே பிரிக்க முடியாதது. துன்பம் மிகுதியாகித் தளர்வெய்திக் கலங்கும் போதோ, இன்பம் மிகுதியாகி மகிழும் போதோ, அவ்வுணர்வுகளைப் பகிர்ந்து கொள்வதற்கு அருகில் யாருமில்லாத நிலையிலும், அவற்றை அகத்திணை மாந்தர் தம் நெஞ்சிற்குக் கூறிக் கொள்வர். இக்கூற்று வகையை 'நெஞ்சொடு கிளத்தல்' என்பர்.

அகப்பாடல்களில் தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக பாடல்கள் அமைந்துள்ளது. நெஞ்சை நோக்கித் தலைவன் கூறுவதாக அமைந்துள்ள இப்பாடல்கள் யாவும் தனிமொழிப் பாடல்களாகக் கொள்ளத்தக்கவை.

"வெருவரு தகுள் கானம் நம்மொடு

வருக என்னுதி யாயின்

வாரேன் நெஞ்சம் வாய்க்க நின்வினையே"[77]

என்ற பாடல் தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக அமைந்துள்ள போதிலும், அவன் தன் மனக்கருத்தை வெளிப்படுத்துவதற்கு நெஞ்சை ஒரு கருவியாக்கி முன்னிலைப்படுத்தி மொழிகின்றான் என்பதே தகும். நற்றிணையில் தலைவன் ஆற்றானாகி தலைவியை நினைந்து தன்னுள்ளே சொல்லும் பாடல்,

"ஓதமும் ஒலி ஓவின்றே; ஊதையும்

தாது உளர் கானல் தவ்வென்றன்றே;

..................................

மீன் கண் துஞ்சும் பொழுதும்,

யான் கண் துஞ்சேன்; யாதுகொல் நிலையே ?"[78]

கடலொலியும், ஊதைக்காற்றும் அடங்கிற்று ஆண் கூகை, பெண் கூகையோடு சதுக்கத்தில் கூவும் இருளையுடைய நடுநாளில் பேய்கள் வெளிக்கிளம்பும் இந்நேரத்திலும் யான் கண்ணுறுங்காமல் உள்ளேன் என் நிலையாதோ என்றான் தலைவன்.

குறுந்தொகை தலைவன் நெஞ்சிடத்து முதுமை பெற்ற நாரை அயிரை மீனை பெரும்பொருட்டு தலையைத் தூக்கி அண்ணாந்து பார்த்தார்போல நெடுந்தூரத்தில் உள்ளவரும் பெருதற்கரியவரும் ஆகிய தலைவியை நினைத்தாய் அதனால் ஊழ் வினையையுடைய வருத்தத்தை அடைந்தாய் என்பதை,

"குண கடல் திரையது பறை தபு நாரை

திண் தேர்ப் பொறையன் தொண்டி முன்துறை

அயிரை ஆர் இரைக்கு அணவந்தா அங்குச்

சேயள் அரியோள் படர்தி;

நோயை நெஞ்சே! நோய்ப் பாலோயே."[79]

எனும் பாடல் காட்டும்.

மற்றொரு பாடலில் தலைவி தரும் இன்பம் ஐம்புலனுக்கும் விருந்தாக அமைந்திருந்தது என்று தலைவன் தன் நெஞ்சிடத்து கூறுவதை,

"ஒடுங்கு ஈர் ஓதி ஒள் நுதற் குறுமகள்

நறுந் தண் நீரள் ஆர் அணங்கினளே

இனையள் என்று அவட் புனை அளவு அறியேன்

சில மெல்லியவே கிளவி

அனை மெல்லியல் யான் முயங்குங்காலே."[80]

எனும் பாடலும், ஐங்குறுநூற்றில் இயற்கைப்புணர்ச்சியில் தலைவியை இன்புற்ற இடத்தில் மறு நாளும் சென்று அவளைச் சேர்தல் தவறாது கைகூடும் என்று தன் மனத்துள் கூறுவதை,

"அணங்குடைப் பனித்துறைத் தொண்டி அன்ன

மணங்கமழ் பொழில்குறி நல்கினள் – நுணங்கு இழை

பொங்கரி பரந்த உண்கண்

அம்கலிழ் மேனி அசைஇய எமக்கே"[81]

என்னும் பாடல் வழி அறியமுடிகிறது. இவ்வாறே பட்டினப்பாலையிலும் செலவழுங்கிக் கூறும் தலைவனின் கூற்று அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

"முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்

வாரிருங் கூந்தற் வயங்கிழை யொழிய

வாரேன் வாழிய நெஞ்சே"[82]

என்று நெஞ்சை விளித்துக் கூறும் தலைவன், தலைவியைப் பிரிந்து செல்ல எண்ணியுள்ள கானம் 'திருமா வளவன் தெவ்வர்க் கோக்கிய வேலினும் வெய்யது' என்றும் குறிப்பிடுகின்றான். அத்தகைய பாலை நெறியில் செல்லுங்கால் தான் பிரிதற்குரிய தலைவியின் தோள்களோ திருமாவளவன் கோலினும் இனிய இயல்பின என்று கூறித் தலைவியிடம் தான் பெறும் இன்பத்தைக் குறிப்பால் பெற வைக்கிறான் தலைவன். தலைவனையும் தலைவன் நெஞ்சையும் பிரித்தல் இயலாது. (நெஞ்சு கூறுவோரினின்று பிரிக்க முடியாத உணர்வுப் பொருள்). இவ்வாறு நெஞ்சை முன்னிலைப்படுத்திக் கூறுவது நாடக வழக்காகும். எனவே இவை தலைவனின் தனிமொழிகளாகும்.

# ஆய்வு முடிவுகள்

1. அகத்திணைப் பாடல்கள் நாடக அமைப்பின. மாந்தர்களின் கூற்று முறையில் அமைவன. அகப்பாடல்களில் கலித்தொகை தவிர மற்றவை ஆசிரியப்பாவில் பாத்திரக்கூற்று முறையில் அமைந்தவை. அவை முன்னிலை மொழி, முன்னிலைப் புறமொழி, தனிமொழிகளாக இடம்பெற்றுள்ளன.

2. முன்னிலைப் புறமொழி சிறைப்புறக்கிளவி என்றும் கூறப்பெறும். சிறைப்புறக் கிளவி என்பது கூறப்படும் செய்தியைக் கேட்டறிதற்குரியவர் கேட்குமாறு தமக்கு முன்னிருக்கும் மாந்தரையோபொருளையோ விளித்துக் கூறுவது என்று விளக்கம் பெறும். இக்கிளத்தல் நெறியில் அகப்பாடல்களில் இடம்பெற்றுள்ள தலைவி, தோழி ஆகிய இருவர் கூற்றுகள் கருப்பொருள் வாயிலாக உணர்த்தப்பெறும் பாங்கு எடுத்துரைக்கப் பெறுகின்றது.

3. அகப்பாடல்களில் தலைவனுடைய கூற்றுகளைக் கேட்போராகத் தலைவி, தேர்ப்பாகன், பாங்கன், தோழி ஆகியோர் இடம் பெற்றுள்ளனர்.

4. தலைவி தோழிக்கும் தலைவனுக்கும் பாணன், பாங்கன், ஆகியோருக்கும் கூற்று நிகழ்த்துபவளாக அமைந்துள்ளாள். இக்கூற்றுகள் தலைவி அறத்தொடு நின்றமையை, தலைவனுடையபிரிவு ஆற்றாமல் வருந்தும் நிலையை, தலைவனுடைய புறத்தொழுக்கத்தை உணர்த்துவனவாக அமைந்துள்ளன.

5. அகத்திணையில் இன்றியமையா இடத்தைப் பெறுபவள் தோழியாகும். தோழி தலைவனுக்கும், தலைவிக்கும், செவிலிக்கும், பாணனுக்கும் கூறுபவளாக அமைகிறாள்.

6. தலைவனுடன் போகிய தலைவியை நினைந்து நற்றாய் தெய்வம் பரவுவதாகவும், வேலனை வினவுவதாகவும் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. உழையர், கண்டோர் கூற்று நிகழ்த்துபவராக உள்ளனர்.

7. பாங்காயினார் கேட்பக் கூறுபவராகப் பரத்தையும் பாணனும் அமைகின்றனர். பரத்தையின் கூற்றுகள் யாவும் மருதத்திணையில் இடம் பெற்றுள்ளன.

8. அஃறிணைப் பொருள்களை விளித்துக் கூறும் பாடல்கள் 'காமம்மிக்க கழிபடர் கிளவி' என்னும் வகையுள் அடங்குவன. ஆற்றொடு புலந்தும், அறிவு மயங்கியும் கூறும் தலைவியின் கூற்றுகள் இடம் பெற்றுள்ளன.

# சான்றெண் விளக்கம்

1. தொல்.பொருள்.அகம். நூ–5
2. மேலது, நூ–56
3. சரளா ராஜகோபாலன், சங்க இலக்கியத்தில் தோழி, ப–22
4. தொல்.பொருள்.செய்யுளியல், நூ–310
5. மேலது, இளம்பூரணர் உரை, பக்.4–12, 19–20
6. க.ப. அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப–165
7. தொல்.பொருள்.கற்பு. நூ–165
8. மேலது, நூ–177
9. குறுந்தொகை, பா–47, டாக்டர் உ.வே. சாமிநாதையர் குறிப்புரை
10. ந. பாலகிருஷ்ணன், தொல்காப்பியப் பொருளதிகாரவழி நற்றிணை ஓர் ஆய்வு, ப–158
11. அகநானூறு, பா–8, அடி, 5–12
12. குறுந்தொகை, பா–125
13. ஐங்குறுநூறு, பா–111
14. அகநானூறு, பா–362, அடி, 1–12
15. மேலது, பா–370
16. நற்றிணை, பா–175
17. மேலது, பா–299
18. அகநானூறு, பா–188
19. தொல்.பொருள்.செய்யுளியல், நூ–493, 501
20. மேலது, நூ–497
21. தொல்.பொருள்.கற்பு. நூ–144

22. மேலது, அகம், நூ—44

23. அகநானூறு, பா—344

24. மேலது, பா—34

25. மேலது, பா—114

26. மேலது, பா—134

27. மேலது, பா—154

28. மேலது, பா—234

29. குறுந்தொகை, பா—250

30. நற்றிணை, பா—221, அடி, 8—14

31. அகநானூறு, பா—384, அடி, 9—11

32. மேலது, பா—54

33. தொல்.பொருள். நூ—150

34. ஐங்குறுநூறு, பா—257

35. நற்றிணை, பா—110

36. மேலது, பா—324

37. அகநானூறு, பா—219

38. மேலது, பா—122

39. மேலது, பா—128

40. குறுந்தொகை, பா—153

41. மேலது, பா—65

42. ஐங்குறுநூறு, பா—61

43. அகநானூற்றுச் சொற்பொழிவுகள், ப—19

44. நற்றிணை, பா—227

45. ஐங்குறுநூறு, பா–264

46. கலித்தொகை, பா–48

47. தொல்.பொருள். நச். உரை, ப–151

48. அகநானூறு, பா–82

49. ஐங்குறுநூறு, பா–250

50. குறுந்தொகை, பா–23

51. ஐங்குறுநூறு, பா–51

52. குறுந்தொகை, பா–258

53. நற்றிணை, பா–53

54. தொல்.பொருள்.களவியல், நூ–115

55. அகநானூறு, பா–122

56. மேலது, பா–122

57. ஐங்குறுநூறு, பா–385

58. அகநானூறு, பா–195, அடி, 14–19

59. நம்பியகப்பொருள், நூ–111

60. தொல்.பொருள்.களவியல், நூ–33

61. மேலது, கற்பியல், நூ–12

62. அகநானூறு, பா–17

63. குறுந்தொகை, பா–44

64. அகநானூறு, பா–354

65. மேலது, பா–7

66. நற்றிணை, பா–2

67. ஐங்குறுநூறு, பா–36

68. மேலது, பா–386

69. தொல்.பொருள்.கற்பியல், நூ–10, இளம்பூரணர் உரை

70. நற்றிணை, பா–200

71. ஐங்குறுநூறு, பா–478

72. மேலது, பா–472

73. நற்றிணை, பா–200

74. தொல்.பொருள்.செய்யுளியல், நூ–501

75. தொல்.பொருள்.பொருளியல், நூ–194 இளம்பூரணர் உரை

76. அகநானூறு, பா–170, அடி, 1–8

77. மேலது, பா–131, அடி, 13–15

78. நற்றிணை, பா–319

79. குறுந்தொகை, பா–128

80. மேலது, பா–70

81. ஐங்குறுநூறு, பா–174

82. பட்டினப்பாலை, அடி, 218–220.

# இயல்– 5

# கருப்பொருள் நிமித்தங்கள்

சங்க இலக்கியங்கள் பண்டையத் தமிழ் மக்களின் பழக்க வழக்கங்களையும், நம்பிக்கைகளையும், பண்பாட்டையும் காட்டும் பான்மையனவாய் விளங்குகின்றன. பழந்தமிழரது வாழ்வியலில் பயன்படுத்தப்பட்டக் கருப்பொருள்களின் வழி வெளிப்படும் நிமித்தங்களை ஆய்ந்துரைப்பதே இவ்வியலின் நோக்கமாகும்.

## நிமித்தங்கள்

நிமித்தம் என்பது வாழ்வில் பின் நிகழவிருக்கும் நன்மை தீமைகளைச் சில குறியீடுகளின் வாயிலாக முன்னுணர்த்துவதாகும். இதனை இன்று சகுனம் எனக் குறிப்பர். பழங்காலத் தமிழர் இதனைப் புள்[1] நிமித்தம்[2] ஆகிய இரு சொற்களால் சுட்டியுள்ளனர். வருங்கால நிலைமைகளை முன்னறிவிக்கும் அறிகுறியாக நிமித்தங்களை மக்களினங்கள் கருதுவதனைப் பண்டு தொட்டு இன்று வரையுள்ள சமூகங்களின் வாழ்வியல்கள் உணர்த்தி நிற்கின்றன. செயல்கில் நிகழும் நன்மை தீமைகளை நிச்சயிக்கும் நிலையில் அவை நன்னிமித்தம் ,தீநிமித்தம் எனப்பகுக்கப்படுவதுண்டு , நிமித்தங்கள் பெரும்பாலும் மனித மனம் முடிவெடுக்க இயலாத சூழ்நிலைகளில் தோன்றுவனவாகவே காட்சி தருகின்றன.

இந்நிமித்தங்கள் நம்பிக்கையின் பாற்பட்டன.நம் செய்களுக்கும் நம் வயப்படாத இயற்கையின் நிகழ்வுகளுக்கும் தொடர்பு காட்டுவது நிமித்தங்களின் செயல்பாடாகும். இயற்கை நிகழ்வுகளுக்கும் மனிதனின் செயல்களுக்கும் தொடர்புண்டு என்ற கருத்தோற்றத்தின் அடிப்படையில் அவை நம்பப்படுகின்றன. நிமித்தங்கள் அச்சத்தின் அடிப்படையில் தோன்றியிருக்கலாமென்பர்.[3] அவை பொதுவாக அச்சத்தின் அடிப்படையில் தோன்றிப் பாதுகாப்புணர்வின் அடிப்படையில் வளர்க்கப்பட்டனவாகவே காட்சி தருகின்றன.

மேலும் இயற்கைக் கூறுகளின் மாறுபட்ட தோற்றப் பொலிவுகளும் இயற்கைக்கு மாறுபட்ட செயல்களுமே நிமித்தங்களாகக்கருதப்பட்டமை கொண்டு அச்ச உணர்வே நிமித்தங்களை உருவாக்குகின்றது எனலாம். தீமைகளிலிருந்து மனிதன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும், வாழ்வியலில் சில நிலைமைகளை நிச்சயிப்பதற்கு உதவுவதாலும் இவை மக்களால் தொன்றுதொட்டு நம்பப்பட்டு வருகின்றன.

## சொல்லும் பொருளும்

நிமித்தம் என்ற சொல்லாட்சி தொல்காப்பியத்தில் காரணம்,[4] நிமித்தம்,[5] கூட்டம்[6] ஆகிய பொருள்களில் பயின்றுள்ளது. புள் என்ற சொல் நிமித்தம் என்ற பொருளில் பல இடங்களில் சங்க இலக்கியத்தில் பயிற்சி பெற்றிருக்கின்றது. தொல்காப்பியத்தில் பறவை, நிமித்தம் என்ற பொருளில் ஓரிடத்தில் மட்டுமே சுட்டப்பட்டுள்ளது.[7] நிமித்தம் என்ற சொல்லுக்குத் தமிழ்ப் பேரகராதி

1. காரணம்
2. நிமித்தம்
3. சகுனம்
4. அடையாளம்
5. பொருட்டு

என்ற ஐந்து பொருட்களைச் சுட்டுகின்றது.[8] ஆனால் இன்றைய நடைமுறையில் காரணம், பொருட்டு ஆகிய பொருள்நிலைகளில் பேச்சு வழக்கில் பயிற்சி பெற்று வருவதனை வழக்காறுகள் உணர்த்துகின்றன.

## நிமித்தங்களின் வரையறை

பண்டைய தமிழ்மக்களின் வாழ்வியல் எச்சங்களையே இன்றும் பயன்படுத்தி வாழ்ந்துவருகிறோம். அவ்வகையில் சங்கப்பாடல்களில் காணலாகும் வாழ்வியலில் ஒன்று நிமித்தமாகும்.இதனை,

1. பறவை நிமித்தங்கள்
2. விலங்கு நிமித்தங்கள்
3. மரம், மலர், பற்றிய நிமித்தங்கள்
4. மாந்தர் தொடர்பான நிமித்தங்கள்
5. தெய்வம் தொடர்பான நிமித்தங்கள்

எனப் பாகுப்படுத்தலாம்.

**புள் நிமித்தங்கள்**

புள் என்னும் சொல் பறவைகளையும் நிமித்தங்களையும் குறிக்கின்ற பொதுச் சொல்லாக ஆட்சி பெற்றுள்ளது. நிமித்தங்களைக் குறிக்கின்றவிடத்து, பொதுவாக எல்லா வகையான நிமித்தங்களையும் குறிப்பதாயும், பறவைகளைப்பற்றி வந்த நிமித்தங்களை மட்டுமே குறிப்பதாயும் அமைந்துள்ளது. முதலில் பறவைகளால் நிமித்தம் பார்க்கும் வழக்கம் உண்டானமையின் அப்பறவைகளைக் குறிக்கும் புள்ளென்னும் பெயரால் அது வழங்கப் பெற்றது. காலப்போக்கில் வேறு பல வகை நிமித்தங்களுக்கும் அதுவே பெயராய் அமைந்தது. கருப்பொருள் வரிசையில் ஐந்தாவதாக இடம் பெறும் புள்—(பறவை) என்னும் கருப்பொருள் வழி நிமித்தங்கள் ஆய்வு பெறுகின்றன.

இப்புள்ளினைத் தொல்காப்பியர்

"மாவும் புள்ளும் ஐயறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே"[9]

என்னும் நூற்பாவில் சுட்டியுள்ளார்.

இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகிய இருவரும் புள் என்பதற்குப் பறவை என்றே பொருள் கொண்டனர். புள் நிமித்தம் என்பதற்குப் பறவை பற்றி வந்த நிமித்தம் என்று உரை செய்துள்ளார்.[10]

## புள் – சொல்லும், பொருளும்

சங்க இலக்கியத்தில் 'புள்' என்பது பறவைகளைக் குறிக்கின்ற சொல்லாகவும், நிமித்தங்களைக் குறிக்கின்ற சொல்லாகவும் ஆட்சி பெற்றுள்ளது.

முதிய ஆண் ஒந்தியை வழிச்செல்லும் மனிதர்கள் நன்னிமித்தமாகக் கொண்டனர் என்பதை,

"———— ஒதி முது போத்து
ஆறுசென் மாக்கள் புட்கொளப் பொருந்தும்"[11]

என்னும் குறுந்தொகை பாடல் தொடரும்,

உப்பினை எடுத்துச் செல்லுவோர் நன்னிமித்தம் பார்க்கின்ற வழக்கத்தினை உடையவராய் இருந்தனர் என்பதனை,

"அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்
உணங்குதிறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம்
குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்துப்
படையமைத் தெழுந்த பெருஞ்செய் ஆடவர்"[12]

என்னும் அகநானூற்றுப் பாடல் தொடரும் குறிப்பிடுகின்றன.

முல்லைபாட்டில்

"நல்லோர் வாய்ப்புள்"[13]

எனவரும் தொடர்க்குப் பெண்டிருடைய நற்சொல்லாகிய நிமித்தம் எனப் பொருள் உரைக்கப்பட்டுள்ளது.

இது காறும் எடுத்துக்காட்டியவற்றால் 'புள்' என்ற சொல் 'நிமித்தம்' என்ற பொதுப்பொருளில் ஆளப்பட்டுள்ளது என்பதனை அறியலாம்.

புள் நிமித்தம் பார்த்து மணவிழா எடுக்கின்ற வழக்கம் இருந்தது என்பதை,

"மைப்புறப் புழுக்கின் நெய்க்கனி வெண் சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்
புள்ளுப்புணர்ந் தினிய வாகத் தெள்ளொளி
அங்கண் இடுவிசும்பு விளங்கத் திங்கள்
சகட மண்டிய துகள்தீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழவொடு பரூ உப்பணை இமிழ
வதுவை மண்ணிய மகளிர்............ "[14]

என்னும் அகநானூற்று பாடல் மெய்ப்பிக்கும்.

ஈண்டும் உரைகாரர் 'புள்' என்பதற்குப் புள் நிமித்தம் என்றே பொருள் எழுதியுள்ளார்.

மற்றொரு அகநானூற்றுப் பாடப்பகுதியில் தலைமகள் புள் நிமித்தங்கள் நல்லனவாயின, ஆதலால் தலைவன் விரைந்து வருவான் எனத் தோழிக்குக் கூறுகின்றாள். இவ்விடத்தும் 'புள்' என்பது பறவை நிமித்தம் என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளதைக் காணலாம்.[15]

நற்றிணையில் வினைமுற்றி மீளும் தலைமகன் இனிய மொழியை உடைய நம் காதலிக்குப் புள்ளினங்கள் கரைந்து நம் வரவை அறியும்படி செய்தனவோ ? எனத் தேர்ப்பாகனிடம் கூறுகின்றான் இச்செய்தியை,

"................. ஈண்டுநம் வரவினைப்
புள்ளறி வுறீஇயின கொல்லோ தெள்ளிதின்
காதல் கெழுமிய நலத்தள் ஏதில்

புதல்வற் காட்டிப் பொய்க்குந்

திதலை யல்குல் தேமொழி யாட்கே"[16]

என வரும் பாடற் பகுதியால் அறியலாம். இங்கும் 'புள்' என்னும் சொல் பறவை என்னும் பொருளிலேயே ஆளப்பட்டிருக்கின்றது.

ஆகவே இவ்வெடுத்துக் காட்டுகளிலிருந்து புள் நிமித்தம் என்பதற்குப் பறவைகளினால் அறியப்படும் நிமித்தம் என்று பொருள் கொள்ளலாம்.

மேற்கூறியவற்றால் புள் என்பதற்கு நிமித்தம் என்ற பொதுப்பொருளும்,பறவை நிமித்தம் என்ற சிறப்புப் பொருளும் உண்டு என்பது தெளிவாகும்.

பறவையினங்களில் காக்கை, ஆந்தை, குயில், நாரை, என்பனவற்றின் நிமித்தங்கள் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.

**காக்கை கரைதல்**

காக்கை பறவை இனங்களிலேயே அறிவுமிக்க பறவையாகக் கருதப்படுகின்றது. காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்ற கருத்து இன்றும் நடைமுறையில் உள்ள நிமித்தமாகும். காக்கை கரைதலை இருவகையாகப் பகுக்கலாம். அண்டங்காக்கைக் கரைந்தால் தீமித்தம் என்றும், காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர். நற்செயல் நடக்கும் என்றும் நம்பும் நிலை இன்றும் இருந்து வருகின்றது.

காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்று பாடிய குறுந்தொகை புலவர் காக்கைப் பாடினியார் என்று பெயர் பெற்றார்

"விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே"[17]

என்று அவர்தம் பாடலில் தலைவன் வருகையைக் காக்கை கரைந்து தலைவிக்கு உணர்த்தியதால் நன்னிமித்தமாகக் கருதி தலைவி ஆற்றியிருந்தனள் என்றும், என்னுடைய அன்பு மொழிகளாலே அவள் ஆற்றியிருக்கவில்லை, என்றும் தோழி தலைவனுக்கு எடுத்துக்

கூறுகிறாள். இதன் மூலம் நன்னிமித்தமாகக் கரைந்த காக்கைக்குப் பலிச்சோறு படைக்கின்ற பழக்கம் பெண்களிடம் இருந்தது என்பதனை அறியலாம்.

உடன் போக்கினை அறிந்து வருந்தும் நற்றாய் தலைவனும் தலைவியும் திரும்பி வந்ததும் 'மணம்' முடித்துப் பார்க்க வேண்டும் என்று விழைகின்றாள் காக்கை நன்னி மித்தமாய் கரையும் படி வேண்டுகின்றாள். அவ்வாறு கரையின் பலிக்கடன் ஈந்து மகிழ்விப்பதாகவும் கூறுகின்றாள். இக்கருத்தை,

"மறுவிறுாவிச் சிறுகருங் காக்கை
யன்புடை மரபினின் கிளையோ டாரப்
பச்சூன் பெய்த பைந்நிணவல்சி
பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேற் காளையொ
டஞ்சி லோதியை வரக்கரைந் தீமே"[18]

என்னும் ஐங்குறு நூற்றுப்பாடல் வழி அறியமுடிகிறது. இங்ஙனம் காக்கை கரைதல் வழி நன்னிமித்தம் அறியமுடிகிறது.

## குயில் கூவுதல்

நற்றிணையில் காப்பியஞ்சேந்தனார், தோழி கூற்றாய் அமைத்துப் பாடிய பாட்டொன்றில் 'குயில் பயிற்றல்' நன்னிமித்தமாகக் கூறப்பட்டுள்ளது. பொருள்வயின் பிரிந்த தலைவன் குறித்த பருவத்திலே வந்து விடுவான் என்பதைக் குறிக்கும் பல நிமித்தங்களைத் தோழிக் காட்டுகின்றாள்

"மனைமர நொச்சி மீமிசை மாச்சினை
விளைமான் இருங்குயில் பயிற்றலும் பயிற்றும்"[19]

இதனால் குயில் கூவுதலை நம் முன்னோர் நிமித்தமாகக் கொண்டனர் என்பது புலனாகிறது.

**நாரைகள் உயரப்பறத்தல்**

குறுந்தொகையில் கல்லாடனார், தோழிக் கூற்றாய் அமைத்துப் பாடிய பாடலில் பிரிவின்கண் ஆற்றாலாகிய தலைவிக்குத் தலைவன் வருவதற்குரிய நன்னிமித்தங்கள் வாய்க்கப் பெற்றனவாய்க் கூறுகின்ற தோழி நாரைகள் வானத்தில் உயரப் பறந்த காட்சியினைக் குறிப்பிடுகிறாள். இதனை,

"குருகும் இரு விசும் பிவரும்"[20]

என்னும் பாடல் தொடர் விளக்கும். நாரைகள் உயரப் பறத்தல் நன்னிமித்தமாகும் என்று பொ.வே.சோமசுந்தரனார் உரை விளக்கம் எழுதியுள்ளார்.[21]

**ஆந்தை அலறல்**

பறவைகளில் ஆந்தை இனப்பறவைகளே தீநிமித்தங்களை அறிவிக்கும் கருவிகளாகச் செயல்பட்ட நிலையினை இலக்கியச்சான்றுகள் தெரிவிக்கின்றன. சங்கஇலக்கியத்தில் ஆந்தை இனப்பறவைகளாக ஐந்து வகைப்பறவைகள் கூறப்பட்டுள்ளன. அவை கூகை, குரால், குடிஞை, ஊமன், ஆண்டலை என ஐவகைப்படுமென்பர்.[22] மேற்கூறிய ஐந்துவகைப் பறவைகளில் கூகையே தீநிமித்தம் கூறுவதாய் பாடல்களில் சுட்டப்பட்டிருக்கின்றது. இக்கூகையை இன்று சாக்குருவி என நிமித்த அடிப்படையில் பெயரிட்டழைக்கின்றனர்.[23]

**கூகை**

கூகை சாவோரை அழைப்பதாக கருதும் வழக்கம் இன்றும் மக்களிடையே நின்று நிலவக் காண்கிறோம். வீட்டின் அருகிலோ, அல்லது தெருவிலோ, ஆந்தை பேரொலி எழுப்பினால் தீய அறிகுறி எனக் கருதி அதனை ஓட்டுவதை இன்று வழக்கமாகக் கொண்டுள்ளனர். இத்தீ நிமித்தத்தை,

"இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை

கழுதுவழங்கு யாமத் தழிதகக் குழறும்"[24]

என்று அகநானூற்றுப் பாடலும்

"கூகைச் சேவல் குராலோ டேறி

ஆரிடுஞ் சதுக்கத் தஞ்சுவரக் குழறும்

அணங்குகால் கிளரும் மயங்கிருள் நடுநாள்"[25]

என்று நற்றிணையும் குறிப்பிடும்.

மற்றொரு அகநானூற்றுப்பாடல் ஆந்தையின் குரல், வழிச்செல்லுவோருக்குக் காரியத்தை உணர்த்தும் நிமித்தமாகும் என்பதைப்

"............... பருந்திருந்து

உயாவிளி பயிற்றும் யாவுயர் நனந்தலை

உருள்துடி மகுளியின் பொருள் தெரிந்திசைக்குங்

கடுங்குரற் குடிஞைய[26]

எனவரும் பாடற்பகுதியால் அறியலாம்.

## II விலங்கு நிமித்தங்கள்

தொல்காப்பியர் வகுத்த கருப்பொருளுள் மூன்றாவதாக அமைந்துள்ள மா (மா–விலங்கு) என்னும் கருப்பொருளின் வழி சங்க புலவர்கள் தம் வாழ்வியலில் உணர்ந்த அனுபவித்த நிகழ்வுகளை வெளிக்காட்டியுள்ளனர். இந்நிமித்தங்களைக் கருப்பொருள் வழி அறியலாம்.

1. ஆமா– பசு

வீட்டினிடத்தில் கன்றை ஈன்ற ஆமாவினது கூட்டம் நல்ல புல்லை மேய்தலை நன்னிமித்தமாகக் கொள்வர். ஆமாபுல் மேய்வது நாட்டில் அமைதி நிலவும் என்பதன் அறிகுறியாக விளங்குகிறது.[27]

பல்லி

பல்லி ஒலித்தலைச் சகுனமாகக் கருதுவதனைச் சங்க காலந்தொட்டு இன்றுவரை தமிழ் மக்கள் வழக்கமாகக் கொண்டுள்ளதனை இலக்கியங்கள் மற்றும் வாழ்வியல் சான்றுகள் தெரிவிக்கின்றன. சங்க இலக்கியத்தின்கண் பல்லியின் சொல்லை நன்னிமித்தமாகக் கொண்டதற்கான சான்றுகள் மிகுதியாக உண்டு.

பல்லி ஒலியினை மட்டுமே நிமித்தமாகக் கருதிய நிலையினைச் சங்க காலந்தொட்டுக்காணமுடிகிறது. ஆனால் பல்லி இருக்கும் திக்குகளையும் கிழமைகளையும் ஒலிகளின் எண்ணிக்கையினையும் கொண்டு பலனை நிச்சயித்தமையினைப் பிற்காலத்தெழுந்த "கௌளி சாஸ்திரம்" மற்றும் இன்றைய நடைமுறை வாழ்வு ஆகியவை தெரிவிக்கக் காண்கிறோம்.

பல்லியின் ஒலி நன்னிமித்தமாக அமைவதனை,

"இனிய கூறும் பல்லி"[28]

"நல்லதைக் கூறும் பல்லி"[29]

என்றும் நற்றிணையும்

"முதுவாய்ப் பல்லி"[30]

"கனிவாய்ப்பல்லி"[31]

என்று அகநானூறும் சுட்டியுரைத்திருப்பது கொண்டு அறியலாம்.

பல்லி சொல் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவியைத் தேற்றியதாக

"முன்னியது முடித்தனம் ஆயின் நன்னுதல்

வருவம், என்னும் பருவரல் தீர,

படும்கொல், வாழி, நெடுஞ்சுவர்ப்பல்லி"[32]

என்னும் நற்றிணைப் பாடல் தெளிவுறுத்துகிறது. மேலும் பல்லியின் சொல்லை நன்னிமித்தமாகக் கொண்ட நிலையினைக் கலித்தொகைப்பாடல்

இனைநல முடைய கானஞ் சென்றோர்

புனைநலம் வாட்டுந ரல்லார் மனைவயிற்

பல்லியும் பாங்கொத் திசைத்தன"[33]

எனக் குறிப்பிடுவது கொண்டு தெளிவாக அறியமுடிகின்றது.

பல்லியின் ஒலியினைச் சகுனமாகக் கருதி புறப்பட்ட வேட்டுவனின் வலையில் காட்டுப்பன்றி அகப்படாது தப்பியதாக நற்றிணைக் குறிப்பிடுகிறது. இச்செய்தியினை,

"எய்ம்முள் அன்ன பரூஉமயிர் எருத்தின்

செய்ம்ம மேவல் சிறுகட்பன்றி

ஓங்குமலை வியன்புலம் படீஇயர் வீங்குபொறி

நூழை நுழையும் பொழுதில் தாழாது

பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென

மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்து, தன்

கல்லளைப் பள்ளி வதியும்"[34]

எனும் பாடல் காட்டும்.

"முதைச்சுவற் கலித்த மூரிச்செந்தினை

ஓங்குவணர்ப் பெருங்குரல் உணீஇய பாங்கர்ப்

பகுவாய் பல்லிப் பாடோர்த்துக் குறுகும்

புகுவைப் பன்றி"[35]

என்று அகநானூற்றுப் பாடல் தொடரும் இச்செய்தியை வெளிக்காட்டி நிற்கின்றன. இதனை பிஎஸ்.சாமி கற்பனைச் செய்தி எனக் கூறுவர். இச்செய்தி புலவரின் கற்பனையானாலும் அக்கால மக்களின் நிமித்த உணர்வை பிரதிபலிப்பதாக அமைந்துள்ளதை அறிய முடிகின்றது.

இன்றைய நிலையில் பல்லியின் சொல்லைத் திசைக்கேற்ப கேட்டு அவற்றிற்குப் பலன் சொல்லும் நிலை கிராமபுறத்தில் இருந்து வருகின்றது.

## III. மரம், மலர் பற்றிய நிமித்தம்

மரத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்த நிமித்தங்கள் அகநானூறு, நற்றிணை, கலித்தொகை முதலிய நூல்களில் காணப்படுகின்றது. பொதுவாக மரங்களின் தோற்றமும், குறிப்பிட்ட மரமும் நிமித்தமாகக் கொள்ளும் வழக்கம் இருந்ததாகத் தெரிகின்றது.

மரத்தைக் கடவுள் உறையும் இடங்களாகக் கருதி வழிபடும் நிலை இருந்துள்ளது. இந்நிலை,

"தொன்றுறை கடவுள் சேர்ந்த பராரை

மன்றப் பெண்ணை"[36]

என்னும் நற்றிணைப் பாடல் பனை மரத்தில் கடவுள் உறைந்திருந்ததாக உரைக்கிறது.

மற்றொரு அகநானூற்றுப் பாடல் கடம்பை மரத்தில் கடவுள் உறைவதாக குறிப்பிடுகின்றது.

"கடவுள் மரத்த முள்மிடை கடம்பை"[37]

என்பது அத்தொடர்.

**உன்னமரம்**

உன்னம் என்பதை இலவமரமெனக் கூறுவர்.இம்மரம் போர் செய்வதற்குச் செல்வோர் நிமித்தம் பார்த்தற்குரிய மரமெனவும் உ.வே.சா குறிப்பிடுவர்.[38] போர்வீரர்கள் போர் செய்யப்போகும் நேரத்தில் தழைத்தோங்கியிருந்தால் போர்வீரருக்கு வெற்றியும் கரித்துக் காணப்பட்டால் தோல்வியும் கிட்டும் என்று கருதுவர். இதனை உன்ன நிலை எனத் தொல்காப்பியர் புறத்திணையியலில் காட்டுகின்றார்.[39]

"உரைப்ப போல வூழ்கொள்பு கூவ
இனச்சித டுகுத்த விலவத் தாங்கட்
சினைப்பூங் கோங்கி னுண்டாது பகர் நகர்"[40]

என்றும்

"அருவி யான்ற வுயர்சிமை மருங்கிற்
பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்
இலையில மலர்ந்த இலவமொடு
இலையுயர் பிறங்கல் மலையிறந் தோரே"[41]

என்றும் அகநானூறு உரைக்கின்றது. பதிற்றுப்பத்தில் இரு பாடல்கள் உன்னமரம் நிமித்தம் உணர்த்திய நிலையினைக் கூறியுள்ளன.[42]

**வேங்கை மரம்**

வேங்கை மரம் பூத்தல் மணநாளை அறிவிக்கின்ற நன்னிமித்தமாக சங்க காலத்தில் விளங்கியது. பூத்த வேங்கையினுடைய மலர்கள் வீழ்ந்து வெறியயர் களம் போன்ற காட்சி மணநாளை அறிவிக்கும் என்பதைச்,

"செம்பரல் முரம்பில் சிதர்ந்த பூழி

நல்நாள் வேங்கைவீ நன்களம் வரிப்ப"[43]

என வரும் அகப்பாடல் அறிவிக்கின்றது.

மணநாளை உணர்த்துவதாக வேங்கை பூத்தலைக்,

"குன்ற வேலிச் சிறுகுடி யாங்கண்

மன்ற வேங்கை மணநாள் பூத்த

மணியேர் அரும்பின் பொன் வீதாஅய்"[44]

எனும் பாடலும் காட்டும்.

வேங்கை அரும்புங் காலத்துத் தினைக்கதிர்கள் முற்றிவிடும் என்று நம்பிக்கை உடைய கானவர், தினை அறுப்பதற்காக ஒன்று கூடுவர். வேங்கை மலர் கானவருக்குச் சோதிடம் தெரிவிப்பது போல உணர்த்தி நிற்பதால் கபிலர் இதனை, கணிவாய் வேங்கை என்றுரைக்கிறார். இச்செய்தியை,

"முன்றில் பலவின் படுசுளை மரீஇப்

புன்தலை மந்தி தூர்ப்பத் தந்தை

மைபடு மால்வரை பாடினள் கொடிச்சி

ஐவன வெண்நெல் குறூஉம் நாடனொடு

கூருடைச் சிலம்பின் அருவி ஆடிக்

காரரும்பு அவிழ்ந்த கணிவாய் வேங்கைப்

பாவமை இதணம் ஏறிப் பாசினம்

வணர்குரல் சிறுதினைக் கடியப்

புணர்வது கொல்லோ நாளையும் நமக்கே"[45]

என வரும் நற்றிணைப் பாடலால் அறியலாம்.

வேங்கை மலரும் காலத்தில் கானவர் திருமணம் செய்யும் வழக்கம் இருந்ததனை,

"நின்ஹுறு விழுமங் கூறக் கேட்டு

வருமே தோழி நன்மலை நாடன்

வேங்கை விரிவிட நோக்கி

வீங்கிறைப் பணைத்தோள் வரைந்தனன் கொளற்கே"[46]

என்னும் கலித்தொகைப் பாடற் பகுதியால் அறியலாம். ஈண்டு வேங்கை மலருதல் நன்னிமித்தமாகும் என்னும் குறிப்பும் பெறப்படுகிறது.

தலைவனது பிரிவால் வருந்தும் தலைவிக்கு நன்னிமித்தங்கள் உண்டாகின்றன. ஆதலின் தலைவன் வந்து விடுவார் என்று தோழி ஆற்றுவிக்கிறாள். நன்னிமித்தங்களுள் ஒன்றாக அவள் புதலில் உள்ள போதுக்களும் வரிவண்டு ஊதுவதனால் மலர்ந்ததைக் குறிப்பிடுகின்றாள். இதனைப்,

" ........................................புதலும்

வரிவண் டூத வாய் நெகிழ்ந் தனவே"[47]

இவ்வாறு மரத்தையும் மலர்களையும் நிமித்தப் பொருள்களாகக் கொள்கின்ற வழக்கம் தமிழ்நாட்டவரிடமே அன்றி மிசௌரி பள்ளத்தாக்கில் வாழ்ந்த சிவப்பிந்தியர்களிடமும் மேற்கு ஆப்பிரிக்காவில் வாழ்ந்த மக்களிடமும் இருந்தது என்பதை இ.சுந்தரமூர்த்தி தம் ஆய்வு நூலில் எடுத்துக் காட்டுகின்றார்.[48]

## தெய்வம் தொடர்பான நிமித்தங்கள்

தலைவனும் தலைவியும் உடன்போய காலத்து நற்றாய் கட்டுக் கேட்டல், கழங்கு பார்த்தல் முதலான தெய்வம் தொடர்பான நிமித்தங்களைப் பார்த்தல் உண்டு. இதனைத் தொல்காப்பியர்,

"தன்னும் அவனும் அவளுஞ்சுட்டி
மன்னு நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்
நன்மை தீமை யச்சஞ் சார்தல் என்று
அன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ
முன்னிய காலம் மூன்றுடன் விளக்கி"[49]

என்றுரைப்பர். இதற்கு அரணாக,

"மான்பிணை நோக்கின் மடநல் லாளை
யீன்ற நட்பிற் கருளான் ஆயினும்
இன்னகை முறுவல் ஏழையைப் பன்னாட்
கூந்தன் வாரி நுசுப்பிவர்ந் தோம்பிய
நலம்புனை யுதவியும் உடையன் மன்னே
அஃதறி கிற்பினோ நன்றுமற் றில்லை
அறுவை தோயும் ஒரு பெருங்குடுமிச்
சிறுபை நாற்றிய பஃறலைக் கொடுங்கோல்
ஆகுவ கறியும் முதுவாய் வேல
கூறுக மாதோநின் கழங்கின்றிட்பம்"[50]

என்னும் பாட்டினை நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டுகின்றார்.

**கட்டும் கழங்கும்**

அக இலக்கியங்களில் தலைவியின் உடல் மெலிவிற்குக் காரணமறியத் தாயர் அகவன் மகளாகிய கட்டுவிச்சியையோ அல்லது கழங்குக்குறி பார்க்கும் வேலனையோ அழைத்துக் குறிகேட்பர். அவை முறையே கட்டுக்கேட்டல், கழங்குபார்த்தல் எனப் பெயர் பெறும். கட்டுக்குறி பெண்டிரால் உணர்த்தப்பெறும் ஒன்றாகவும், கழங்குக்குறி ஆண் பாலராகிய வேலனால் உணர்த்தப்படும் குறியாகவும் விளங்கியது. கட்டும் கழங்கும் வெறியாட்டிற்கு முன்னர் நிகழ்த்தப் பெறுவதனைத் தொல்காப்பியம்,

"களவல ராயினுங் காமமேற் படுப்பினும்
அளவுமிகத் தோன்றினுந் தலைப்பெய்து காணினுங்
கட்டினுங் கழங்கினும் வெறியென
இருவரும் ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்"[51]

என்றுரைக்கிறது. இந்நிகழ்வை நற்றிணை,

"நன்னுதற் பரந்த பசலைகண் டன்னை
செம்முது பெண்டிரொடு நெல் முன் நிறீஇக்
கட்டிற் கேட்கு மாயின்"[52]

என்றும்,

"பொய்யா மரபி னூர்முது வேலன்
கழங்குமெய்ப் படுத்துக்கன்னந் தூக்கு
முருகென மொழியு மாயின்"[53]

என்றும் தெரிவிக்கின்றன.

முருகனாகிய தெய்வம் ஆண்பாலராகிய வேலன் உடம்பிலும் பெண்பாலராகிய தேவராட்டி நடப்பிலும் ஆவேசித்துக் குறியுணர்த்துமென நம்பிய நிலையினை இக்குறி முறைகள் உணர்த்துகின்றன. இவ்விரு சாராரும் முருக வழிபாட்டினராகவும் முருகனே அவர்கள் மேல் ஆவேசித்துக் குறி கூறுவதாகவும் காட்டப்படுகின்றனர். இந்நிகழ்வில் கருப் பொருளாகிய தெய்வம், வெளிப்பட்டு நிற்பதனை அறியலாம்.

## கட்டுக்கேட்டல்

தலைவியின் காமநோயை அறியாத தாய் அவளது வேறுபாட்டின் காரணத்தை ஆராயும் பொருட்டு அகவன் மகளாகிய கட்டுவிச்சியை அழைத்துக் கட்டுப்பார்ப்பது வழக்கம். கட்டுப்பார்த்தல் என்பது முறத்தில் நெல்லை வட்டமாகப் பரப்பி வைத்துக் தெய்வங்களைப் பாடி எண்ணிப் பார்த்தக் கட்டுவித்தி காணும் குறி என்பர்.[54] இது

வெறியாடலுக்கு முன் நிகழும் குறி முறையாகும். கட்டுப்பார்த்தல் பெண்களுக்குரிய ஒன்றாகவும் பெண்ணாகிய கட்டுவிச்சியரால் அறிந்துணர்த்தப்படும் குறிமுறையாகவும் இலக்கியச் சான்றுகள் தெரிவிக்கின்றன. இதன் வளர்ச்சி நிலையினைத் தமிழிலக்கிய வகைகளுள் ஒன்றான குறவஞ்சியில் குறத்தி குறிசொல்லுதல் என்ற பகுதியால் காணலாம். இக்கட்டுவிச்சியைக் குறுந்தொகை,

"அகவன் மகளே அகவன் மகளே
மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே பாடுகபாட்டே"[55]

என்பதால் அகவன் மகளிர் என்றும் அகநானூறு கட்டுவிச்சியை,

"நெடுவேட் பேணத் தணிகுவள் இவளென
முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூறக்
களம் நன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்து
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த உடுகெழு நடுநாள்"[56]

என்பதால் முதுவாய் பெண்டிர் எனவும், நற்றிணை கட்டுவிச்சியை,

"நன்னுதற் பரந்த பசலைகண் டன்னை
செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇக்
கட்டிற் கேட்கு மாயின்"[57]

என்பதால் செம்முது பெண்டிர் எனவும், குறிஞ்சிப்பாட்டு கட்டுவிச்சியை,

"அன்னாய் வாழிவேண் டன்னை யொன்னுதல்
ஒலிமென் கூந்தலென் தோழி மேனி

விறலிழை நெகிழ்த்த வீவருங் கடுநோய்

அகலு ளாங்க ணறியுநர் வினாயும்''[58]

என்பதால் அறியுநர் என்றும் குறிக்கின்றன. கட்டுபார்ப்பதற்குரிய பொருளாக பிரப்பரிசி பயன்பட்டமையை,

"...................... முதுவாய்

பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ

முருக னாரணங் கென்றலின்''[59]

என்று அகநானூற்றுப்பாடலும் தெரிவிக்கின்றன.

## கழங்குபார்த்தல்

கழற்சி வித்துக்களைக் கொண்டு பெண்கள் ஆடும் விளையாட்டு கழங்காடல் எனப்படும் இதனை,

"வளங்கெழு திருநகர்ப்பந்து சிறி தெரியினும்

இளந்துணை யாயமொடுகழங்குட னாடினும்''[60]

என்கிறது அகநானூறு. கழங்குக்குறி என்பது கட்டுக்குறியைப் போன்று வேலன் கழற்சிக் காய்கள் மூலம் குறியறிந்துணர்த்துவதாகும். இதனை வேலன் மட்டுமே நிகழ்த்தியதாக தெரிகின்றது.

களவுக் காலத்தில் தலைவியின் மாறுபாட்டிற்குரிய காரணத்தை அறியுமுகத்தான்

"பெய்ம்மணல் வரைப்பிற் கழங்குபடுத் தன்னைக்கு

முருகென மொழியும் வேலன் மற்றவள்

வாழிய விலங்கு மருவிச்

சூர்மலை நாடனை யறியா தோனே''[61]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலில் விளங்குகின்றது.

உடன் போக்கின் கண் நற்றாய் தன் மகளைத் தலைவன் தன்மனைக்குக் கொண்டுய்ப்பானோ அல்லது அவனது மனைக்குக் கொண்டுய்க்குமோ என்பதனை அறிவதற்காக கட்டுப்பார்த்தலை,

"ஆருவ தறியு முதுவாய் வேல
கூறுக மாதோநின் கழங்கின் திட்பம்
மாறா வரும்பனி கலுழுங் கங்குலில்
ஆனாது துயருமெங் கண்ணினது படீஇயர்
எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே"[62]

என்னும் அகநானூற்றுப் பாடல் தெளிவுபடுத்திக்காட்டுகிறது.

கழங்குக்குறி பற்றி நற்றிணைக்கு உரை எழுதிய பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், "கழங்கு – கழற்சி வித்துப் பலவற்றை முருகன் முன் போட்டு வேலன் தன் தலையில் ஆடை சூடிக் கையிற் பல தலைகளிற் சிறுபைகளைக் கட்டிய கோலொன்றேந்தி அக்கோலாற் கழங்கு வித்துக்களை வாரியெடுப்புழிக் குறிப்புக் காணுகின்ற ஒருவகைக் குறி" என்று குறித்துள்ளார்.[63] ஐங்குறுநூற்றுக்கு உரை எழுதிய ஔவை துரைசாமிப்பிள்ளையவர்கள், தன் தலையில் ஆடைகட்டிய சிறிய பைகள் நாலவிட்ட பல கிளைகளை உடைய வளைந்த கொம்பொன்றில் கழங்கு காய்களை முருகன் முன் வைத்து அள்ளியெடுக்குங்கால் கண்டு கூறும் ஒருவகைக் குறி"[64] என்பர். இவ்விருவர் கூற்றிலும் செயல்முறை ஒன்றாக உரைக்கப்பட்டுள்ளதெனினும் முருகன் முன் வைத்து என்று கூற்றினுக்கு இலக்கியச் சான்று இருப்பதாக தெரியவில்லை.

## கட்டுப்பார்த்தல்

கட்டுவித்தியாய் குறக்குடி மகளிர் குறிசொல்லுதல் பண்டைய வழக்காகும். குறி கூறுவதால் குறமகள் குறி எயினி என்ற ஒரு பெண்பாற் புலவர் அழைக்கப்படுகின்றார். அவர் பாடிய ஒருபாடல் நற்றிணையில் அமைந்துள்ளது.[65]

முற்காலத்துக் குறக்குடிச் சிறுவர்களும் குறியிறுக்க வல்லராயிருந்த தென்பது "குறமகளீன்ற குறியிறைப் புதல்வரோடு"[66] என்ற குறுந்தொகைப் பாடற்பகுதியால் விளக்கும்.

சேரியின் முதுபெண்டிரான குறிசொல்லு மாதரை மனையகத்துக் கொணர்ந்து வைத்து முறத்திலே பிடி நெல்லையிட்டு எதிரே தலைமகளை நிறுத்தித் தெய்வத்துக்குப் பிரப்பிட்டு வழிபாடு செய்து அந்நெல்லை நந்நான்காக எண்ணி எஞ்சியவை ஒன்றிரண்டு மூன்றளவும், முருகணங்கெனவும், நான்காயின் பிறிதொரு நோயெனவுங் கூறப்படுகிறது. முருகணங்கென்று கூறின் உடனே வேலனை அழைத்து வெறிக்களத்திருத்தி முருக வேளுக்குச் சிறப்பெடுத்து ஆண்டுக்கழங்குக்குறி பார்ப்பர்.

## வெறியாடல்

வெறியாட்டு என்பது பழந்தமிழரின் தனித்த வழிபாடாகும். வழிபாடு செய்பவர்களின் வாயிலாக இறைவன் வெளிப்படுவான் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றிய இவ்வழிபாட்டுமுறை வெறி எனவும் வெறியார்தல் எனவும் இலக்கியங்களில் சுட்டப்படும். மருந்தாலும் பிறவற்றாலும் நீங்காத நோய் வெறியாட்டால் நீங்குமென்று நம்பிக்கைக் கொண்டு வெறியயர்தலே வெறியாட்டு எனப்படும். காதல் வயப்பட்ட பெண்டிரின் உடல் நலம் குன்றிய வழி அதனை நிறைவு செய்யும் பொருட்டுச் செய்யப்படும் ஒரு வழிப்பாட்டுச் சடங்கு முறையாகவே காட்சி தருகின்றது. இவ்வழிபாட்டுமுறை மலை வாழ்வோராகிய குறிஞ்சி நில மக்களுக்குரிய வழிபாட்டு முறையாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. வெறியாட்டு பெரும்பான்மை முருக பூசனை செய்யும் வேலனும் சிறுபான்மை தேவராட்டி எனும் குறமகளும் கூத்தாகும். இதனை வேலனாடல் எனவும் குறிப்பர்.

ஐங்குறுநூற்றில் குறிஞ்சித்திணையில் கபிலர் பாடிய வெறிப்பத்து எனும் உட்பிரிவு வெறியாடலின் வளர்ச்சியைக் காட்டுகின்றது. வெறிப்பொருளாக வருகின்ற பத்துப்

பாடல்களைக் கொண்ட பகுதி வெறிபத்து என்று கூட்டப்பட்டுள்ளது. வெறி என்பது மணம் என்ற பொருளுடைய தமிழ்ச்சொல் என்பர்.

முருகனை வழிபடும் இடத்தில் நறுமணம் மிக்க பூவும், தளிரும் புகையும் மிக்கு எங்கும் இனிய மணம் வீசும். அவ்விடத்தை வெறிக்களம் என்று முன்னோர்வழங்கினர். அவ்விடத்துள் நிகழும் விழா வெறியயர்தல் எனும் பெயர் பெறுவதாயிற்று. வெறிகளத்தை வெறிமனை என்று கூறுவதனை,

"வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்"[67]

என்னும் நற்றிணைப்பாடலால் அறியலாம். ஆதலால் வெறி முருகவேள் வழிபாட்டுக்குப் பெயராகும் என்பது விளங்கும்.

"வெறியறி சிறப்பின் செவ்வாய் வேலன்"[68]

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம்.

இவ்விழாவினை எடுக்க நினைப்போர் முதற்கண் வேலனுக்குத் தம் கருத்தைத் தெரிவிப்பர். அவன் தக்க இடத்தைத் தேர்ந்தெடுத்து அதனை வெறிக்களமாக அமைப்பான். அக்களத்தின்கண் வேலை நடுவில் கொண்ட வெறிமனையில் புது மணல் பரப்பி செந்நெலின் வெண்பொரியும் பயன்படுத்தியமையைக் குறுந்தொகை பாடல் வழி அறியலாம்.[69]

பலவகையான பூக்களையும் பரப்பி அழகுப்படுத்துவான். பசுந்தழையும் கடம்பின் மலரும் கொண்டு பந்தல் அமைப்பான் என்பதனை, என்னும் அகநானூற்றுப் பாடலும் தெறிவுறுத்துகின்றது.[70] வெறியயர்வது பெரும்பாலும் வேலனாலேயே நிகழ்வதாகும். இளமையும் வனப்புமுடைய மகளிர் உடல்நலம் கெடுவராயின் அது நீங்குதல் பொருட்டு அவர்களுடைய செவிலித்தாயும் நற்றாயும் வேலனைக் கொண்டு வெறியயர்வது வழக்கம். மருந்தினால் நீங்காத நோய் இவ்வெறியயர்தல் மூலம் நீங்கும் என்பது அவர்களுடைய நம்பிக்கை.

தலைவியொருத்திக்கு உடல் நலம் குறைந்து அவருடைய தாயர் கட்டும் கழங்கும் பார்த்து அவள் நோயை அறிய விரும்புகின்றனர். வேலன் மூலமாக வெறியயர்தல் நிகழ்த்தி அந்நோயினைத் தீர்க்க முயற்சிக்கின்றனர். அவர்களுடைய ஏற்பாட்டின் படி வெறியயர் களத்தின் வேலன், முருகன் பெயரை வாழ்த்தித்தன் மேல் முருகன் வந்துற்றதாக ஆடுகின்றான். அவ்வேளை குறிஞ்சி நிலத்தில் உள்ள ஆடவரும், பெண்டிரும் முருகன் புகழைப்பாடி குரவைக் கூத்து ஆடுகின்றனர். வெறியாடும் வேலன் அத்தலைவிக்கு உண்டாகிய நோய் முருகனால் உண்டாயிற்ற என்று சொல்லி அந்நோய் தீர்க்க முருகனுக்குரிய பூக்களைக் கொடுத்து அத்தலைவியின் கூந்தலிலே முடிக்கச் செய்கின்றான். இதனை,

"மின்னுநிமிர்ந்தன்ன வேலன் வந்தெனப்
பின்றுவிடு முச்சி அளிப்பா னாதே"

என்ற நற்றிணைப் பாடற்பகுதியால் அறியலாம்.

இத்தகைய வெறியாடலைத் தலைவியின் காதலை வெளிப்படுத்துகின்ற ஓர் உத்தியாகக் கையாண்டனரோ என்று எண்ணத் தோன்றுகின்றது. ஐங்குறுநூற்றின் வெறிப்பத்து இத்தகைய எண்ணத்தைத் தோற்றுவிக்கின்றது. தலைமகளுக்கு ஏற்பட்ட நோயினைக்கண்டு இது எதனால் ஏற்பட்டது என்பதை அறிந்து கொள்ளச் செவிலி வேலனைக் கேட்கத் துணிகிறாள். அச்செவிலியின் காதில் விழும்படியாகத் தோழி தலைமகளுக்குச் சில செய்திகளைக் கூறுகின்றாள். நாம் எய்தியுள்ள துயரத்தை நம் அன்னை அறியமாட்டாள். வெறி அயர்தற்கு வேலனை தருவித்துள்ளாள் ஆயினும், அவ்வேலன் மணம் கமழுகின்ற மலை நாடனுக்கும் நமக்கும் உள்ள நட்பினை அறிவானோ அறியமாட்டான் என்றுரைக்கிறாள். இதனை,

நம்முறு துயரம் நோக்கி யன்னை

வேலற் றந்தன ளாயினவ் வேலன்

வெறிகமழ் நாடன் கேண்மை

அறியுமோ தில்ல செறியெயிற் றோயே"[72]

செவில், வெறியயர்ந்த பின்னரும் உண்மை தெரியாமல் வருந்தினாள். ஆகையினால் தோழி அவளிடம் தலைவியின் காதலை மறிவித்தல் வேண்டும் எனக் கூறுகின்றாள். இதனை

"அறியா மையின் வெறியென மயங்கி

அன்னையு மருந்துய ருழந்தன ளதனால்

எய்யாது விடுதலோ கொடிதே நிரையிதழ்

ஆய்மல ருண்கண் பசப்ப

சேய்மலை நாடன் செய்த நோயே"[73]

என்றப்பாடல் வழி அறியலாம்.

வெறியாடலின் நோக்கம் அது நிகழ்ந்த பின்னும் உண்மை தெளியாமை இறுதியில் தோழியே தலைவியின் காதலைக் கூறிவிடுதல் ஆகிய செய்திகளைக் கொண்டு நோக்குமிடத்து இவ்வெறியாட்டு தலைவியின் காதலை அறிந்து கொள்ள அமைக்கப்பட்ட ஓர் உத்தி என்பது புனலாகும்.

## கூடலிழைத்தல்

கூடலிழைத்தல் நிமித்தம் பார்க்கும் குறி என்று கூறுவர். 'தலைவன் பிரிந்த மகளிர் அவன் வரும் நிமித்தமறியத் தரையில் சுழிக்கும் குழிக்குறி' எனத் தமிழ்ப்பேரகராதி கூடலிழைத்தற்குப் பொருள் கூறுகின்றது.[74] சங்க இலக்கியங்களில் அகநானூற்றிலும் கலித்தொகையிலும் கூடலிழைத்தல் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

தலைவனைப் பிரிந்த தலைவி ஒவ்வொரு நாளும் வட்டங்கீறிப் பார்த்துத் தலைவன் பிரிந்த நாட்களை எண்ணி எண்ணி வருந்துவாள். அங்ஙனம் கீறிய வட்டங்களே தலைவன் பிரிந்த நாள்களின் எண்ணிக்கையை அறிவுறுத்துவனவாக அமையும். அவன் நினைவால் அன்பு மீதூர அவன் தோற்றுவித்த செய்குறி ஆகிய வட்டத்தைச் சுவரோத்தில் நின்று எண்ணும்போது அவள் சொரியும் துன்பக்கண்ணீர் அச்சுவரையும் நனைத்துவிடும் இச்செய்தியை,

"செய்குறி ஆழ்வைகறே றெண்ணி

எழுதுசுவர் நனைந்த அழுதுவார் மழைக்கண்"[75]

என அகநானூறும்

தலைவி தன் வீட்டினுள்ளே கூடலிழைத்துத் தலைவனைக் கூட முடியுமா? என ஆராய்கின்றாள். அக்கூடலில் ஒரு பாகத்தை இழைத்த அளவிலே அவ்வாராய்ச்சிக்குப் பிறிதொன்றாகிய வளைவு தன்னிடத்தின் முழுதும்கூடாத இளம்பிறையைக் காணுகின்றாள். அஃது, அவ்விசும்பிடத்தே பின்பு நிறைமதியாகி வருத்துமெனக் கூறுகின்றாள். இதனைக்,

"கோவொய்கூடாப் பிறையைப் பிறிதொன்று

நாடுவேன் கண்டனென் சிற்றிலும் கண்டாங்கே"[76]

என வரும் கலித்தொகை அடிகளில் கண்டு உணரமுடிகிறது. இங்ஙனம் தலைவனைப் பிரிந்த தலைவி அவர்தம் வருகையினை அறியப் பார்க்கும் நிமித்தக்குறியே கூடலிழைத்தல் என்பது புலனாகிறது.

# ஆய்வு முடிவுகள்

1. தொல்காப்பியர் வரையறுத்த கருப்பொருள் எட்டனுள் தெய்வம், விலங்கு, பறவை, மரம், என்பவற்றின் வழி நிமித்தங்கள் அகப்பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

2. பறவைகளால் வெளிப்படும் நிமித்தங்களான காக்கை கரைதல், காக்கை பலியுணவு உண்ணுதல், குயில் பயிற்றல், நாரை உயரப் பறத்தல் நன்னிமித்தங்களாகவும், ஆந்தை அலறுதல், தீ நிமித்தமாகவும் காட்டப்பட்டுள்ளன.

3. சூழ்நிலைக்கேற்பப் பல்லி சொல் நன்னிமித்தமாகவும், தீ நிமித்தமாகவும் கொள்ளப்பட்டமை பாடல்கள் வழி அறிய முடிகிறது.

4. உன்னம் தழைத்திருத்தல், வேங்கை பூத்து நிற்றல், மலர்கள் மலர்தல் ஆகியன நன்னிமித்தங்களாகவும், உன்னம் கரிந்து காட்டுதல், மரங்கள் வற்றித்தீப்பிடித்தல் ஆகியன தீ நிமித்தங்களாகவும் அமைந்தமையைப் பாடல்வழி அறியமுடிகிறது.

5. கட்டுப்பார்த்தலும் கழங்கு பார்த்தலும் நிமித்தங்களோடு தொடர்புடையனவேயாகும். தெய்வம் பற்றிய நிமித்தங்களுள் ஒன்றாக வேலன் வெறியாட்டினைக் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

# சான்றெண் விளக்கம்

1. குறுந்தொகை, பா–140; அடி 1–3
2. தொல்.பொருள். நூ–39; அடி 1–4
3. இ. சுந்தரமூர்த்தி, பழந்தமிழ் இலக்கியத்தில் நிமித்தங்கள்; ப–3
4. தொல்.பொருள். நூ–16
5. மேலது; நூ–88, அடி 16–17
6. மேலது; நூ–101
7. மேலது; நூ–88; அடி 16–17
8. Tamil Lexicen Vol-IV Part-I P-2254
9. தொல்.பொருள். நூ–576
10. சுசீலா கோபாலகிருஷ்ணன், சங்க இலக்கியத்தில் நிமித்தங்கள், ப–20
11. குறுந்தொகை, பா–218; அடி 3–4
12. அகநானூறு, பா–207; அடி 1–4
13. முல்லைப்பாட்டு, அடி–11
14. அகநானூறு, பா–136; அடி 1–8
15. மேலது, பா–141, அடி–3
16. நற்றிணை, பா–161, அடி 8–12
17. குறுந்தொகை, பா–20, அடி–6
18. ஐங்குறுநூறு, பா–391
19. நற்றிணை, பா–246, அடி 3–4
20. குறுந்தொகை, பா–260, அடி–1
21. குறுந்தொகை, பொ.வே.சோமசுந்தரனார் உரை, ப–385

22. முனைவர் க. காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் (மேற்கோள்) பக்,134–135

23. மேலது, ப–135

24. அகநானூறு, பா–122, அடி 13–14

25. நற்றிணை, பா–319, அடி, 4–6

26. அகநானூறு, பா–19, அடி, 2–5

27. பி.எஸ்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப–80

28. நற்றிணை, பா–246, அடி–2

29. மேலது, பா–333, அடி–11

30. அகநானூறு, பா–387, அடி–16

31. மேலது, பா–151, அடி–15

32. நற்றிணை, பா–164, அடி, 1–3

33. கலித்தொகை, பா–11, அடி, 19–21

34. நற்றிணை, பா–98, அடி, 1–7

35. அகநானூறு, பா–88, அடி, 1–4

36. நற்றிணை, பா–303, அடி, 3–4

37. அகநானூறு, பா–270, அடி–12

38. புறநானூறு மூலமும் பழைய உரையும், ப–11

39. தொல்.பொருள். நூ–63, அடி, 7–8

40. அகநானூறு, பா–25, அடி, 8–10

41. மேலது, பா–

42. பதிற்றுப்பத்து, பா–40, 61

43. அகநானூறு, பா–133, அடி, 3–4

44. மேலது, பா–232, அடி, 6–8
45. நற்றிணை, பா–373
46. கலித்தொகை, பா–38, அடி, 23–26
47. குறுந்தொகை, பா–260, அடி, 1–2
48. இ. சுந்தரமூர்த்தி, இலக்கியச் சுடர், ப–13
49. தொல்.பொருள். நூ–36
50. அகநானூறு, பா–195
51. தொல்.பொருள். நூ–113, அடி, 1–4
52. நற்றிணை, பா–285, அடி, 5–7
53. ஐங்குறுநூறு, பா–245, அடி, 1–5
54. க. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும் (மேற்கோள்) ப–212
55. குறுந்தொகை, பா–23, அடி, 1–3
56. அகநானூறு, பா–22, அடி, 6–11
57. நற்றிணை, பா–288, அடி, 5–7
58. குறிஞ்சிப்பாட்டு, அடி, 1–4
59. அகநானூறு, பா–98, அடி, 7–10
60. மேலது, பா–17, அடி, 1–2
61. ஐங்குறுநூறு, பா–249
62. அகநானூறு, பா–145, அடி, 14–19
63. நற்றிணை மூலமும் உரையும் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரை, ப–65
64. ஐங்குறுநூறு, மூலமும் உரையும், ஔவை துரைசாமிப்பிள்ளை உரை, ப–585
65. நற்றிணை, பா–357
66. குறுந்தொகை, பா–394, பா, 2–3

67. நற்றிணை, பா–34, அடி–9

68. தொல்.பொருள். நூ–63, அடி–1

69. குறுந்தொகை, பா–8, அடி, 3–4

70. அகநானூறு, பா–98

71. நற்றிணை, பா–51, அடி, 6–7

72. ஐங்குறுநூறு, பா–241

73. மேலது, பா–242

74. தமிழ்ப்பேரகராதி, தொகுதி–1, ப–1068

75. அகநானூறு, பா–351, அடி, 10–11

76. கலித்தொகை, பா–142, அடி, 24–25

# முடிவுரை

செந்தமிழ் இலக்கியங்களில் அமைந்த பொருளிலக்கணமும் அதனுள் இடம்பெறும் அகம், புறம் எனும் பாகுபாடும் தமிழுக்கே உரிய சிறப்பினவாகும். அகம்புறம் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. அவற்றுள் அகத்திணையைச் சங்கப் பாடல்கள் மிகுதியும் எடுத்துரைக்கின்றன.

தொல்காப்பியர் உலகில் காணும் காட்சிப் பொருள்களையும் கருத்துப்பொருள் களையும் முதல், கரு, உரி, பொருள் என மூவகைப்படுத்தியுள்ளார் முதற்பொருளும் கருப்பொருளும் பாடல்களில் பின்னணியாக அமைய உரிப்பொருள் சிறப்புறும்.

எண்வகை கருப்பொருள்களைப் பகுத்துக்கூறும் தொல்காப்பியர் அவ்வகை பிறவும் கருவென மொழிப என அக்கருப்பொருள் வளர்ச்சிப் பெறும் நிலையினையும் விளக்கி சென்றுள்ளார். இளம்பூரணர் நச்சினார்க்கினியர் எனும் உரையாசிரியர்கள் பூ, ஊர், நீர் ஆகியவற்றையும் பின்வந்த நம்பியகப்பொருள் ஆசிரியர் ஈரெழுவகைத்தே என தொகைப்படுத்தி உயர்ந்தோர், அல்லோர், பூ, ஊர், நீர், பண் ஆகியவற்றையும் கருப்பொருள் பட்டியலில் இணைத்துள்ளனர். இதனைக் காணும்போது கருப்பொருளின் கருத்து வளர்ச்சியை கூறாது எண்ணிக்கையை விரிவுபடுத்தியமை அறியமுடிகிறது.

ஐந்திணைப்பெயர்கள் பூக்களின் அடிப்படையில் அந்தந்த நிலங்களை உணர்த்தும் குறியீடுகளாக அமைந்து அவை அகத்திணைப்பெயர்களாகவும் அமைந்தன என்பது கொள்ளத்தக்கது. உரிப்பொருள் அடிப்படையில் அகத்திணைப்பாடலுக்குத் திணை வகுக்கப்பட்டுள்ளது.

சங்க காலத் தமிழர் வாழ்வுக்கும் இயற்கைக்கும் உள்ள உறவினைச் சங்கப்பாடல்கள் நமக்கு விளக்கியுரைக்கின்றன.

பண்டையத் தமிழ் மக்கள் இயற்கைக்கு ஏற்றவாறு தெய்வங்களை வழிபட்டனர். மாயோன், சேயோன், வேந்தன், வருணன் ஆகிய நிலத்தெய்வங்கள் முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நானிலங்களும் தெய்வங்களாக கூறப்பெற்றுள்ளன. பாலை நிலத்தெய்வம் கொற்றவையாக உள்ளது.

சங்க காலத்தில் நானில இயற்கைச் சூழலுக்கேற்பவும், தொழில்களுக்கு ஏற்பவும் மக்களின் உணவு வகைகள் அமைந்தன. மக்கள் தம் நிலங்களில் விளைந்தப் பொருள்களைப் பிற நிலத்தாரிடம் கொடுத்து பண்டமாற்று முறையில் பெற்ற பொருள்களையும் உணவுப் பொருளாகக் கொண்டனர்.

உள்ளுறை இறைச்சி என்ற இரண்டு உத்திகளும் வருணனையாக அமையாது சிறந்த கருத்துக்களையும் வாழ்வியல் உண்மைகளையும் உணர்த்துவதற்குப் பயன்பட்டன.

தொல்காப்பியர் கருப்பொருள் ஒன்றாகக் குறிப்பிடும் செய்தி எனும் சொல் தொழிலை உணர்த்தும். நிலத்திற்கேற்ப செய்யும் தொழில் அமைந்திருத்தலையும், மக்கள் செய்யும் தொழிலோடும் வாழ்வோடும் தொடர்புடையதாகப் பறை விளங்கியது.

யாழின் பகுதி என்று தொல்காப்பியர் சுட்டும் கருப்பொருளில் யாழ் என்பது நிலத்துக்குரிய பெரும்பண்ணையும் பகுதி என்பது அதன் கிளைப்பண்ணையும் உணர்த்தும் என்ற இளம்பூரனார் விளக்கம் கொள்ளத்தக்கது.

இசைக்கருவிகளாக தட்டை, தண்ணுமை, குழல், யாழ் எனும் கருவிகள் வழி இசையறிவு புலப்படுகிறது.

தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய், பரத்தமை, கண்டோர் ஆகியோர் கூற்றுகள் அகப்பாடல்களில் இடம்பெறும் நிலை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. தோழி வரைவு கடாவுதலும், அறத்தொடு நிற்றலும் தலைவியின் காமம் மிக்க கழிபடர்கிளவியும், சிறைப்புறக்கிளவியும் பாடல்களில் சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளன.

அகப்பாடல்களில் தெய்வம், விலங்கு, பறவை என்பவற்றின் வழி பெற்ற நிமித்தங்களை மக்கள் நம்பியமை தெரிகிறது.

நன்னிமித்தம், தீநிமித்தம் வழி, தமிழர்கள் மகிழ்ந்தும் வருந்தியும் இருந்தமை தெரிகிறது.

சங்கப் புலவர்கள் இயற்கையோடு இயைந்த உறவினைப் பாடல்வழி புலப்படுத்தி வாழ்க்கை விளக்கமாகக் கொண்டு வாழ்ந்த வாழ்வியல் பாங்கைக் கருப்பொருள் வருணனை வழி எடுத்துரைத்துள்ளனர்.

தெய்வ நம்பிக்கையும், உணவின் கூறுபாடுகளும், மலர்களின் மலர்ச்சியும் வாட்டமும், பறவைகளின் வரவும் செலவும், விலங்குகளின் கொடுமையும் அன்பும், செடி கொடிகளின் சுருக்கமும் பெருக்கமும் மனித வாழ்க்கை நிகழ்வுகளோடு நெருங்கியத் தொடர்புடையன என கருதப்பெற்றதைச் சங்க அகப்பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

சங்க அகப்பாடல்களில் கருப்பொருள்கள் என்னும் இவ்ஆய்வேடு

1. "அகப்பாடல்களில் உயிரினங்கள்"
2. "சங்கப் புலவர்கள் காட்டு இயற்கை இயல்"
3. "சங்க கால பறவை விலங்குகளும் இந்நாள் பறவைவிலங்குகளும்– ஒப்பீடு"

எனும் தலைப்புகளில் மேலாய்வு செய்வதற்குப் பரிந்துரை செய்கிறது.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை நூல்கள்


1. இராமையா பிள்ளை புலவர் .நா (உ.ஆ) – சங்க இலக்கியம்
நற்றிணை, (மூலமும் உரையும்)
வர்த்தமானன் பதிப்பகம்,
முதற்பதிப்பு – 1999

2. சாமிநாதையர் .உ.வே (ப.ஆ) – குறுந்தொகை
உ.வே.சா நூல்நிலையம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு – 1976

3. சோமசுந்தரனார் பொ.வே. (உ.ஆ) – ஐங்குறுநூறு
கழக வெளியீடு,
சென்னை.
மறுபதிப்பு – 1972

4. மாணிக்கனார் .அ – சங்க இலக்கியம்
ஐங்குறுநூறு மூலமும் உரையும்
(தொகுதி – 1, தொகுதி – 2)
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு – 1999

5. மாணிக்கனார் .புலவர் .அ (உ.ஆ) – சங்க இலக்கியம், கலித்தொகை
(தொகுதி – 1, தொகுதி – 2)
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு – 1999.

6. நச்சினார்க்கினியர் (உ.ஆ) – கலித்தொகை, மூலமும் உரையும்
கழக வெளியீடு,
சென்னை.
ஏழாம் பதிப்பு – 1967

7. மாணிக்கனார் புலவர் அ (உ.ஆ) – அகநானூறு (களிற்றியானைநிரை, மணிமிடைப்பவளம், நித்திலக் கோவை)
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1999

8. பிரேமா முனைவர் இரா – சங்க இலக்கியம் குறுந்தொகை மூலமும் உரையும்
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1999

9. வேங்கடசாமி ந.மு (உ.ஆ) – அகநானூறு (மணிமிடைப்பவளம்)
கழக வெளியீடு,
சென்னை, பதிப்பு – 1944

10. வேங்கடசாமி ந.மு (உ.ஆ) – அகநானூறு (களிற்றியானைநிரை)
கழக வெளியீடு,
சென்னை, பதிப்பு – 1943

11. வேங்கடசாமி ந.மு (உ.ஆ) – அகநானூறு (நித்திலக்கோவை)
கழக வெளியீடு,
சென்னை.

12. மாணிக்கனார் . புலவர் அ – சங்க இலக்கியம் மூலமும் உரையும் குறிஞ்சிப்பாட்டு
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1999

13. மாணிக்கனார் அ — சங்க இலக்கியம் மூலமும் உரையும்
முல்லைப்பாட்டு
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு – 1999

14. மாணிக்கனார் அ — பத்துப்பாட்டு மூலமும் உரையும்
பட்டினப்பாலை
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை, முதற்பதிப்பு – 1999

## துணைமை ஆதாரங்கள்

1. அடியார்க்கு நல்லார் (உ.ஆ) — சிலப்பதிகாரம்
உ.வே.சா. நூல்நிலையம்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு – 1978

2. அருணாசலம் மு — தொல்காப்பியம் அகத்திணையியல் உரைவளம்
மதுரைக்காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

3. அறவாணன், க.ப. — அற்றைநாட் காதலும் வீரமும்
பாரி நிலையம், சென்னை.
பதிப்பு – 1978

4. இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் — பத்துப்பாட்டு (சிறுபாணாற்றுப்படை)
எஸ்.ராஜம் பதிப்பு, சென்னை,
பதிப்பு – 1957

5. இராசமாணிக்கனார் மா — பத்துப்பாட்டு ஆராய்ச்சி
சென்னைப் பல்கலைக்கழகம்,
முதற்பதிப்பு – 1970

6. இராசமாணிக்கனார் .மா – தமிழ்மொழி இலக்கிய வரலாறு (சங்ககாலம்)
பாரி நிலையம், சென்னை,
நான்காம் பதிப்பு – 1976

7. இராமசாமிபிள்ளை – தொல்காப்பியச் சிந்தனை
அண்ணாமலைப்பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
முதற்பதிப்பு – 1978.

8. இலக்குவனார் .சி – இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல்
வள்ளுவர் பதிப்பகம்,
புதுக்கோட்டை,
மூன்றாம் பதிப்பு – 1972

9. இளங்கோவடிகள் – சிலப்பதிகாரம் (அடியார்க்கு நல்லார் உரை)
உ.வே.சா. நூல் நிலையம்,
சென்னை, பதிப்பு – 1978.

10. இளம்பூரணர் (உ.ஆ) – தொல்காப்பியம் (பொருளதிகாரம்)
கழக வெளியீடு, சென்னை
மறுபதிப்பு – 1963.

11. கந்தசாமி .தா (உ.ஆ) – சூடாமணி நிகண்டு மூலமும் உரையும்
முதலியார் பதிப்பு, சென்னை,
பதிப்பு – 1931.

12. கல்யாணசுந்தரனார் .திரு.வி – முருகன் அல்லது அழகு
பாரி நிலையம், சென்னை,
பதிப்பு – 1987.

13. காந்தி டாக்டர் .க – தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை,
முதற்பதிப்பு – 2003.

14. கார்த்திகேசு சிவத்தம்பி (டாக்டர்) – இலக்கணமும் சமூக உறவுகளும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
பிரைவேட் லிமிடெட், சென்னை,
முதற்பதிப்பு – 1982.

15. சஞ்சீவி .ந – சங்க இலக்கிய ஆராய்ச்சி
அட்டவணை
சென்னைப் பல்கலைக் கழகம்,
தமிழ்த்துறை வெளியீடு,
முதற்பதிப்பு – 1973.

16. சரளா ராசகோபாலன் – சங்க இலக்கியத்தில் தோழி
ஒளிப்பதிப்பகம், சென்னை, 1986.

17. சாமி .பி.எஸ் – இலக்கியத்தில் அறிவியல்
சேகர் பதிப்பகம், சென்னை,
பதிப்பு – 1981.

18. சாமிநாதையர் உ.வே – புறநானூறு
உ.வே.சா. நூல் நிலையம்,
சென்னை, ஏழாம் பதிப்பு – 1971.

19. சுந்தரமூர்த்தி .கு (ப.ஆ) – முத்துவீரியம்
சை.சி.நூ.பதிப்பு கழகம்,
சென்னை, பதிப்பு – 1972.

20. சுசீலா கோபாலகிருஷ்ணன் – சங்க இலக்கியத்தில் நிமித்தங்கள்
பாலாஜி பதிப்பகம், மதுரை,
முதற்பதிப்பு – 1987.

21. சுந்தரமூர்த்தி .கு (உ.ஆ) – தண்டியலங்காரம்
காசிமடத்துப் பதிப்பு,
திருப்பனந்தாள் – 1974.

22. சுந்தரமூர்த்தி .இ – இலக்கியச்சுடர்
அன்பு நூலகம், சென்னை,
பதிப்பு – 1977.

23. சுந்தரனார் .வி.பா.கா – சேறை அறவணார் இயற்றிய
பஞ்ச மரபு
கழக வெளியீடு, சென்னை,
பதிப்பு – 1993.

24. சுப்பிரமணிய ஐயர் .ஏ.வி – தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி
பாரி நிலையம், சென்னை, 1959.

25. சுப்புரெட்டியார் .ந – அகத்திணைக் கொள்கைகள்
பாரி நிலையம், சென்னை,
பதிப்பு – 1981.

26. சோமசுந்தரனார் (உ.ஆ) – பரிபாடல்
கழக வெளியீடு, சென்னை,
மறுபதிப்பு – 1975.

27. தண்டபாணி சுவாமிகள் – அறுவகை இலக்கணம்
சாந்தலிங்க இராமசாமி அடிகளார்,
தமிழ்க்கல்லூரி வெளியீடு,
பேரூர், முதற்பதிப்பு – 1978.

28. தனிநாயக அடிகளார் – தமிழ்த்தூது
பாரி நிலையம், சென்னை, 1962.

29. திருத்தக்கதேவர் – ஐம்பெருங்காப்பியங்கள்
(சீவகசிந்தாமணி)
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு – 1998.

30. துரைஅரங்கசாமி டாக்டர் மொ.அ. – சங்ககாலச் சிறப்புப் பெயர்கள்
பாரிநிலையம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1960

31. தேவநேயப்பாவாணர் – பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும்
கழக வெளியீடு, சென்னை,
மறுபதிப்பு – 1992.

32. நச்சினார்க்கினியர் (உ.ஆ) – தொல்காப்பியம் (பொருளதிகாரம்)
கழக வெளியீடு, சென்னை,
மறுபதிப்பு – 1963.

33. நச்சினார்க்கினியர் (உ.ஆ) – பத்துப்பாட்டு
உ.வே.சாமிநாதையர் (ப.ஆ),
உ.வே.சா.நூல் நிலையம்,
சென்னை, ஏழாம் பதிப்பு – 1974.

34. நமசிவாயம் .சே – தமிழர் உணவு
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை,
முதற்பதிப்பு – 1981.

35. நாற்கவிராச நம்பி – நம்பியகப்பொருள்
கழக வெளியீடு, சென்னை,
பதிப்பு – 1988.

36. நெடுஞ்செழியன் .முனைவர் .வே – தமிழர் கண்ட தாவரவியல்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை,
முதற்பதிப்பு – 2005.

37. பாலகிருட்டினன் .நா — தொல்காப்பியப் பொருளதிகார வழி நற்றிணை – ஓர் ஆய்வு
இளங்கோ பதிப்பகம்,
சென்னை, 1981.

38. பாலசுந்தரம் .ச (பாவலரேறு) — தமிழிலக்கண நுண்மைகள் (ஆய்வுக் கட்டுரைகள்)
தாமரை வெளியீட்டகம்,
தஞ்சாவூர், முதற்பதிப்பு – 2000.

39. மாணிக்கம் .வ.சுப — தமிழ்க்காதல்
பாரி நிலையம், சென்னை,
பதிப்பு – 1962.

40. முத்துக் கண்ணப்பன் .தி — சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம்
அதியத்தர் பதிப்பகம்,
சென்னை, 1978.

41. வரதராசன் .மு — பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை
பாரிநிலையம், சென்னை,
இரண்டாம் பதிப்பு – 1979.

42. வித்தியானந்தன் — தமிழர் சால்பு
பாரி புத்தகப் பண்ணை, சென்னை,
இரண்டாம் பதிப்பு – 1971.

43. வீரமாமுனிவர் — ஐந்திலக்கணத் தொன்னூல் விளக்கம்
கழக வெளியீடு, சென்னை,
பதிப்பு – 1984.

44. வெள்ளைவாரணர் .க — தமிழிலக்கிய வரலாறு – தொல்காப்பியம்
அண்ணாமலைப்பல்கலைக்கழகம்,
அண்ணாமலைநகர், 1978.

45. வேலுப்பிள்ளை .ஆ – தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்
பாரி புத்தகப் பண்ணை, சென்னை,
இரண்டாம் பதிப்பு – 1978.

46. ஜகந்நாதன் .கி.வா – தாமரைப்பொய்கை (சங்கநூற் காட்சிகள்)
அமுத நிலையம் லிமிடெட்,
சென்னை, 1952.

47. .......................... – தொல்காப்பியம் பொருளதிகாரம் (இளம்பூரணர் உரை)
கழக வெளியீடு, சென்னை,
மறுபதிப்பு – 1969.

48. .......................... – தொல்காப்பியம் பொருளதிகாரம் (நச்சினார்க்கினியர் உரை)
கழக வெளியீடு, சென்னை,
மறுபதிப்பு – 1963.

49. .......................... – தொல்காப்பியம் பொருளதிகாரம் (பேராசிரியர் உரை)
கழக வெளியீடு, சென்னை,
மறுபதிப்பு – 1972.

50. .......................... – தொல்காப்பியம் சொல்லதிகாரம் (சேனாவரையர் உரை)
கழக வெளியீடு, சென்னை,
மறுபதிப்பு – 1962.

51. .......................... – பரிபாடல் சொற்பொழிவுகள்
கழக வெளியீடு, சென்னை,
மறுபதிப்பு.

52. ........................... – குறுந்தொகைச் சொற்பொழிவுகள்
கழக வெளியீடு, சென்னை,
நான்காம் பதிப்பு – 1972.

53. ........................... – தமிழ் இலக்கியக் கொள்கை –
ஓர் அறிமுகம் (தொகுதி – 1)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை, 1975.

**ஆய்வுக்கோவை**

1. ........................... – இருபத்தொன்றாவது கருத்தரங்கு
ஆய்வுக் கோவை (தொகுதி – 1)
இந்தியப் பல்கலைக்கழகம்,
தமிழாசிரியர் மன்றம்,
அண்ணாமலை நகர், 1989.

**ஆய்வேடு**

1. கற்பகம். மா – அகநானூற்றில் கருப்பொருள்கள்
முனைவர் பட்ட ஆய்வேடு,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
1995

**ஆங்கில நூல்**

1. ........................... – **Tamil Lexicon Vol., VI Part-1**
University of Madras,
Madras, 1934